# சங்க இலக்கியங்கள் காட்டும் நிலையாமை - ஓர் ஆய்வு

முனைவர் பட்டத்திற்காக (**Ph.D.,**) பெரியார் பல்கலைக்கழகத்திற்கு

அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**மா. தனம்**

பதிவு எண் : PU/COE/RD4/Ph.D./1172/2014

பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வாளர்

அரசு கலைக்கல்லூரி,

தருமபுரி - 636705.

நெறியாளர்

**முனைவர் தோ.சி. தங்கபாண்டியன்,**

**எம்.ஏ., எம்.எட்., எம்.ஃ.பில்., பிஎச்.டி.,**

இணைப்பேராசிரியர் (ஓய்வு),

அரசு கலைக்கல்லூரி,

தருமபுரி - 636705.





**தமிழ்த்துறை,**

**அரசு கலைக்கல்லூரி.**

**தருமபுரி - 636 705.**

**நவம்பர் - 2019**

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் தோ.சி. தங்கபாண்டியன்,** எம்.ஏ., எம்.எட்., எம்.ஃ.பில்., பிஎச்.டி.,
தமிழ் இணைப்பேராசிரியர் (ஓய்வு),
தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி,
தருமபுரி - 636 705.

**"சங்க இலக்கியங்கள் காட்டும் நிலையாமை - ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் தருமபுரி, அரசு கலைக்கல்லூரி, தமிழ்த்துறையில் என் மேற்பார்வையில் பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வை **மா.தனம்,** என்பவர் செப்டம்பர் 2013 முதல் நவம்பர் 2019 வரை ஆய்வு செய்து ஆய்வேட்டை உருவாக்கினார். இவ்வாய்வேடு அவருடைய சொந்த முயற்சியால் உருவானது என்றும், இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்த முனைவர்பட்ட ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் சமர்பிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம் : தருமபுரி. நெறியாளர்

நாள் :

**(முனைவர் தோ.சி.தங்கபாண்டியன்)**

**துறைத்தலைவர்** **முதல்வர்**

# ஆய்வாளர் உறுதிமொழி

**மா. தனம்,**

பதிவு எண் : PU/COE/RD4/Ph.D./1172/2014,

பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வாளர்,

தமிழ்த்துறை,

அரசு கலைக்கல்லூரி,

தருமபுரி - 636 705.

**"சங்க இலக்கியங்கள் காட்டும் நிலையாமை - ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் அரசு கலைக்கல்லூரி, தருமபுரி, தமிழ்த்துறையில் **முனைவர் தோ.சி.தங்கபாண்டியன், எம்.ஏ., எம்.எட்., எம்.ஃ.பில்., பிஎச்.டி.,** அவர்கள் மேற்பார்வையில் செப்டம்பர் 2013 முதல் நவம்பர் 2019 வரை பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வை மேற்கொண்டு இவ்வாய்வேட்டினை உருவாக்கினேன். இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்குமுன் வேறு எந்த முனைவர்பட்ட ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்படவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம் : தருமபுரி. ஆய்வாளர்

நாள் :

# நன்றியுரை

**"சங்க இலக்கியங்கள் காட்டும் நிலையாமை - ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் தருமபுரி, அரசு கலைக்கல்லூரி, தமிழ்த்துறையில் பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வை மேற்கொள்ள அனுமதி அளித்த பெரியார் பல்கலைக்கழக **துணைவேந்தர், பதிவாளர், தேர்வுக்கட்டுப்பாட்டு அலுவலர்** ஆகியோருக்கு நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

அரசு கலைக்கல்லூரி, தருமபுரி தமிழ்த்துறையில் பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வை மேற்கொள்ள அனுமதி அளித்த கல்லூரி முன்னாள் முதல்வர் அவர்களுக்கும், தற்போதைய கல்லூரி பொறுப்பு முதல்வர் **முனைவர் ஜா. பாக்கியமணி, எம்.எஸ்ஸி., எம்.ஃ.பில்., எம்.சி.ஏ., பிஎச்.டி.,** அவர்களுக்கும், முன்னாள் தமிழ்த்துறைத்தலைவர் **முனைவர் கோ.கண்ணன், எம்.ஏ., பி.எட்., பிஎச்.டி.,** அவர்களுக்கும், தற்போதைய தமிழ்த்துறைத்தலைவர் & இணைப்பேராசிரியர் **திரு. இரா.சங்கர், எம்.ஏ., எம்.ஃ.பில், பிஎச்.டி.,** ஆகியோருக்கும் என் நன்றியை உரிதாக்குகிறேன்.

என் ஆய்விற்கு வழிகாட்டியாகவும், நெறியாளராகவும் விளங்கி எனக்கு பல்வேறு வகையில் ஆலோசனைகளை வழங்கி, ஆய்வை நன்முறையில் செம்மையுறச் செய்த ஆய்வு நெறியாளர் **முனைவர் தோ.சி.தங்கபாண்டியன், எம்.ஏ., எம்.எட்., எம்.ஃ.பில்., பிஎச்.டி.,** தமிழ் இணைப்பேராசிரியர் (ஓய்வு), அவர்களுக்கு என் முதற்கண் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாய்வை மேற்கொள்ளும்போது எனக்கு அவ்வப்போது அறிவுரைகளை வழங்கிய **தமிழ்த்துறை பேராசிரியர்களுக்கும், கௌரவ விரிவுரையாளர்களுக்கும்**, என் நன்றியை நவில்கிறேன்.

இவ்வாய்வேடு உருவாக அவ்வப்போது நூல்களை வழங்கிய **பெரியார் பல்கலைக்கழக நூலகருக்கும், தருமபுரி மாவட்ட மைய நூலகருக்கும், தருமபுரி அரசு கலைக்கல்லூரி நூலகருக்கும், சென்னைப் பல்கலைக்கழக நூலகருக்கும், தஞ்சாவூர் பல்கலைக்கழக நூலகருக்கும், மதுரை காமராசர் பல்கலைக்கழக நூலகருக்கும், பாரதிதாசன் பல்கலைக்கழக நூலகருக்கும், பாரதியார் பல்கலைக்கழக நூலகருக்கும், மனோன்மணியம் பல்கலைக்கழக நூலகருக்கும், கேரள பல்கலைக்கழக நூலகருக்கும்** என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இம்மண்ணிற்கு அடையாளம்படுத்தி இவ்வுலகச் சூழலுக்கு ஏற்ப என்னை அறிமுகப்படுத்தி இவ்வுலகில் வாழ்வதற்கான அறிவையும், தகுதியையும் அளித்த என் தந்தை **திரு.மாணிக்கம்,** தாய் **திருமதி.மா.கந்தம்மாள்** அவர்களுக்கும், என் தோழிகளான **வ.ஜெயசித்ரா, திருமதி.சா.ஆண்டிச்சிஅம்மாள்** அவர்களுக்கும் என்னுடைய இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டினை செய்மையுற கணினி அச்சில் தட்டச்சி செய்து, வடிவமைத்துக் கொடுத்த **க.சின்னசாமி,** கண்ணன் ஜாப் ஒர்க் சென்டர், அரசு கலைக்கல்லூரி எதிரில், தருமபுரி-05 அவர்களுக்கும், ஆய்வேட்டை கட்டமைப்பு செய்து கொடுத்த **திரு. ராஜா,** அம்மன் பைண்டிங் ஒர்க்ஸ் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**(மா. தனம்)**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| இள.உ. | - | இளம்பூரணர் உரை |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| கு.எ. | - | குறள் எண் |
| நூ.எ. | - | நூற்பா எண் |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பா.எ. | - | பாடல் எண் |
| பா.வ. | - | பாடல் வரி |
| பொ.உ. | - | பொழிப்புரை |
| மே.கா.நூ. | - | மேலே காட்டிய நூல் |
| மேலது | - | மேற்கூறியது |
| P.No. | - | Page Number |

# பொருளடக்கம்




# Urkund Analysis Result

| | |
|---|---|
| Analysed Document: | M.Dhanam, Tamil.pdf (D58648091) |
| Submitted: | 11/11/2019 10:42:00 AM |
| Submitted By: | muruganchinnaraj@gmail.com |
| Significance: | 0 % |

## Sources included in the report:

3096e88d-95a7-4e27-804d-d14f2b202d31
e16c9a03-177e-4d4d-930b-9edd27e54e22
https://kongunadupublications.com/wp-content/uploads/2019/09/LFS-JUNE-2019-MERGED-FULL.pdf

## Instances where selected sources appear:

13



# PERIYAR UNIVERSITY, SALEM – 636 011

Date:

## DECLARATION BY THE CANDIDATE

I hereby declare that the thesis entitled **“SANGA ILAKKIYANGAL KAATTUM NILAYAMAI - OOR AAIVU”** submitted by me for the award of Ph.D., degree in **“Tamil”** is my original contribution and it is not plagiarized or copied from any other thesis/books/any other copy right materials.

**Signature of the Candidate**

## CERTIFICATE BY THE SUPERVISOR

I hereby declare that the candidate **M. DHANAM** has carried out the Ph.D., Programme under my supervision during the period **September 2013** to **November 2019** and the Thesis entitled **“SANGA ILAKKIYANGAL KAATTUM NILAYAMAI - OOR AAIVU”** submitted by her is verified and it is not plagiarized or copied from any other thesis/books/any other copy right materials.

**Signature of the Supervisor**

## CERTIFICATE BY THE LIBRARIAN

It is certified that the thesis entitled **“SANGA ILAKKIYANGAL KAATTUM NILAYAMAI - OOR AAIVU”** submitted by the candidate **M. DHANAM** under the supervision of **Dr. T.C. THANGAPANDIAN, M.A., M.Ed., M.Phil., Ph.D.,** Associate Professor of Tamil (Rtd.,) **Department of Tamil, Government Arts College,** Dharmapuri-5, is verified for plagiarism through the software’s and the thesis is within the permissible limits of plagiarism rules and the percentage of plagiarism of the thesis is found to be 0% (Zero Percentage).

**Signature of the Librarian**



# PERIYAR UNIVERSITY, SALEM – 636 011

---

Date:

## CERTIFICATE BY THE R & D COORDINATOR

I certified that the thesis entitled **"SANGA ILAKKIYANGAL KAATTUM NILAYAMAI - OOR AAIVU"** submitted by the candidate **M.DHANAM** Department of Tamil under the supervision of **Dr. T.C. THANGAPANDIAN, M.A., M.Ed., M.Phil., Ph.D.,** Associate Professor of Tamil (Rtd.,), Government Arts College, Dharmapuri-5, been verified against plagiarism through the software and the percentage of plagiarism is within the permissible limit.

**Signature of the R & D Coordinator.**

# Certificate of Genuineness of the Publication

---

This is to certify that Ph.D., Candidate ______________________________working under my supervision has published a research article in the SCI/SCI-E/SSU/UGC/Refereed list of journals named ____________________________________________with Vol.No._____ Page **No.** ________and year of publication ___________________________ published by _______________________________________________________The contents of the publication incorporate part of the results presented in his/her thesis.

**Research Supervisor**

Countersigned

Head of the Department

# முன்னுரை

தமிழ் இலக்கியங்கள் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் ஒவ்வொரு நோக்கத்தை வெளிப்படுத்துவனவாக அமைந்துள்ளன. பழங்காலத்தில் மக்கள் நெறியானமுறையில் போருக்குச் சென்று வீரத்தை வெளிப்படுத்தி விழுப்புண்பட்டு இறப்பது என்ற முறையில் வாழ்ந்தனர். அம்மக்கள் இறைவனை வணங்குவதைவிட இறைவனாகத் தன்னை ஆளும் அரசனை மதித்து, அவனிடம் முழுமையான நம்பிக்கை உடையவர்களாக வாழ்ந்தனர். அந்நிலையில் மக்களுக்கு நிலையாமை பற்றிய சிந்தனை ஓரளவே இருந்ததெனலாம். இந்நிலையாமைக் கோட்பாடுகளை சாம, பேத, தான, தண்டம் என்ற நான்கு வழிகளில் எவ்வழியிலாவது மக்களுக்கு எடுத்துரைத்தல் வேண்டும் என இலக்கியங்கள் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் பல்வேறு விதமான முறையில் தம்நோக்கங்களை வெளிப்படுத்தி வந்தமையை அறியலாம்.

தொல்காப்பியர் காலம் முதல் இக்காலம் வரையுள்ள இலக்கியங்களில் காஞ்சித்திணை கூறுகள் ஆங்காங்கே பரவலாக இருக்கின்றன. நிலையாமை குறித்த செய்திகள் மக்கள் மனதில் என்றும் நிலைத்த ஒன்றாக உள்ளது. உள்ளவொன்றே வெளிப்படும் என்பதற்கேற்ப மறைந்து கிடக்கும் அவ்வுள்ளொளி இலக்கியப் படைப்பாளர்களின் உள்ளத்தில் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் அவர் தம் கவிதைகளில் வெளிப்படுவதை அறியமுடிகிறது.

மனிதனுடைய உறுப்புகளில் ஏதேனும் ஒன்று பழுதுபட்டால் அவற்றை நீக்கி மற்ற உறுப்புக்களைக் காக்க இயலும். மனம் பழுதுபட்டால் மனிதனுடைய அனைத்து உறுப்புக்களும் தன்னிலை மாறித் துன்பமடையும். இவ்வுலகின் இயக்கமே மாறியது போன்ற உணர்வு அவனுக்கு ஏற்படும். இந்நிலை வராமல்

இருக்க ஒவ்வொருவர் உள்ளமும் நிலையாமை உணர்வைப் பெறவேண்டும். மனித மனம் சமநிலை எய்தி விடுமாயின் இன்பத்தினால் துள்ளலும், துன்பத்தினால் துவளுதலும் ஏற்படாது.

**"இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்**

**நண்பகல் அமையமும் இரவும் போல" - அகம்.327.**

என்ற அடிகள் சிந்திக்கத்தக்கன. மனிதன் உழைப்பால் களைப்படைந்து உறக்கம் கொள்கிறான். மீண்டும் விழிக்கிறான். இது இயல்பானதொன்றாகும். இதைக் கண்ட மனிதன் மரணமும் அத்தகையதே என உணர்ந்து வாழ்க்கையைப் பயனுடையதாக்கிக்கொள்ள முயலவேண்டும். அப்பொழுது மரணம் இயற்கையெனவும், அதிலிருந்து மீளுதல் இயலாதெனவும் அறிந்து மனிதன் மரணத்தைக் கண்டு அஞ்சமாட்டான்.

**'சாக்காடு பேரின்பம்' - பாரதிதாசன், குடும்பவிளக்கு, ப.எண்.75.**

என்ற கவிதை அடி இதனை மேலும் உறுதியாக்கும். மனிதன் பிறப்பினைப் பிணியென உணரின் பிறவி நீங்கி வாழமுயன்று அதன் பயனாக வீடுபேறு என்னும் உயர்ந்த பேற்றைப் பெறுவான்.

இறைவனடி சார்ந்த இறையருள் பெற்றுப் பிறவாநிலை எய்துவான். இதை உணர்த்தவே காதலும், வீரமும் பெரிதென பேசப்பட்ட சங்க காலத்தில் புலவர்கள் தமிழ் மக்களுக்கு நிலையாமை உணர்த்தும் போக்கில் பாடல்கள் பாடியுள்ளனர். அப்பாடல்களை வெளிப்படுத்தி ஆய்வு மேற்கொள்ளவேண்டுமென்ற எண்ணத்தில் **"சங்க இலக்கியங்கள் காட்டும் நிலையாமை - ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் ஆய்வு நிகழ்த்தப்பெற்றுள்ளது.

## ஆய்வின் நோக்கம்

**"சங்க இலக்கியங்கள் காட்டும் நிலையாமை - ஓர் ஆய்வு"** என்பதே அய்வுத் தலைப்பாகும். தமிழர்களின் நிலையாமைக் கோட்பாடுகள் அரும்பாகி இருந்த சங்க கால பாடல்களால் இளமை, யாக்கை, செல்வம், உலகம் இவை நிலையற்றவை என்று உணர்த்தி, போரில் வீரமரணம் அடைந்து புகழ் பெறுவதே சிறந்தது. அதாவது, நிலையில்லாதவைகளைக் கொண்டு நிலைத்ததைத் தேடிக்கொள்வது சிறந்தது என உணர்த்துவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு எல்லை

பழமையும், தொன்மையும் வாய்ந்த சங்ககால இலக்கியங்களான எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் ஆய்விற்கு எல்லையாக எடுத்துக்கொள்ளப்பட்டன. அடுத்தடுத்து ஏற்பட்ட மரபு மாற்றத்திற்கு ஏற்றவாறு மாறுதல்கள் செய்து எழுதப்பட்ட இலக்கண, இலக்கியங்களின் ஏற்புடைய தரவுகளும் சான்றாதாரமாகக் காட்டப்பட்டுள்ளன.

## ஆய்வின் கருதுகோள்

இளமை, யாக்கை, செல்வம், உலகம் என்ற நிலையாமையை உணர்வதால் ஆணையும் பெண்ணையும் அழகுப்பொருளாக பார்க்கும் நோக்கம்மாறி, ஆணும் பெண்ணும் சமமென எண்ணுவதும், பிறப்பின் நிலை உணர்ந்து முதுமை வருவதற்கு முன்பே கடமைகளை செய்து முடிப்பதும், ஈகை, கொடை, தருமம், தானம் இவை நாட்டில் மலிந்து இல்லையென்பதே இல்லையென்றாகி விடுவதும், நிலையாமையில் நிலைத்த புகழ், வீடுபேறு அடைந்து ஆத்மா அமைதி பெறும் நிலையை விளங்குவதை, நோக்கமாகக் கொண்டு நிகழ்த்தப்பெற்றுள்ள இவ்வாய்வின் கருதுகோளாக நிலையாமைக் கோட்பாடுகள் விளக்கப்பெற்றுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

சங்க இலக்கியத்தில் நிலையாமையை எடுத்துரைக்க விளக்கமுறை ஆய்வும் (Descriptive Research), நூலில் உள்ள கருத்துக்களை வகைப்படுத்தி விளக்க பகுப்பாய்வுமுறை ஆய்வும் (Analytical Method), பிற இலக்கியக் கருத்துக்களை ஒப்பிட்டு உரைக்க ஒப்பீட்டுமுறை ஆய்வும் (Comparative Method) இந்த ஆய்வில் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வு ஆதாரங்கள்

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் முதன்மைச் சான்றாதார நூல்களாகக்கொள்ளப்படும். **"சங்க இலக்கியங்கள் காட்டும் நிலையாமை - ஓர் ஆய்வு"** என்னும் இவ்வாய்வுக்குத் துணையாகும் இலக்கணங்கள், இலக்கியங்கள், நிகண்டுகள், அகராதிகள், ஆய்வுக்கட்டுரைகள், காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள், தற்கால இலக்கியங்கள் வரை அனைத்தும் துணைமை ஆதாரங்களாக அமையும்.

## ஆய்வேட்டின் அமைப்பு

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்களாக ஐந்து இயல்களாக பகுக்கப்பட்டுள்ளது.

**"நிலையாமை விளக்கம்"** என்ற தலைப்பிலான முதல் இயலில் காஞ்சித் திணை பற்றிய கருத்துக்களைத் தமிழிலக்கியங்கள் அனைத்துக் காலங்களிலும் ஆங்காங்கே தம் பாடல்களினுடே வெளிப்படுத்தி வருகின்ற நிலை - இக்காஞ்சி பற்றி இலக்கணங்கள் - இலக்கியங்கள் - உரையாசிரியர்கள் - நிகண்டுகள் - அகராதிகள் - பல்துறைச் சான்றோர்கள் - மதக்கருத்துக்கள் - திறனாய்வாளர்கள்

ஆகியோர் தமக்குத் தோன்றிய சிந்தனைகளை ஆய்வுக்கட்டுரைகள், நூல்கள் ஆகியவற்றின் மூலமாக விளக்கப்பட்டுள்ளதை இவ்வியலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

**“இளமை நிலையாமை”** என்ற இரண்டாம் இயலில் இளமை - இளமை பருவம் - சங்க கால மக்கள் இளமையால் பெற்ற பயன் - இளமையின் முக்கியத்துவம் - நில்லாதது இளமை - தேடும் பொருளால் இன்பம் இல்லை - முதுமை நிலை - இளமையின் அருமை உணர்தல் - விரைந்தழியும் இளமை - இழந்தால் பெறமுடியாதது இளமை - அழியும் அழகு - இளமையின் இனிமை - தலைவனால் அழியும் அழகு - இளமையின் தன்மை - வீடுபேற்றிற்கான வழியை தேடுக என்பன இவ்வியலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

**“யாக்கை நிலையாமை”** என்ற மூன்றாம் இயலில் யாக்கை - யாக்கை பெயர்க்காரணம் - உடலுக்கும் உயிருக்கும் உள்ள உறவு - யாக்கையின் தன்மை - உறவு - யாக்கை இரண்டுக்கும் உள்ள தொடர்பு - யாக்கையால் பெறும் பயன் - யாருக்கும் யாக்கை நிலையானது அன்று - போற்றிக்காத்த உடலின் நிலை - புழுதியில் படும் யாக்கை - புறங்காட்டின் தன்மை - அறத்தால் பெறும் பயன் - ஆற்றுக அறம் - வீடுபேற்றை உணர்த்தும் நிலையாமை ஆகியவற்றின் மூலமாக இவ்வியலில் விரிவாக விளக்கப்பெற்றுள்ளன.

**“செல்வம் நிலையாமை”** என்ற நான்காம் இயலில் செல்வம் - செல்வம் என்பது எது - செல்வத்தால் வரும் சிறப்பு - நிலையில்லாத செல்வம் - செல்வம் இடம் மாறும் - விரைந்தழியும் செல்வம் - ஈகை - அறத்தின் மேன்மை - உண்பது நாழி! உடுப்பவை இரண்டே! - குழந்தைச் செல்வம் - கல்விச் செல்வம்

- பலருக்கும் உதவும் அறம் ஆகியவற்றின் மூலமாக இவ்வியலில் விரிவாக விளக்கப்பெற்றுள்ளன.

**“உலகம் நிலையாமை”** என்ற ஐந்தாம் இயலில் உலகம் - உயிர்களைத் தாங்கும் உலகம் நிலையற்றது - நிலையாமையும் ஊழியும் - பிரபஞ்ச உலகம் - பேராசை பெரும் துன்பம் - தோன்றி மறையும் உலகம் - அறத்தின் மேன்மை - நிலைத்த புகழுக்கு ஈதல் வேண்டும் - கால நிலையாமை - நிலையாமை உணர்ந்தவர்கள் - வாழ்வு நிலையாமை - புகழ் வரும் வழிகள் ஆகியன ஐந்தாவது இயலில் பகுக்கப்பட்டுள்ளன.

## முடிவுரை

ஒவ்வொரு இயல்களின் இறுதியிலும் ஆய்வியலின் தேர்ந்து தெளிந்த முடிவுகள் தொகுத்துரைக்கப் பெற்றுள்ளன. முழுமையாக ஐந்து இயல்களின் ஆய்வு முடிவுகள் ஆய்வேட்டின் இறுதியில் தொகுத்துரைக்கப்பெற்றுள்ளன.

## துணைநூற்பட்டியல்

ஆய்வுக்கு பயன்பட்ட நிலையாமை குறித்த மூலப்படைப்புகளும், நிலையாமை பற்றிய திறனாய்வு நூல்களும், ஆய்வேடுகளும் அகரவரிசையில் தொகுத்துத் துணைநூற்பட்டியலாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

## பின்னிணைப்பு

நிலையாமை குறித்து பாடிய சங்க கால புலவர்கள், சித்தர்களின் புகைப்படங்கள் பின்னிணைப்புகளாக கொடுக்கப்பட்டுள்ளன.

# இயல் - 1

# நிலையாமை விளக்கம்

## முன்னுரை

உலகப் பேரறிஞர்களால் பெரிதும் போற்றத்தக்கப் பண்பாடும், நாகரிகச் சிறப்பும் உடையது நம் தமிழ்மொழி. இம்மொழியில் தோன்றியப் பழமையும் பெருமையும் உடையதும், அனைவராலும் அனைத்துக் காலங்களிலும் பாராட்டப் பெறுவதுமான இலக்கியம் சங்க இலக்கியங்களாகும். இந்நூலில் உள்ள 'காஞ்சித்திணை' பற்றிய கருத்துக்களைத் தமிழிலக்கியங்கள் அனைத்துக் காலங்களிலும், ஆங்காங்கே தம் பாடல்களினூடே வெளிப்படுத்தி வருகின்றன. இக்காஞ்சி பற்றிய கருத்துக்களைத் தமிழ் இலக்கியங்கள், உரையாசிரியர்கள், நிகண்டுகள், அகராதிகள், பல்துறைச் சான்றோர்கள், மதத்தலைவர்கள், திறனாய்வாளர்கள் ஆகியோர் தமக்குத் தோன்றியச் சிந்தனைகளை ஆய்வுக்கட்டுரைகள், நூல்கள் ஆகியவற்றின் மூலம் வெளிப்படுத்தியுள்ளனர்.

தொல்காப்பியர் காலத்தில் 'காஞ்சி' என்ற சொல் 'நிலையாமை' என்ற பொருளில் வழங்கி வந்தது. சங்க காலம் முதல் காப்பிய கால இலக்கியங்கள் வரை 'காஞ்சி', 'நிலையாமை' என்ற இரண்டு சொற்களும், நிலையில்லாதது என்ற பொருள்பட வழங்கப்பட்டன. சிற்றிலக்கியங்கள் முதல் இக்கால இலக்கியங்கள் வரை 'நிலையாமை' என்ற சொல்லே பெரிதும் பயின்று வருகிறது. இந்நிலையாமைக் கோட்பாடு பற்றி இதுவரை தமிழுலகில் முழுமையான ஆய்வு செய்யப்பெறவில்லை. ஆதலால் இப்பொருள் பற்றி ஆய்வு செய்யவேண்டிய தேவை ஏற்படுகிறது.

ஒவ்வொருவரும் நிலையாமை பற்றிய கருத்துக்களைத் தம் வாழ்நாளில் ஒருசில நிமிடங்களிலேனும் எண்ணவேண்டிய கட்டத்தில் இருக்கின்றோம். எனவே உலகத்தின் நிலையின்மையைப் பட்டறிவின் மூலம் உணர்ந்து **“சங்க இலக்கியங்கள் காட்டும் நிலையாமை - ஓர் ஆய்வு”** என்ற ஆய்வுத் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளன.

## காஞ்சித் திணை

**“காஞ்சி தானே பெருந்திணைப் புறனே”[1]**

என்ற நூற்பாவின் மூலம் காஞ்சி என்னும் புறத்திணைப் பெருந்திணை என்னும் அகத்திணைக்குப் புறனாக அமைந்துள்ளதை அறியலாம். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய அகத்திணை ஐந்திற்கும் பொதுவாகவும், புறனாகவும் அமைவது பெருந்திணை. அதுபோல இக்காஞ்சித்திணையும் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை முதலான புறத்திணை ஐந்திற்கும் பொதுவாகவும், புறனாகவும் அமைந்துள்ளது.

பெருந்திணைக்கு நிலம், பொழுது என்ற வரையறை இல்லை. பெருந்திணை குறிப்பிடும்,

**“ஏறிய மடல்திறம்; இளமை தீர்திறம்**
**தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்**
**மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்**
**செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே”[2]**

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. அதுபோல, உலகியலை நோக்கக் காஞ்சி காட்டும் நிலையாமை உணர்வும் நற்பொருளாகக் கருதப்படுவதில்லை.

பெருந்திணையில் காதலுக்கு வரையறையில்லை. காஞ்சித்திணையிலும் வீரம் வரையறையைக் கடந்து செல்லும், பெருந்திணையில் காதலா்கள் தம்முள் ஒருவரையொருவா் வலிந்து வழிப்படுத்திக்கொள்வா். காஞ்சித்திணையில் புலவா்கள் அரசா்களுக்கு நிலையாமைக் கருத்துக்களைச் செவியறிவுறுத்தி நன்னெறிப்படுத்துவா்.

பெருந்திணைக்குரிய மணங்களான பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம் என்ற நான்கு வகை மணங்களையும், சான்றோா்கள் போற்றுவதில்லை. அதுபோல இளமை, யாக்கை, செல்வம், உலகம் ஆகியவற்றின் நிலையாமையை நன்குணா்ந்த சான்றோா்கள் இந்நான்கையும் இகழ்வா். இக்காரணங்களாலேயே தொல்காப்பியம் காஞ்சியென்னும் புறத்திணையைப் பெருந்திணையென்னும் அகத்திணைக்குப் புறனாக வைத்ததன் நோக்கமெனலாம்.

காஞ்சித்திணை பெருமைக்குரிய திணை; பலரும் பேறு பெறுவதற்கு வழிகாட்டும் திணை; சான்றோா்கள் போற்றும் நெறி என்பதனை,

**“மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமையும்”**[3]

என்ற தொல்காப்பிய அடிகளால் அறியலாம்.

## காஞ்சிக் குறிப்பு

காஞ்சி என்றவுடன் நிலையாமை என்ற பொருளில் இல்லறம் துறந்து, துறவறம் ஏற்றுக்கொள்ளுமாறு இலக்கியங்கள் வற்புறுத்தவில்லை. இல்லறத்தில் தலைவனும் தலைவியும் இன்பத்தைத் துய்த்து, எல்லா உயிர்களிடமும் அன்பு செலுத்தி, வாழ்க்கையை வளமுடன் நடத்தல் வேண்டும். அதே நேரத்தில் ‘தாமரையிலைத் தண்ணீா் போல’ நிலைபேறில்லாதப் பொருள்களின் மீது

பற்றுக்கொண்டு வாழாமல், இல்லறத்தில் கலந்துநின்று கடமைகளைச் செய்து இல்லறம் வழி வீடுபேறு அடைவதே சிறந்தது என்று நம்பியகப்பொருள்,

**“மக்களொடு மகிழ்ந்து மனையறங் காத்து**
**மிக்க காம வேட்கை தீர்ந்துழித்**
**தலைவனுந் தலைவியுந் தம்பதி நீங்கித்**
**தொலைவில் சுற்றமொடு துறவறங் காப்ப”[4]**

என்ற அடிகளால் இதனை உறுதிப்படுத்தலாம். மேலும், தொல்காப்பியர் காஞ்சித்திணையில்,

**“காமஞ் சான்ற கடைக்கோட் காலை**
**ஏமஞ்சான்ற மக்களொடு துவன்றி**
**அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்**
**சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே”[5]**

என்ற நூற்பாவால் அறிகிறோம்.

## காஞ்சி மரம்

“இம்மரம் ஆற்றங்கரையிலுள்ள பூவரசமாகும். ஆற்றங்கரைப் பூவரசை காஞ்சி என்பர். இம்மரம் குறுகிய அடிப்பாகம் உடையதாய் மெல்லிய வெள்ளிய கிளைகளை உடையதாய்ப் பயற்றம் பூங்கொத்தைக் கொண்டு மாலை கட்டினாற்போல இடையறாமல் பூப்பதாய் நிற்கும். இதன் பூ, இலை, தளிர்களை இளம் மகளிர் விரும்புவர்”[6] எனக் கூறுகிறார் சிவபாத சுந்தரனார் அவர்கள்.

காஞ்சி மரம் மருதநில மரமாகும். “ஆற்றங்கரையில் நின்ற பூவரசு எவ்வாறு அதன் அலைகளால் அலைப்புண்டு ஒருகால் வீழுமோ அவ்வாறே தம் காவல்

அரசும் வீழும் என்று எண்ணி இப்பூவரசைத் தம் நிலையாமைச் சின்னமாக்கி அதற்குக் காஞ்சி என்ற பெயரைச் சூட்டினார்"[7] என சிவபாத சுந்தரனார் காஞ்சிப் பூவினை நிலையாமைச் சின்னமாக்கியதன் காரணத்தையும் கூறுகிறார்.

## தாவர இயலார் கூறும் காஞ்சி

இலக்கியங்கள் கூறும் காஞ்சிப் பூவினைத் தாவர அறிஞர்கள் "காஞ்சி என்பதனை ஆற்றுப்பூவரசு"[8] என்றும், "காஞ்சி ஒரு குறுமரம் கொத்துக்கொத்தாகப் பூக்கும். இதன் நீலநிற மலர் அழகானது. இதன் தாவரப்பெயர் 'ட்ரீவியா நுடிபுளோரா' (Trewia Nudiflora Linn) என்றும், பூக்கும் இருவித்திலைத்தாவரம் என்றும், குறுமரம், நீர் நிலைகளுக்கு ஓரமாக வளரும் என்று கூறுகிறார்கள்".[9]

## உரையாசிரியர்கள் வழிக்காஞ்சி

காஞ்சித்திணை என்பது "பலநெறியாயினும் நில்லாத உலகத்தைப் பொருந்திய நெறியுடைத்து"[10] என்றும், "நிலைபெற்ற வீட்டினான் இவற்றின் நிலையாமையுணர்தலின் வீடு ஏதுவாயிற்று"[11] என்று சொற்களாலே இப்படி இருந்தது என்று விளக்கமுடியாத இன்பவீட்டைச் சொல்லாமல் சொல்லுமொரு நெறியையே காஞ்சித்திணை எனவும் கூறுவர் இளம்பூரணர்.

> **"வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமையைச் சான்றோர்**
>
> **சாற்றுங் குறிப்பினது காஞ்சியாயிற்று"**[12]

என்று நச்சினார்க்கினியர் உரை கூறுகின்றது.

## இலக்கணங்கள் வழிக்காஞ்சி

போரில் வெற்றி பெற்ற வீரர்கள் வாகைப்பூ அணிந்துகொள்வர். வெற்றியையே நோக்கமாகக் கொண்டு முனையும் வீரர்களால் நாட்டில் அமைதி குறைவு ஏற்படா வண்ணம் வெற்றி பெற்றவர்களுக்கு நிலையாமை உணர்வு ஊட்டக் காஞ்சித்திணையை வைத்தார் தொல்காப்பியர். அதனையுணர்த்தக் காஞ்சிப் பூவைச் சூடுவர். இதனை, 'காஞ்சிதானே பெருந்திணைப் புறனே' என்ற நூற்பாவால் அறியலாம்.

சான்றோர்களால் பாராட்டப்படும் புறத்திணை நூலான புறப்பொருள் வெண்பாமாலையில் காஞ்சித்திணை என்பதனை,

**"வெஞ்சின மாற்றான் விடுத்த வேந்தன்**

**காஞ்சி சூடிக் கடிமனை கருதின்று"**[13]

தன் நாட்டின்மேல் பகையரசன் படையெடுத்து வந்த காலத்தில் அந்நாட்டரசன் தன் படைவீரர்களோடு காஞ்சிப்பூவைச் சூடிக்கொண்டு செல்வான். பகையரசனைத் தன் நாட்டு எல்லைக்குள் புகாதவாறு வஞ்சிப்போருக்கு எதிராக காஞ்சிப்போர் நிகழ்த்தப்படும் நிகழ்ச்சிகளைக் கூறி, தொல்காப்பியர் காஞ்சித்திணை பற்றிக் கூறிய நிலையாமைக் கருத்துக்களை புறப்பொருள் வெண்பாமாலையும் சிறப்பிற் பொதுவியலில்,

**"முதுபா லையே சுரநடை யேனைத்**

**தபுதார நிலையே தாபத நிலையே**

**தலைப்பெய் நிலையே பூசல் மயக்கே**

**மாலை நிலையே மூதா னந்தம்**

**ஆனந் தம்பே ஆனந்தப் பையுள்**

**கையறு நிலையுளப் படப்பதி னொன்றும்**

**மையறு சிறப்பிற் பொதுவியற் பால"[14]**

என்று பதினொரு துறைகள் துணைக்கொண்டும், காஞ்சிப் பொதுவியலில்,

**"மூதுரை பொருந்திய முதுமொழிக்காஞ்சி**

**பெருங்காஞ் சிய்யே பொருள்மொழிக் காஞ்சி**

**புலவர் ஏத்தும் புத்தேள் நாட்டொடு**

**முதுகாஞ் சிய்யொடு காடுவாழ்த்து"[15]**

என்று ஆறு துறைகள் துணைக்கொண்டும் விளக்குகிறார். எனவே, புறப்பொருள் வெண்பாமாலையில் காஞ்சித்திணை சூடும் பூவால் குறியீடு பெற்றது எனலாம்.

## இலக்கியங்கள் வழி காஞ்சி

காஞ்சிமரத்தின் தன்மையினையும், அம்மரம் இருக்கின்ற இடங்களைப் பற்றியும் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

**"..............................................மென் சினைக்**

**காஞ்சி யூரன்................"[16]**

**"மணல்மலி பெருந்துறைத் ததைந்த காஞ்சியொடு**

**முருக்குத் தாழ்பு எழிலிய நெருப்பு உறழ் அடைகரை"[17]**

**"களன்அறு குப்பை காஞ்சிச் சேர்த்தி"[18]**

**"........................மிஞிறு ஆர்க்கும் காஞ்சியும்"[19]**

“விரிகாஞ்சித் தாதாடி இருங்குயில் விளிப்பவும்”[20]

“காஞ்சித்தாது உக்கன்ன தாதெரு மன்றத்து”[21]

“................................ காஞ்சிப்

பைந்தாது அணிந்த போதுமலி எக்கர்

வதுவை நாற்றம் புதுவது கஞல”[22]

“கோதை இணர, குறுங்கால், காஞ்சிப்

போதுஅவிழ் நறுந்தாது அணிந்த கூந்தல்”[23]

“காஞ்சி நிழல் குரவை அயரும்

தீம்பெரும் பொய்கைத் துறைகேழ் ஊரன்”[24]

“குறுங்கால் காஞ்சிக் கோதை மெல்இணர்ப்

பொன்தகை நுண்தாது உறைப்ப, தொக்குஉடன்

குப்பை வார்மணல் எக்கர்த் துஞ்சும்”[25]

“நீர்த்தாழ்ந்த குறுங்காஞ்சிப்

பூக்கதூஉம் இனவாளை”[26]

“காஞ்சிப் பணிமுறி ஆரம் கண்ணி..........”[27]

“தேங்கொள் மருதின் பூஞ்சினை முனையின்

காமரு காஞ்சித் துஞ்சும்”[28]

“முடக்காஞ்சிச் செம்மருதின்

மடக் கண்ண மயில் ஆல”[29]

**“நறும்பூங் கோதை தொடுத்த நாள்சினைக்**

**குறுங்கால் காஞ்சிக் கொம்பர் ஏறி”[30]**

**“காஞ்சி மணிக்குலைக் கள்கமழ் நெய்தல்”[31]**

இவ்வாறு சங்க இலக்கியங்கள் காஞ்சி என்பதை காஞ்சிமரம், காஞ்சிப்பூ என்ற பொருளில் வழங்கி வந்தது. பின்பு காஞ்சி என்பது நிலையாமை உணர்வு என்ற பொருளில் வழங்கப்பட்டது. இதனைப் பதிற்றுப்பத்து,

**“காஞ்சி சான்ற நெருப் பல செய்து”[32]**

**“காஞ்சி சான்ற வயவர் பெரும்!”[33]**

என்று கூறுகின்றது.

## அகராதிகள்

“நிலையாமை nilaiyamai n < நிலை[2] - + ஆ neg, 1. Instability, as of riches; transitoriness; ஸ்திரமாயிராமை (குறள், அதி.34). 2.Fickleness, Wavering, உறுதியின்மை (யாழ், அக)”[34] என்று சென்னைப் பல்கழைக்கழகத் தமிழ்ப்பேரகராதி நிலையாமை என்பதற்கு இவ்வாறு விளக்கம் தருகிறது.

இதனை மெய்யப்பன் தமிழ் அகராதி, “நிலையாமை-நிலைத்து நில்லாமை, உறுதியின்மை, உறுதியற்ற தன்மை, அழிந்துபடும் தன்மை”[35] என்கின்றது.

இதனை, நர்மதாவின் தமிழ் அகராதி, “நிலையாமை, நிலைத்த தன்மை இல்லாதது; Instability; transitoriness”[36] என்று கூறுகின்றது.

## தொல்காப்பியத்தில் நிலையாமை

முதன்முதலில் தொல்காப்பியத்தில் வம்பு என்ற சொல்லிற்கு நிலையாமை என்ற சொல் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**"வம்பு நிலையின்மை"[37]**

இதனை, நன்னூலார்,

**"முன்னோர் மொழிபொருளே அன்றி அவர்மொழியும்**

**பொன்னேபோல் போற்றுவம்"[38]**

எனும் நூற்பாவின் கருத்திற்கு ஏற்ப வம்பு என்ற சொல்லிற்குத் தொல்காப்பியரைப் போலவே நிலையாமை என்ற பொருளை அகராதிகள், நிகண்டுகள், சங்க இலக்கியங்கள் எவ்வாறு கூறுகின்றன என்பதனைப் பார்ப்போம்.

## நிகண்டுகள்

தமிழில் அகராதிகளுக்கு முன்பு சொற்களுக்குரிய பொருளை விளக்கியவை நிகண்டுகளாகும். இவற்றில் 'வம்பு', 'நிலையாமை' ஆகிய இரு சொற்களும் பதியவைக்கப்பட்டுள்ளன.

**"வம்பென் கிளவி நிலையின்மை யின் பெயர்"[39]**

என்று பிங்கல நிகண்டு கூறுகிறது. இதனை,

**"வம்பெனும் பெயரே மணமு மிடாவும்**

**நிலையின்மையு முலைக்கச்சும் புதுமையும்"[40]**

என்று வடமலை நிகண்டு வம்பு எனும் சொல்லுக்கு நிலையாமை என்ற சொல் மட்டுமல்லாது வாசனை. பானை, நிலையில்லாமை, முலைக்கச்சு, புதுமை என்ற சொல்லாக விளக்கம் தருகிறது. இதேபோன்று பிற நிகண்டுகளும் விளக்குகிறது.

**"வம்பென்ப புதுமை கச்சு மணம்நிலை யின்மை மேற்கோள்"[41]**

**"வம்பு புதுமையுங் கச்சு மணமும்**
**நிலையின்மையு மிடரு நிகழ்த்தலாகும்"[42]**

**"வம்புவார் மிடாவ டாச்சொல் நிலையின்மை**
**புதுமை வாசம்"[43]**

**"வம்புஎன்ப புதுமை கச்சு மணம் மிடா நிலையின்மைப் பேர்"[44]**

**"நிலையிலாமை வம்பு அற்காமை நிலையின்மையே"[45]**

தொல்காப்பியரைப் பின்பற்றி நிகண்டு நூல்கள் வம்பு என்ற சொல்லிற்கு நிலையாமை என்ற சொல்லோடு பிற சொற்களையும் கூறுகின்றது.

## இலக்கியத்தில் வம்பு எனும் சொல்

தொல்காப்பியர் கூறிய வம்பு என்ற சொல்லை இலக்கியங்கள் நேரடியாக கையாண்டுள்ளன. இதனை,

**"வம்புப் பெய்யுமால் மழையே"[46]**

**"வம்பு அணி உயர் கொடி அம்பர் சூழ்ந்த"[47]**

**"வாழை அம் சிலம்பின் வம்புபடக் குவைஇ"[48]**

**"ஆகத்து அரும்பிய சுணங்கும் வம்புவிட"[49]**

**"வம்பு அணி யானை வேந்து அகத்து உண்மையின்"[50]**

**"வம்பு பரந்த தேர்"[51]**

**"வம்புகளைவு அறியாச் சுற்றமோடு அம்புதெரிந்து"[52]**

**"வம்பின் முடிநவும்"[53]**

**"வம்பு விரி கொட்டிலொடு வண்திரை மயங்கி"[54]**

**"வம்பு விசித்து யாத்த செம்பொற் கச்சையர்"[55]**

என்று சங்க இலக்கியங்கள் மற்றும் காலந்தோறும் வளர்ச்சி பெற்று வந்த இலக்கியங்களிலும் 'வம்பு' என்ற சொல்லாட்சி நிலையாமை என்ற பொருளைக் கொடுக்காமல் வேறுபொருளைக் கொடுப்பதாக பயன்படுத்தப்பட்டுள்ளன.

## இன்றைய காலத்தில் வம்பு எனும் சொல்

இன்றைய காலத்தில் வம்பு என்னும் சொல் எந்த பொருளில் பயன்படுத்தப்படுகிறது என்பதனை செந்தமிழ்ச்சொற்பிறப்பியல் பேரகராதி, "வம்புமரம் - Vambu - maram பெ(n) குற்ற வாளிகளைக் கட்டி வைத்தடிக்கும் குறுக்கு மரவகை"[56] என்று கூறுகிறது. ஆனால், இதனை சென்னைப் பல்கலைக்கழக பேரகராதி,

**"அவளோடு வம்பு பண்ணினான்"[57]**

**"அவன் ஒருவரோடும் வம்புக்கு போகிறவன் இல்லை"[58]**

**"இது என்ன வம்பா போச்சி"[59]**

**"வம்பை விலைக்கொடுத்து வாங்காதே"[60]**

என்று இன்றைக்கு 'வம்பு' என்றால் 'வம்புச்சண்டை', 'வம்புப்பேச்சு' என்று பிரச்சனைக்கு உரிய சொல்லாக இருப்பதை பார்க்கிறோம். ஆனால் தொல்காப்பியர் 'வம்பு' என்ற சொல்லிற்கு 'நிலையாமை' என்று பொருள் கூறுகிறார். அவரைத் தொடர்ந்து அகராதிகள், நிகண்டுகள், இலக்கியங்களும் வம்பு என்ற சொல்லாட்சியை பயன்படுத்தியது என்பதை இதன் மூலம் அறியலாம்.

## நிலையாமை - கோட்பாடு

"உலகில் தோற்றம், வளர்ச்சி, அழிவு என்ற விதிக்குட்பட்ட உலகியல் பொருள்களும் வாழ்வும் அமைகின்றன. நொடிப்பொழுதுக்கூட இவ்வுலகில் ஏதும் நிலைத்திருப்பதில்லை என்ற உண்மையை உணர்ந்தும் உணராத அறிவிலிகளுக்கு உணர்த்தும் வகையில் அமைக்கப்பட்டதே நிலையாமை என்கின்ற கோட்பாடு".[61]

இந்நிலையாமைக் கோட்பாட்டினை மக்களுக்கு அறிவுறுத்தி நிலையான வாழ்வை இறைவனோடு கூடிய வாழ்வாகப் பெற்றுத்தர வேண்டும் என்ற நோக்கத்தோடு திருமந்திரம், திருக்குறள், நாலடியார் போன்ற நூல்கள் 'நிலையாமை' என்றத் தலைப்பில் தனி அதிகாரமே வகுக்கப்பட்டுள்ளன.

அக்காலத்தில் நிலையாமை கோட்பாட்டினை அரசர்களும், வீரர்களும், மக்களும் பெற்றிருந்தனர் என்று சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

## நிலையாமை பற்றி அறிஞர்கள் கூற்று

கிரேக்கர்கள் நிலையாமை என்பது "எப்பொருளும் நிராதாரமாய்த் தானேயாய்த் தோன்றுவதுமில்லை. அடியோடு அழிந்துபடுவதுமில்லை"[62] என்று இரா.கஸ்தூரி அவர்கள் 'தமிழ் இலக்கியங்களில் நிலையாமை' என்ற தன் ஆய்வில் கூறுகின்றார். மேலும், இதனை "அழிகின்ற பொருள்கள் எல்லாம் ஒரு காலத்துத் தோன்றுவனவே எது அழியாத பொருளோ அது ஒரு காலத்தும் தோன்றுவது இல்லை"[63] என்று த.ச.மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் கூறுவதாக குறிப்பிட்டுள்ளார்.

“எந்த பொருளும் அழியும் என்பதனை, ‘உலக அடிப்படைத் தத்துவமே, தோற்றம் உள்ள பொருள்களுக்கு மறைவும், மறைந்த பொருள்களுக்கு தோற்றமுகமாகவே இருக்கிறது”[64] என்கிறார் ஈசான சிவாச்சாரியார் அவர்கள்.

“பிரம்மத்தின் இரண்டு உருவங்களே உள்ளன. உருவமுடையது - உருவமற்றது. அழிவுடையது - அழிவில்லாதது”[65] என்கிறார் ராகுல்சிங் சாங்கிருத்யாயன் அவர்கள்.

“உருவம். துன்பம், பெயர், பண்பாடு, விஞ்ஞானம் இவை அனைத்தும் அழிந்துபோகக் கூடியவையாகும். இது மாறாத ஒரு விதியாகும்”[66] என்கிறார் புத்தர்.

“தோற்றம் உடையன எல்லாம் மறையும் தன்மை உடையன. அவ்வாறு மறையும் தன்மையினை நிலையாமை என்பர். நிலையில்லாத மாறும் தன்மையே நிலையாமை ஆகும்”[67] என்று கூறுகிறார் க.காந்தி அவர்கள்.

## மதமும் நிலையாமையும்

தமிழ் இலக்கிய வரலாற்றில் மதம் முக்கிய இடம்வகிக்கின்றன. மக்களைச் சீறிய வழியில் கொண்டுசெல்ல உதவும் மதமே சிறந்தமதமாகும். சிவபெருமானை முழுமுதற்கடவுளாய்க் கொண்டு வழிபடும் சமயம் சைவம் எனப்படும். எல்லா மதங்களும் அறநெறியுடனும், நல்லொழுக்கத்துடனும் மக்கள் வாழவேண்டுமென வற்புறுத்துகின்றன. இந்நெறியுணர நிலையாமை பற்றி அறியவேண்டுமென்கிறார் ஆதிசங்கரர் அவர்கள். இதனை,

“உலகம் ஒரு மாயை! மாயத் தோற்றமாக நம் கண்களுக்குப் புலப்படுகிறது. கண்ணாடியில் தெரிகின்ற தோற்றம்போல இவ்வுலகம் நமக்குத் தெரிகிறது”[68] என்கிறார்.

“சைவ சித்தாந்தம், சற்காரிய வாதத்தை அடிப்படையாகக் கொண்டது. அ.ஃ.தாவது இல்லது தோன்றாது உள்ளது அழியாது.... ‘தோன்றுதல்’ என்பதும் ‘அழிதல்’ என்பதும் அவற்றையுடைய பொருளின் நிலைமாற்றங்களே”[69] என்கிறார் ந. சுப்புரெட்டியார் அவர்கள்.

சைவ, வைணவ சமயங்களில் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களும் இறைவனது தொழில் என்ற நிலையில் பேசப்படுகிறது. இதனால் தோன்றிய பொருளின் அழிவு என்பது மாற்றமுடியாத ஒன்று என்று அறியமுடிகிறது. பொருளின் தன்மைநிலையில்லாதது என்பதனைப் பொருளின் இலக்கணம் என்ற தலைப்பில், “பல நிலைகளை (விகாரங்களை) அடைவதே பொருள் என்பது பொருளின் இலக்கணம் ஆகும்................ சுருங்குவது விரிவது முதலியனவே விகாரங்கள் எனப்படும்”[70] என்கிறார் அரங்க. சீனிவாசன்.

**“உன்னுடையது எதை இழந்தாய்**

**எதற்காக நீ வருந்துகிறாய்**

**எதை நீ கொண்டு வந்தாய் நீ இழப்பதற்கு**

**எதை நீ படைத்திருக்கிறாய் அது வீணாகுவதற்கு**

**எதை நீ எடுத்துக்கொண்டாயோ, அது இங்கிருந்தே எடுக்கப்பட்டது**

**எதை நீ கொடுத்தாயோ, அது இங்கிருந்தே கொடுக்கப்பட்டது**

**எது இன்று உன்னுடையதோ அது நாளை மற்றொருவருடையதாகிறது**

**மற்றொருநாள் அது வேறொருவருடையதாகும்”[71]**

இந்த மாற்றம் உலக நியதியாகும் என்று கீதையின் சாரமும் கூறுகிறது. இதனையே நிலையாமை எனப் பாமரரும், கற்றோரும் கூறுவர்.

பௌத்த மதத்தைத் தோற்றுவித்த புத்தர் பொருளின் நிலையற்ற தன்மையை, "எப்பொருளும்! அனிச்சம் (நிலையற்றது), துக்கம் (துன்பமுடையது), அனான்மா (ஆன்மா அற்றது) என்னும் மூன்று இயல்புகளைக் கொண்டது"[72] என்று கூறுகிறார். சமணமும் இதேக் கருத்தை வலியுறுத்துகிறது.

"ஸ்கந்தம் அல்லது கூட்டுப்பொருள் அழிவுத்தன்மையுடையது. ஒரு பொருளின் அழிவு என்பது ஒன்றுமே இல்லாமற் போவதைக் குறிக்காது. இன்னொரு பொருளாக மாறிவிட்டது என்பதே அதன் பொருள்.... ஒரு பொருளை வேறொன்றாக மாற்றலாமேயன்றி ஒன்றுமே இல்லாமல் அழிக்க இயலாது"[73] உலகம் அழியும் என்பதனை இஸ்லாம் உறுதியுடன் கூறுகிறது.

"உலகில் மனிதனின் அநீதியும் அட்டூழியங்களும் பெருகிவிட்டதனால் அவனையும் இதர ஜீவராசிகளையும் அழித்துவிடுவதென இறைவன் தீர்மானித்தான்"[74] என சாசர் டோடல் வாசகம் கூறுகிறது.

"சூரியனுக்கு கீழே செய்யப்படுகிற காரியங்களை யெல்லாம் கவனித்துப் பார்த்தேன். இதோ எல்லாம் மாயையும் மனத்துக்குத் சஞ்சலமுமாயிருக்கிறது"[75] என்ற விவிலியத்தின் கருத்தும்.

"இவ்வுலகில் உள்ள அனைத்துமே நிலையில்லாதது. நிச்சயம் மறுமை வந்தே தீரும். ஒவ்வோர் ஆத்மாவும் தன் செயலுக்குத் தக்க கூலியைப் பெறும். எனவே, வாழ்நாளில் நாம் செய்யும் அறமே நம்மை இறைவனடி சேர்க்கும்"[76]

என்ற திருக்குரானின் செய்தியும், “Heaven and Earth Shall Pass away” என்று கூறி உலக அழிவினை நிலைமாறும் தன்மையை உறுதியாக்குகிறது.

“‘காதற்ற ஊசியும் வாராதே காணும் கடை வழிக்கே’ என்ற பட்டினத்தாரின் இந்த வாசகமும் பாடலும் புதுச்சேரி கருவடிக்குப்பம் சுடுகாட்டில் உள்ள அரிச்சந்திரன் கோவிலில் கல்வெட்டாய் பதிக்கப்பட்டு உலக நிலையாமையை உணர்ந்து நடக்கவேண்டுகிறது.”[77]

## அறம்

வாழ்வியல் கூறுகளில் ஏனையவற்றை விடவும் அறத்திற்கு முதன்மை கொடுத்தனர் தமிழர்கள். அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நாற்பொருளில் அறத்திற்கு முதன்மை தருவதிலிருந்து அறத்தின் இன்றியமையாமை நன்கு புலனாகிறது. தமிழ் இலக்கியங்கள் பெரும்பாலும் அறத்தினை வலியுறுத்துவதாகவே அமைந்துள்ளன. சங்க இலக்கியத்தில் ‘அறத்தொடு நிற்றல்’ என்ற துறை அமைந்திருப்பதன் வாயிலாக இலக்கியங்களின் வழியாகவும் அறக்கருத்துக்களைப் பண்டைத்தமிழர் பறைசாற்றியுள்ளனர் என்பதை உணரமுடிகிறது.

“அறத்துக்கு அங்கம் எனப்படுவது அணிந்துரை, நிறுத்துதல், அறம் விளக்கம், ஐயப்படாமை, பழியை நீக்கல், மயக்கமின்மை, பேரன்புடைமை, விருப்பமின்மை, வெறுப்பின்மை ஆகிய எட்டும் அறத்தின் உறுப்புகளாகும்.”[78]

“அறம் என்பது அறிந்துகொள்ளமுடியாத தெய்வீகமான மறைப்பொருள் ஆகும்”[79] என்று கெல்சன் கூறுகிறார்.

“அறத்தின் வழிவருவதே இன்பம்… நன்மை, அறம் என்பதன் பொருளை ஓரளவுதான் உணர இயலுமே தவிர முழுமையாக அறிய இயலாது”[80] என்று அறத்திற்கு அரிஸ்டாட்டில் விளக்கம் தருகிறார்.

சங்க இலக்கியங்கள் அனைத்தும் ‘அறம்’ என்ற சொல்லை பயன்படுத்துகின்றன. இடைக்கால இலக்கியங்கள் பெரும்பாலும் ‘நீதி’ என்ற சொல்லை பயன்படுத்துகின்றன.

சொற்கள்தான் வேறுபட்டன. ஆனால் அது உணர்த்தும் பொருள் ஒன்றுதான் என்பதை, “அறத்தின் ஒரு கூறுதான் நீதி. அறம் பரந்த விரிந்த பொருளுடையது. வாழ்வுக்குப் பயன்தரும் பேராறுபோல இலக்கியங்களும் வாழ்வுக்குப் பயன்தரும் அறங்களையே வழங்கின. பின்னாளில் வடமொழிச் செல்வாக்கு வாழ்க்கை வேறு. நீதிவேறு என்றநிலையை உருவாக்கியது. அரசன் அரசை நடத்திச்செல்வதற்குச் சொல்லப்பட்ட கருத்துக்கள் பின்னாளில் நீதிகளாக வகுக்கப்பட்டது”.[81]

அனுராதா அவர்கள் தன் ஆய்வில் ‘அறம்’ என்பதற்கு ‘நல்ல செயல்களின் தொகுதி’ என்பது பொருள்; அறம்தான் மனித வாழ்வியலுக்கு உயர்வைக் கொடுத்து உதவுவதோடு வாழ்வில் நலத்தை நிலைநாட்டுகிறது; இலக்கியமாயினும் தனிப்பட்ட ஒருவரின் வாழ்க்கையாயினும் அனைத்தும் அறம் சார்ந்தே இயங்கவேண்டும் என்பதே விழுமிய குறிக்கோள் என்று கூறியுள்ளார்.

“இளங்கோவடிகள் தனது காப்பியமான சிலப்பதிகாரத்தில், ‘அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும்’ என்னும் உண்மையை வலியுறுத்துகின்றார். அறம் நல்ல செயலே என்னும் அறநெறியில் வாழ்ந்து தவறு செய்தால் அறமே தண்டிக்கும் இயல்பினதாகும்.”[82]

மணிமேகலை அறம் என்பதனை,

> **“அறமெனப் படுவது யாது எனக் கேட்பின்**
>
> **மறவாது இதுகேள்; மன்னுயிர்க் கெல்லாம்**
>
> **உண்டியும், உடையும், உறையுளும் அல்லது**
>
> **கண்டது இல் என”**[83]

என்ற இவ்வடிகளின் மூலம் அறம் என்பது எவை என்று தெள்ளத்தெளிவாக உணர்த்துகின்றது. ‘நிலையில்லாத மனிதப் பிறப்பின் மூலம் நிலையான புகழைப்பெற அறம் இயற்றுக’ என வலியுறுத்துகிறது.

1. யாக்கை - அறம்
2. செல்வம் - பொருள்
3. இளமை - இன்பம்
4. உலகம் - வீடு

என்று குறிப்பாக உணர்த்துகிறது. மனிதன் உடலைப் பெற்றவுடன் நிலையில்லாத உடலின் மூலம் நிலைத்த அறம் செய்து புகழ் என்ற வீடுபேற்றை பெறவேண்டும். எல்லாப் பொருள்களும் செல்வமாகவே கருதப்படும். செல்வத்தைப் பாடுபட்டுச் சேர்த்தாலும் தனக்கு என்றும் பயன்தரக்கூடிய புகழைத் தரும் அறத்தைச் செய்யவேண்டும். இன்பம் நிலையில்லாதது. நீர்க்குமிழி போன்றது. எனவே இன்பத்தை இளமையிலேயே துய்க்கவேண்டும். நோய்வாய்ப்படின் இளமை அழிந்து யாக்கை தளரநேரிடும் என்று எண்ணுதல் வேண்டும். எனவேதான் அறம், பொருள், இன்பம், வீடு என்பவை முறையே யாக்கை, செல்வம், இளமை, உலகம் இவைகளுக்கு நிரலாகக் கொண்டு பொருள் கொள்ளவேண்டும்.

சுருங்கக் கூறின் யாக்கை, இளமை, செல்வம், உலகம் இவை நிலையற்றவை. எனவே போரில் வீரமரணம் அடைந்து புகழ் பெறுவதே சிறந்தது. அதாவது, நிலையில்லாதவைகளைக் கொண்டு நிலைத்ததைத் தேடிக்கொள்வது சிறந்தது என உணர்த்துவதையே இலக்கியங்கள் நோக்கமாகக் கொண்டுள்ளது எனலாம்.

# தொகுப்புரை

- சங்க காலத்திலிருந்து இலக்கண, இலக்கியங்கள் ‘காஞ்சி’, ‘நிலையாமை’ என்ற சொற்களை எவ்வாறு பயன்படுத்தி வருகின்றன என்பது பற்றி விளக்கப்பட்டுள்ளது.
- காஞ்சித்திணை எவ்வாறு புறத்திணைக்கு புறனாக அமைந்துள்ளது என்பதற்கு காரணங்கள் விளக்கப்பட்டுள்ளது.
- காஞ்சித்திணை பெருமைக்குரிய திணை என்பது சான்றுகளுடன் ஆராயப்பட்டுள்ளது.
- காஞ்சித்திணையை மக்கள் எவ்வாறு தன் வாழ்க்கையில் கடைப்பிடித்து வாழவேண்டும் என்று இலக்கண, இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன என்பதும் சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளது.
- காஞ்சித்திணைக்கு காஞ்சிப்பூ ஏன் மலராக வைக்கப்பட்டது என்பதும் ஆராயப்பட்டது.
- நிலையாமைக்கு ‘காஞ்சி மரம்’ ஏன் வைக்கப்பட்டது அது எவ்வாறு இருக்கும் என்பதும் விளக்கப்பட்டுள்ளன.
- காஞ்சிப்பூவினை தாவரவியலார் எவ்வாறு அழைக்கின்றனர் என்பது ஆராயப்பட்டுள்ளது.
- இலக்கணங்களாலும் உரையாசிரியர்கள் உரையாலும் காஞ்சி என்ற சொல் ஆராயப்பட்டுள்ளது.
- காஞ்சிமரம் எவ்விடத்தில் எச்சூழலில் வளரும் என்பதை இலக்கியங்கள் வழி ஆராயப்பட்டுள்ளது.

- ❖ தொல்காப்பியம், அகராதிகள், நிகண்டுகள் வழி நிலையாமை ஆராயப்பட்டுள்ளன.
- ❖ இலக்கண இலக்கியங்கள் வழி வம்பு என்னும் சொல் நிலையாமை என்ற பொருளை குறித்ததையும், இன்றைக்கு வம்பு என்ற சொல் உணர்த்தும் பொருளும் விளக்கப்பட்டுள்ளன.
- ❖ நிலையாமை அறம் வலியுறுத்துவதால் இறுதியாக அறம், நீதி என்ற சொல்லும், அதனை இலக்கியங்கள் வலியுறுத்திய விதமும் விளக்கப்பட்டுள்ளன.
- ❖ நிலையாமை பற்றி அறிஞர்களும், மதங்களும், எவ்வாறு கருத்து தெரிவிக்கின்றன என்று விளக்கப்பட்டுள்ளன.

# இயல் - 1

## அடிக்குறிப்புகள்

1. தொல்காப்பியர், தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், நூ.எ.76.
2. தொல்காப்பியர், மே.கா.நூ., அகத்திணையியல், நூ.எ.54.
3. மேலது, நூ.எ.77.
4. நாற்கவிராச நம்பி, நம்பியகப்பொருள், அகத்திணையியல், நூ.எ.116.
5. தொல்காப்பியர், மே.கா.நூ., கற்பியல், நூ.எ.190.
6. நா.சிவபாதசுந்தரனார், புறப்பொருள் வெண்பாமாலை ஆராய்ச்சி, காஞ்சித்திணைக் கருத்துப் பொதுவிளக்கம், பக்.230-231.
7. மேலது, ப.231.
8. இரா.கஸ்தூரி, தமிழ் இலக்கியங்களில் நிலையாமை, தொகுதி-I, ப.13.
9. கு.சீனிவாசன், சங்க இலக்கியத் தாவரங்கள், காஞ்சி, ப.620.
10. தொல்காப்பியர், மே.கா.நூ., இளம்பூரணர் உரை, ப.127.
11. மேலது, ப.126.
12. தொல்காப்பியர், மே.கா.நூ., நச்சினார்க்கினியர் உரை, ப.405.
13. ஐயனாரிதனார், புறப்பொருள் வெண்பாமாலை, காஞ்சி, நூ.எ.1.
14. மேலது, நூ.எ.11.
15. மேலது, நூ.எ.12.
16. திரு.பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), குறுந்தொகை, பா.எ.10-3:4.
17. திரு.ஔவைசு.துரைசாமிப்பிள்ளை, பதிற்றுப்பத்து, மூன்றாம் பத்து, பா.எ.23-19:20.
18. மேலது, ஏழாம் பத்து, பா.எ.62-15.
19. நச்சினார்க்கினியர் (உ.ஆ), கலித்தொகை, பா.எ.26-3.

20. மேலது, பா.எ.34:8.

21. மேலது, பா.எ.108-60.

22. ந.மு.வேங்கடசாமிநாட்டார் (உ.ஆ.), ரா.வேங்கடாசலம் பிள்ளை, அகநானூறு (களிற்றியாணைநிரை), பா.எ.25:3-5.

23. மேலது, மணிமிடை பவளம், பா.எ.296:1-2.

24. மேலது, நித்திலக்கோவை, பா.எ.336:9-10.

25. மேலது, பா.எ.341:9-10.

26. திரு. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு - தொகுதி-1, பா.எ.18:7-8.

27. மேலது, தொகுதி-2, பா.எ.344-8.

28. மேலது, பா.எ.351:10-11.

29. திரு.பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.), பத்துப்பாட்டு - தொகுதி-1, பொருநர்ஆற்றுப்படை, பக்.189-190.

30. மேலது, சிறுபாணாற்றுப்படை, பக்.178-179.

31. மேலது, தொகுதி-2, குறிஞ்சிப்பாட்டு, ப.84.

32. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, மே.கா.நூ., ஒன்பதாம் பத்து, பா.எ.84:19.

33. மேலது, பா.எ.90:39.

34. Tamil Lexicon , Vol.IV, University of Madras, 1982, P.No.2282.

35. முனைவர் ச.வே.சுப்பிரமணியன், மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.735.

36. ஆசிரியர் குழு, நர்மதாவின் தமிழ் அகராதி, ப.512.

37. தொல்காப்பியர், மே.கா.நூ., சொல்லதிகாரம் உரியியல், நூ.எ.327.

38. பவணந்தி முனிவர், நன்னூல் - எழுத்ததிகாரம், நூ.எ.9.

39. சிவன்பிள்ளை (உ.ஆ.), பிங்கல முனிவர், பிங்கல நிகண்டு, ப.208.

40. முனைவர் ச.வே.சுப்பிரமணியன், தமிழ்நிகண்டுகள்-தொகுதி-2, வடமலைநிகண்டு, ப.69.

41. முனைவர் ச.வே.சுப்பிரமணியன், அருள்பொருள் விளக்கநிகண்டு-தொகுதி-2, ப.101.

42. முனைவர் ச.வே.சுப்பிரமணியன், பொதிகை நிகண்டு, ப.222.

43. முனைவர் ச.வே.சுப்பிரமணியன், நாநார்த்ததீபிகை, ப.481.

44. முனைவர் ச.வே.சுப்பிரமணியன், வேதகிரியார் சூடாமணி நிகண்டு, ப.720.

45. மேலது, அபிதான மணிமாலை, ப.649.

46. திரு.பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), குறுந்தொகை, பா.எ.382:4.

47. பின்னத்தூர் திரு. நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), நற்றிணை, பா.எ.141:10.

48. மேலது, பா.எ.176:7.

49. ந.மு.வேங்டகசாமி நாட்டார் (உ.ஆ.), ரா.வேங்கடாசலம் பிள்ளை, அகநானூறு (க.நி.), பா.எ.150:2.

50. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-1, பா.எ.37:12.

51. திரு.ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.22:19.

52. மேலது, பா.எ.19:9.

53. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம் : 15, ஊர்காண்காதை, பா.எ.175.

54. திரு.பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.), பெருங்கதை, 38:82.

55. மேலது, 39:31.

56. ஆசிரியர் குழு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகராதி, ப.232.

57. Tamil Lexicon , Vol.IV, University of Madras, 1982, P.No.3493.

58. Ibid, P.No.3493.

59. Ibid, P.No.3493.

60. Ibid, P.No.3493.

61. க.நாராயணன், சித்தர் தத்துவம், ப.136.

62. இரா. கஸ்தூரி, மே.கா.நூ., ப.9.

63. மேலது, ப.9.

64. மேலது, ப.9.

65. ராகுல்சிங் சாங்கிருத்யாயன், இந்துத்தத்துவ இயல், பிரம்மம், ப.33.

66. ராகுல்சிங் சாங்கிருத்யாயன், பௌத்த தத்துவ இயல், ப.32.

67. க.காந்தி (தொ.ஆ.), தமிழர் எண்ணங்கள் - நிலையாமை, ப.200.

68. இரா.கஸ்தூரி, மே.கா.நூ., ப.10.

69. மேலது, ப.10.

70. மேலது, ப.10.

71. பா.சுதா, இரட்டைக் காப்பியங்களில் நிலையாமை - ஓர் ஆய்வு, ப.101.

72. இரா.கஸ்தூரி, மே.கா.நூ., ப.11.

73. மேலது, ப.11.

74. மேலது, ப.11.

75. பா.சுதா, மே.கா.நூ., ப.101.

76. மேலது, ப.101.

77. சி.எஸ். முருகேசன், பட்டினத்தார் பாடல்கள், ப.8.

78. அ.அறிவுநம்பி, கம்பரின் அறவியல், ப.5.

79. கு.ப.அழகம்மை, அகநானூற்றில் வாழ்வியல் நீதிகள், ப.19.

80. மேலது, ப.19.

81. மேலது, ப.19.

82. இரா.அனுராதா, சங்க இலக்கியங்களில் அறக்கருத்துக்கள் ஓர் ஆய்வு, ப.73.

83. சீத்தலைச்சாத்தனார், மணிமேகலை, 25 ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்த காதை, பா.எ.228-231.

# இயல் - 2

# இளமை நிலையாமை

**முன்னுரை**

உலகின் மனித வரலாற்றை ஆராய்ந்து பார்ப்போமானால் சில காலம் அழகான உடலைப் பெற்றிருப்பார்கள். திடீரென்று அழகை இழந்துவிடுவார்கள். பிறக்கின்ற குழந்தை பாலை உணவாக உண்டு அழகான உடலைப் பெறுகின்றது. சில ஆண்டுகளுக்குப் பிறகு பல்வேறு உணவுப் பொருளை உண்டு அவ்வுடலை அழகாகப் பாதுகாக்கின்றது. உணவில்லாமல் வறுமையில் வாடுகின்ற குழந்தையின் இளமை அழகற்றது என்று எண்ணுதல் கூடாது. நோய் வந்தால் அழகான உடல் அருவருப்பான உடலாக மாறிவிடும். இளமையில் உடலை அழகுபடுத்துவோம் என்று உடலுக்கு முக்கியத்துவம் தருதல் கூடாது. நம்மிடம் இருக்கின்ற இளமை நிலைத்து நிற்கும் என்று எண்ணுதலும் கூடாது. இது மின்னல்போல் சில காலம் நம்மிடம் இருந்து மறையக்கூடியத் தன்மை உடையது. எனவே இவ்விளமைக் காலத்தில் அறிவையும் ஆற்றலையும் பெருக்கிப் பலருக்கும் உதவுதல் வேண்டும்.

மாதா, பிதா, குரு, தெய்வம் என்பது ஆன்றோர் வாக்கு. ஒரு குழந்தை பிறந்தது முதல் தாயும், தந்தையும், ஆசிரியரும், இறுதியாகத் தெய்வமும் உடனிருந்து நல்ல பழக்க வழக்கங்களுக்கு உறுதுணையாக இருப்பர். பெற்றோர்கள் தன் குழந்தைகளுக்கு இளமைக்காலத்திலேயே நல்ல குணங்களை பழக்கிவிட்டால் பின்பு அக்குழந்தை நல்ல குணங்களோடு மாறாமல் வளரும். அம்மக்கள் இளமையிலேயே அறிவுடையவராகவும், ஆற்றல் உடையவராகவும், மாற்றுதல் வேண்டும். பிறகு, அறிவையும் ஆற்றலையும் வளர்த்துக்கொள்ளலாம்

என்று இருந்துவிட்டால் இளமை நில்லாது அழிந்துவிடும். அதனால்தான் ஒளவையார்,

**“இளமையில் கல்”[1]**

என்று இளமையின் முக்கியத்துவத்தைச் சுட்டிக்காட்டியுள்ளார். இளமை என்பது நிலையற்றது. குறிப்பிட்டக் காலம் வரை இருக்கக்கூடியது. இளமை ஒன்றே நம்முடைய வாழ்க்கையை உயர்த்திக்காட்டும் சிறந்த பருவம். அப்பருவத்தை முறையாகப் பயன்படுத்திக்கொள்கின்றவர்கள் சிறந்தப் புகழைப்பெற்று உயர்ந்த நிலையை அடைவார்கள்.

சங்க காலத்தில் போர்க்களத்தில் வீர உணர்ச்சியைத் தூண்டுவதற்கு நிலையாமை பயன்பட்டிருக்கிறது. அக இலக்கியங்களில் நிலையாமைக் கருத்து கூறப்பட்டமுறை வேறாக இருக்கின்றன. அக இலக்கியங்களில் இளமை தீர்வதற்கு முன்பு தலைமக்கள் வாழ்க்கையைத் துய்ப்பதுதான் சிறந்தது என்ற கருத்தில் இளமை நிலையாமைப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன என்பதை இவ்வாய்வில் விளக்கப்படவுள்ளன.

## இளமை

சென்னைத் தமிழ்ப்பேரகராதி இளமைக்குத் தரும் விளக்கங்களாகக் கூறுவன,

**“Ilami n, (m.illma) 1.Childhood, youth;** பாலியம் அல்லது யௌவன பருவம். இளமையில் கல் (ஆத்தி), **2.Tenderness;** மென்மை (ய) **3.Indiscretion; Immaturity of Knowledge and intellect;** அறிவுழதிராமை (ய) **4.Illusion;** ஒன்றை வேறொன்றாக மயங்கும் மயக்கம் (பிங்) **5.Inferiority baseness;** தாழ்வு (சூடா) **6.Amoruuenss;** காமம் (சூடா)**”[2]** என்று விளக்கம் தருகின்றன.

### சங்க கால மக்கள் உணர்ந்த நிலையாமை

சங்க இலக்கியங்கள் நிலையாமை பற்றியக் கருத்துக்கள் உணர்த்தப்பட்டுள்ள நிலைக்கும், தொடர்ந்து எழுதப்பட்ட பிற்கால இலக்கியங்கள் உணர்த்தப்பட்டுள்ள நிலைக்கும் உள்ள வேறுபாட்டை காண்கின்றோம். சங்க கால மக்கள் உலக வாழ்க்கையில் இன்பம் காணும் நோக்குடன் வாழ்ந்தனர் என்பதை உணரலாம்.

கலித்தொகையில் பாலைக்கலியில் பொருளின் காரணமாக பிரிவேன் என்ற தலைமகனை நோக்கித் தோழி, பொருளினது நிலையாமையையும், இளமையின் நிலையாமையையும் எடுத்துக்கூறி செலவழுங்குவித்தப் பாடல்கள் சில உள்ளன. அவற்றில்,

**"...................... செய்பொருள் முற்றிய**
**வளமையான் ஆகும் பொருள் இது என்பாய்!**
**இளமையும் காமமும் நின்பாணி நில்லா**
**இடைமுலைக் கோதை குழைய முயங்கும்**
**முறைநாள் கழிதல் உறாஅமைக் காண்டை**
**கடைநாள் இதுவென்று அறிந்தாரும் இல்லை"[3]**

என்று இல்லற இன்பம் பொருளால் அமையும் என்று கூறும் தலைவனுக்குத் தோழி, நீ பொருள் ஈட்டி வரும்வரை இவளுடைய விருப்பமும், ஆர்வமும் இளமையில் இருப்பதை போல, நீ பொருள் ஈட்டி வரும்போது இருக்குமோ? இருக்காது. அதனால் வாழ்நாளின் முடிவை அறிந்தவர்கள் இல்லை. எனவே, இளமையில் இன்பம் என்னும் பொருளே நிலையானது என்ற கருத்தில் இப்பாடல் அமைந்துள்ளது. மேலும், இதே கருத்தில்,

**“எம்மையும் பொருளாக மதித்தீத்தை; நம்முள் நாம்**

**கவவுக்கை விடப்பெறும் பொருள் திறத்து**

**அவவுக்கை விடுதல் அதுமனும் பொருளே”[4]**

தலைவனே நீ சேர்க்க நினைக்கும் பொருள் நிலையற்றது. அதனால் தலைவியோடு வாழ்வதை நினைத்து இருவரும் கூடி வாழும் வாழ்வில் பொருளை விரும்பாமல் தலைவியின் இன்ப பொருளே சிறந்தபொருளாகும் என்று கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. மேலும், பிரிவு உணர்த்திய தலைமகனுக்குத் தோழி,

**“............. எனவாங்கு**

**அனையவை போற்றி, நினைஇயன நாடிக்காண்**

**வளமையோ வைகலும் செயலாகும்; மற்று இவள்**

**முளைநிரை முறுவலார் ஆயத்துள் எடுத்தாய்ந்த**

**இளமையும் தருவதோ இறந்த பின்னே?”[5]**

என்று தலைமகளது ஆற்றாமையையும், இளமையது அருமையையும் கூறி, நீ பிரிந்து செய்யக்கருதியவை எக்காலத்திலும் செய்யலாம். ஆனால் பொருளால் கழிந்த இளமை மீட்க முடியாது என்னும் பொருள்பட இப்பாடலில், நீ வேற்று நாட்டிலிருந்து கொண்டு வரும் செல்வம் கண்ணழகை மீட்டுத் தருமா? செல்வம் என்றும் ஈட்டலாம். ஆனால் தோழியர் அழகு செய்துப் பார்த்து மகிழும் இவளது இளமைப் போனால் மீண்டும் வருமா? நன்கு எண்ணிப்பார்த்து நீ பொருளீட்டச் செல்லும் முடிவை ஆராய்ந்து செய்க என்று கூறுவதாக பாடலின் கருத்து அமைந்துள்ளது. மேலும், தலைவியின் ஆற்றாமைக் கண்ட தோழி தலைவனுக்குக் கூறுவதாகக் கலித்தொகை,

**“............................ நறுநுதலாள்**

**தொல்எழில் தொலைபுஇவள் துயர்உழப்பத் துறந்து நீ**

**வல்வினை வயக்குதல் வலித்திமன் வலிப்பளவை**

**நீள்கதிர் அவிர்மதி நிறைவுபோல் நிலையாது**

**நாளினும் நெகிழ்புஒடும் நலன்உடன் நிலையுமோ?”**

**.........................................................................**

**கூற்றம்போல் குறைபடூஉம் வாழ்நாளும் நிலையுமோ?**

**.........................................................................**

**முகைவாய்த்த தடம்போலும் இளமையும் நிலையுமோ?”[6]**

என்று தலைவியின் இயற்கையழகு அழியும்படி நீ அவளை பிரியக் கருதுகிறாய். அதனை செய்தால் அவளுடைய இளமை அழகு கெடும். நிறை நிலவுபோல் இருந்தது நாளுக்குநாள் ஒளி குறைந்து நீங்குமே தவிர நிலைக்குமா? நிலைக்காது. நீ செல்லும்போது பொய்கையில் பூத்த மலரின் மணம் திரும்பி வரும்வரை நிலைக்குமா? நிலைக்காது.

வண்டுகள் தேனை உண்ணும் புது மொட்டுக்கள் அரும்பும் பொய்கையில் உள்ள நீர் நாளுக்கு நாள் குறைவது போல் இவளது இளமை குறையுமே தவிர நிலைக்காது என்று தோழி, கூறியதைக் கேட்ட தலைவன் தலைவியை விட்டு பிரிவதைக் கைவிட்டான் என்று கூறும் விதமாக இப்பாடல்கள் அமைந்துள்ளன.

## இளமையில் இணைந்து வாழும் வாழ்க்கையே சிறந்தது

இளமையையும், அன்பையும் ஒருங்கே பெற்றவர்களுக்குரிய தகுதி செல்வத்திற்கு இல்லை. இளமையை இழந்துவிடாமல் இளமையில் இணைந்து வாழும் வாழ்க்கையே சிறந்தது என்று கலித்தொகைப் பாடல் கூறுகின்றது.

**"இளமையும் காமமும் ஓராங்குப் பெற்றால்**

**வளமை விழைதக்கது உண்டோ? உளநாள்**

**ஓரோஒகை தம்முள் தழீஇ ஒரோஒகை**

**ஒன்றன்கூறு ஆடை உடுப்பவரே ஆயினும்**

**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை, அரிதுஅரோ**

**சென்ற இளமை தரற்கு!"[7]**

என்றுத் தோழி கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. நீங்கிய இளமையை மீண்டும் பெற இயலாது. அதனால் வீட்டில் ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டு ஒரே ஆடையை இரண்டாகப் பிரித்து உடுத்திக்கொள்ளும் வறுமைநிலை வந்தாலும், வாழ்நாள் இறுதிவரைச் சேர்ந்து வாழும் காதலர் வாழ்க்கைச் சிறந்த வாழ்க்கை என்று இளமையின் நிலையாமை நன்கு உணர்த்தியுள்ளது இப்பாடல். இப்பாடலில், இளமை அழியக்கூடியதென்றும், இளமை அழிந்தால் மீண்டும் அவற்றைப் பெறமுடியாது என்றும், இளமைப் பருவத்தே தலைவியுடன் கூடி மகிழ்ந்து வாழும் வாழ்வே தலைசிறந்த விழுமிய பொருள் செறிந்த வாழ்வு என்றும் கூறப்பட்டுள்ளன. செல்வத்தின் தன்மை அழிந்தால் மீண்டும் தேடிக்கொள்ளலாம். ஆனால் இளமை அழிந்தால் மீண்டும் அவற்றை பெற இயலாது. ஆகவே, தோழி தலைவனிடம் பொருளின் தன்மையை எடுத்துக் கூறுகிறாள். இக்கருத்தையே கலித்தொகை,

**"நச்சல் கூடாது பெரும! இச்செலவு**

**ஒழிதல் வேண்டுவல், சூழின் பழிஇன்று**

**மன்னவன் புறந்தர வருவிருந்து ஓம்பித்**

**தன்நகர் விழையக் கூடின்**

**இன்னுறல் வியன்மார்ப! அதுமனும் பொருளே"[8]**

என்று பொருளானது இனிய இசை வழங்கிய யாழின் நரம்புகள் அறுபடுவதைப் போல நிலையில்லாதது. ஒருவரிடம் வாழ்ந்து அவரை விட்டுப்பிரிகின்றத் திருமகளைக் காட்டிலும் அழியக்கூடியது. தன் ஆக்கத்திற்குப் பெரிதும் உறுதுணையாக இருந்த அமைச்சனைக் கருணைக்காட்டாமல் கொல்லும் அரசனைவிட ஒருவனைவிட்டு நீங்குவது என்று பொருளின் நிலையில்லாத் தன்மையை கூறி, இளமையின் இன்பத்தைத் தோழி தலைவனுக்கு வலியுறுத்துகிறாள்.

நிலையாமையை உணராதவர் மனம், இளமையையும் செல்வத்தையும் கண்டு துள்ளும்; காம இன்பத்தில் மூழ்கித் தவிக்கும் என்பதனை மூத்த பள்ளியின் கூற்றாக,

**"மதயானை முதற்பிடிக்க வல்லாய் - இந்த**

**மாட்டுக்கு மாட்டாமல் போனதென்ன சொல்லாய்**

**கதையோமுன் மலைகளையும் முறித்தாய் - அந்த பலங்**

**கண்டிலேனா னெண்றோடி மறித்தாய்**

**சதுர்வேதன் விதித்தலைப் பொறியோ - மருதூர்ச்**

**சக்களத்தி புலைமருந்தின் வெறியோ**

**முதலேயீ தார்விளைத்த இடும்போ - தெரிந்திலேன்**

**முக்கூடல் அழகர் பண்ணெக் குடும்பா"[9]**

என்ற இப்பாடலடிகள் நிலையாமை உணராதவர் பெண்ணாசையில் மூழ்கித் துன்பமடையும் நிலையை விளக்குகின்றது.

**இளமையின் அருமை உணர்தல்**

தலைவன் முன்பு ஒரு காலத்தில் தலைவியைப் பிரிந்துபோய்ப் பொருளை ஈட்டிக்கொண்டு வந்து அவளுடன் இல்லறம் நடத்தினான். அவன் நெஞ்சம் மீண்டும் பொருள் ஈட்டி வருமாறு இடைவிடாது தூண்ட இளமையின் அருமையை உணர்ந்த தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக அகநானூற்றில்,

**“ஆள்வினைப் பிரிதலும் உண்டோ? பிரியினும்**
**கேள் - இனி வாழிய நெஞ்சே! - நாளும்**
**கனவுக்கழிந் தனைய வாகி, நனவின்**
**நாளது செலவும், மூப்பினது வரவும்,**
**அரிதுபெறு சிறப்பின் காமத்து இயற்கையும்**
**இந்நிலை அறியாய் ஆயினும்”[10]**

என்று நாள்தோறும் உறக்கத்தில் நாம் கனவுக் காணும்போது அக்கனவில் தோன்றும் பொருள்கள் யாவும் கனவுக் கலைந்தவுடன் மறைந்துபோகும் தன்மையன. அதேபோல் நனவிலும் இளமையின் செலவும், முதுமையின் வரவும், காம இன்பத்தின் தன்மையும் விரைவில் மறையும் தன்மையுடையதாகும். இத்தன்மையை அறிதல் வேண்டும் என்பது இப்பாடலின் கருத்தாகும். பொருள் தேட இக்காலத்தே சென்றால் இளமை மறைந்து முதுமைப் பருவம் வந்துவிடும் என இளமையின் அருமையை வெளிப்படையாக இப்பாடல் கூறுகின்றது.

பொருளின் காரணமாகப் பிரிந்த தலைவன், குறித்த காலத்தில் திரும்பி வராததால் தலைவி பிரிவாற்றாமல் தன் இளமைக் காலம் வருந்த வாடினால் என்ற கருத்தில் அகநானூறு,

**“ஆய்நலம் தொலைந்த மேனியும், மாமலர்த்**

**தகைவனப்பு இழந்த கண்ணும், வகைஇல**

**வண்ணம் வாடிய வரியும், நோக்கி**

**ஆழல் ஆன்றிசின் நீயே”[11]**

என்று தலைவனுடைய பிரிவால் இளமையில் வாடி வருந்தும் தலைவியே! நீ வருத்தம் கொள்ளாதே. பொருளைக் கொடுப்பதால் பெறும் இன்பத்தை விரும்பி பொருள் ஈட்ட சென்றுள்ளான் தலைவன். அவன் நன்கு இளமை நிலையாமையை உணர்ந்தவன். ஆதலால் அங்கே தங்கி இருக்காமல் விரைவில் வந்து சேருவான் என்ற பொருள்பட இப்பாடல் அமைந்துள்ளது.

## இளமையின் பருவநிலை

ஒவ்வொரு மனித வாழ்விலும் பருவநிலை என்பது இன்றியமையாதது. இன்று இருபது வயது மதிக்கத்தக்க ஒருவர், அறுபது வயதில் இருபது வயதினை எண்ணி மகிழலாமேத் தவிர இருபது வயதை மீண்டும் அடைதல் என்பது இயலாது. இச்சிறு சான்றே இளமை நிலையில்லாதது என்பதைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றது.

புறநானூற்றில் இளமை நிலையாமையைப் பற்றி தொடித்தலை விழுத்தண்டினார் பாடிய பாடலில், இளமை நிலையாமை சிறப்பாக எடுத்துச் சொல்லப்பட்டுள்ளது.

**“நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து**

**குளித்து மணற்கொண்ட கல்லா இளமை**

**அளிதோ தானே! யாண்டு உண்டு கொல்லோ**

**தொடித்தலை விழுத்தண்டு ஊன்றி, நடுக்குற்று**

**இரும்இடை மிடைந்த சில சொற்**

**பெரு மூதாளரேம் ஆகிய எமக்கே?"[12]**

உயர்ந்த கிளைகளை உடைய மருத மரத்தின் மீது ஏறி ஆழமான நீரில் 'துடும்' என்று குதித்தும், மூழ்கி அடிமணலை அள்ளிக்காட்டியும், அத்தகைய களங்கமில்லாத இளமை இப்போது முதுமையில் வருந்தச் செய்கிறது. அவ்விளமை எப்போது வாய்க்கும். பூண் பிடித்த வளைந்த உச்சியை உடைய பெரிய கம்பினை ஊன்றித் தளர்ந்து, இருமல் இடையிடையே வந்து வருத்தும் பெரிய முதியவராகிய எமக்கு அவ்விளமை எப்போது வாய்க்கும் என்று, முதுமையில் இளமைக்காக ஏங்குவதை இப்பாடல் காட்டுகின்றது.

இதையே பாரதிதாசன் தனது குடும்ப விளக்கில்,

**"இன்னும் இருக்குமோ இளமைப் பருவந்தான்"**

என்றும்,

**"......................... இன்றைக்கு**

**முன்புதைத்த சட்டைக்கு மூன்றில்லொன்றுதான் உடம்பு**

**..........................."[13]**

**"..........................மின்னுதளிர்**

**மாவிலைபோல் மேனி வளவளத்துப் போயிற்றே**

**மாடிபடியேறும் வாய்ப்பில்லை பேரர்களை**

**ஓடி அணைக்க உறுதியில்லை - தேடிவரும்**

**தங்களைப் போன்றோர்க்குத் தக்கவர வேற்பளித்தே**

**அங்கிங் கழைத்தேக ஆர்வமுண்டு - நுங்கின்**

**இளகல் உடலால் இயலுமா? வில்லின்**

**வளைவுதனை நாணால் வகுப்பர் - வளைவுடலை**

**நாளன்றோ ஆக்கிற்று நாம் என்செய் வோம்அந்த**

**நாளின் இளமை நலத்தைஇந் - நாளில்**

**நினைத்தால் நமது நெடுந்தோளோ இவ்வாறு**

**அனைத்தும் புரிந்ததென ஐயந் - தனைக்கொள்வேன்**

**காட்டாறு காளைப் பருவமன்றோ"**[14]

இவ்வாறு குடும்பவிளக்கில் முதியவர் காட்டாறு போன்ற காளைப்பருவம், மாவிலைப்போல் தளதளத்த மேனி இப்போது நுங்கின் இளகல் போலவும், நாணால் வலைக்காத வில் போன்ற தன் உடம்பை நாள் கொண்டு வலைத்ததையும், தன் பேரக்குழந்தைகளுக்கும், உறவினர்களுக்கும் உதவமுடியாத முதுமைக் காலத்தில் இளமையை நினைத்து பார்ப்பதை இங்குக் காணலாம்.

அதேபோல், இளமைக் காலத்தில் தன் கட்டுடலால் செய்த வீரதீர செயல்களையும் இக்குடும்ப விளக்கில்,

**"..................... ஆவினை**

**ஆற்றில் குளிப்பாட்டும் போதில் அதன் கால்கள்**

**சேற்றில் மாட்டித் திகைத்தலை நான் - மாற்றுதற்குத்**

**போய்முழுகி னேன் என் புறமுதுகில் காலூன்றி**

**மாய்வின்றிமாடு கரையேறச் - சேய் நானும்**

**மாட்டின்வால் பற்றியதால் சேற்றினிலே - மாயவில்லை"**[15]

என்று இளமை பருவத்தில் செய்தச் செயலை முதுமையில் நினைத்துப் பார்க்க மட்டுந்தான் முடியும் என்பதை இதன் மூலம் அறியலாம்.

இளமையானது ஒருவனது சொற்களைத் தளாச்சியடையச் செய்து, கோலை ஊன்றச் செய்து, பற்களை விழுமாறு செய்து, சோர்வு நடையை உண்டாக்கி மூப்பு வளரும். அம்முதுமையில் இளமையின் இனிமையை நினைப்பதால் பயனொன்றும் இல்லை என்கிறது நாலடியார் பாடல்.

**"சொல்தளர்ந்து கோல்ஊன்றிச் சோர்ந்த நடையினராய்ப்**

**பல்கழன்று பண்டம் பழிகாறும்"**[16]

என்றும், மேலும் ஒரு பாடல்,

**"பருவம் எனைத்துள பல்லின்பால் ஏனை**

**இருசிகையும் உண்டீரோ என்று - வரிசையால்**

**உண்ணாட்டம் கொள்ளப்படுதலால் யாக்கைக்கோள்**

**எண்ணார் அறிவுடை யார்"**[17]

மேற்கண்ட பாடல் நல்லறிவுடையவர் இளமையை ஒரு பொருளாக மதிக்க மாட்டார்கள் என்ற செய்தியை முன்வைக்கிறது. இதற்கானக் காரணம் அறிவியல் தொடர்பாக உள்ளது. வயது எவ்வளவு ஆகின்றது. பற்கள் எத்தனை உதிர்ந்துள்ளன. இரண்டு வேளையும் உண்பதுண்டா. இத்தகுக்கேள்விகள் இளமை அழியாது இருக்குமானால் கேட்கப்படவேண்டிய தேவையில்லை. இக்கேள்விகள் எழுந்துள்ளமையால் இளமை நிலையற்றது என்பது புலனாகின்றது.

கருமையான கூந்தலிலே வண்டுகள் மொய்க்கும் மல்லிகை மலரைச் சூடி காமன்போல் இளமை காலத்தில் சென்றவர்கள். சிலேட்டுமம் திரண்டு கழுத்திலே ஒலியுண்டாக, நெய் திரண்டாற்போலக் கோழையை உமிழ்ந்து, ஒரு தண்டை ஊன்றி நிற்கும் நிலை ஏற்படலாம். ஆதலின் இளமையோடு இருக்கும்போதே

அறம் செய்தல் சிறந்தது என சீவகனுக்கு ஆசிரியர் எடுத்துரைப்பதாக அமைந்த பாடல்,

**"தண்டூன்றி யறிவிற் றள்ளி**

**நெய்திரண்டாற் போலுமிழ்ந்து நிற்கு"[18]**

இப்பாடல் இளமை நிலையில்லாதது என்ற கருத்தினை முன்வைக்கிறது.

சேரனைக் கண்டு மங்கையர்கள் தம் பருவ அழகினை இழந்தனர் என்ற செய்தி முத்தொள்ளாயிரத்தில் இடம்பெற்றுள்ளது.

**"வாமான்தேர்க் கோதையை மான்தேர்மேற் கண்டவர்"[19]**

பருவ எழில் நிலையானதன்று; அது மாறக்கூடியது. அம்மாற்றமும் தனக்கும் காதலனால் விளைந்ததே எனத் தலைவி வரவேற்பதாக இப்பாடல் அமைந்துள்ளது.

மணிமேகலை உதயகுமரனிடம், யாக்கையின் தன்மையைக் காட்டி இளமை நிலையாமையை உணர்த்துவதனை, இதோ! எதிரிலுள்ள நரைமூதாட்டியைப் பார்! இளமையில் கருமணலைப்போல் இருந்த கூந்தல் வெண்மணலைப் போலவும், வில்லைப்போலவும், செங்கழுநீர் மலர் போன்ற கண்கள் பீழையாகிய வழுநீரைச் சுமந்து கொண்டும், குமிழ் போன்ற மூக்கு உமிழ்கின்ற சீயை ஒழுகிக் கொண்டும், வரிசையான முத்துப்பற்கள் சுரை விதைகளைப் போலவும், இலவத்தின் மலரிதழ் போன்ற வாய் புலவு புண்ணைப் போலப் புலால் நாற்றத்தைச் சிந்திக்கொண்டும், வள்ளைத் தண்டு போன்ற காது ஊண் வற்றிய வற்றலைப் போலவும், அழகிய முலைகள் உள்ளீடற்ற வெற்றுப் பையினைப் போலவும், வாழைத் தண்டினைப் போன்ற தொடைகள் தாழைத் தண்டினைப் போல வற்றியும், அம்புப்புட்டிலைப்

போன்ற கணைக்கால்கள் நரம்புகளுடனே எலும்பும் தெரியுமாறு அமைந்தும், தளிர் போன்ற பாதங்கள் முற்றி முதிர்ந்த தெங்கினின்றும், உதிர்ந்த நெற்றினைப் போலவும் அமைந்துள்ள இந்த யாக்கையின் உண்மைத் தன்மையை உணர்வாயாக! என்று யாக்கையின் தன்மையை,

**"நரைமூ தாட்டி ஒருத்தியைக் காட்டித்**

**தண்ணறல் வண்ணந் திரிந்துவே றாகி**

**வெண்மண லாகிய கூந்தல் காணாய்**

**பிறைநுதல் வண்ணங் காணா யோநீ"[20]**

என்று உடலில் ஏற்படும் மாற்றங்களை மிகத் தெளிவாக மணிமேகலை காப்பியம் காட்டி, இளமை நிலையாமையை உணர்த்துகின்றது. உதயகுமரனிடம் மணிமேகலை. மேலும்,

**"பூவினும் சாந்தினும் புலால்மறைத் தியாத்துத்**

**தூசினும் மணியினும் தொல்லோர் வகுத்த**

**வஞ்சம் தெரியாய்"[21]**

என்று கூறுவதால் அறியலாம்.

உடலில் ஏற்படும் மாற்றங்களை அடுக்கிக் கூறி, முதுமைத் தன்மையினைத் தெளிவாக்குகின்றது. இளமையில் உள்ள அழகும் நிலையில்லாதது எனப் பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள் கூறுகின்றன. இதனை,

**"நாறிவரும் எச்சில்தனை நல்லமு தென்றும்**

**நண்ணுஞ்சளி நாசிதனை நற்கு மிழ் என்றும்"[22]**

என்ற அடிகள் இளமையில் கர்வம் கொள்ளவைக்கும் அழகு நிலையாமையை எடுத்துக்காட்டுகின்றன. மேலும், பட்டினத்தார் பாடலும் இக்கருத்தினை வலியுறுத்துவதை,

**“வளமையும் மாறி இளமையும் மாறி வன்பல்விழுந்து இருகண்கள் இருண்டு**

**வயதுமுதிர்ந்து நரைதிரைவந்து**

**வாதவிரோத குரோதம் அடைந்து -**

**செங்கையினில் ஓர்தடியும் ஆதியே”**[23]

என்ற அடிகளும் இளமை நிலையில்லாதது என்று கூறுகின்றன.

உறவினர்களை வரவேற்று அவர்களோடு குலாவும் பருவம் இளமைப் பருவமாகும். அந்த இளமை நிலையில்லாதது என்கிறது தேவாரம். இளமை மாறி முதுமை எய்துதல் இயற்கை எனவும், இயமனின் வருகைக்கு இளமை, முதுமை என்ற பாகுபாடில்லை எனவும் கூறி இளமை நிலையாமையை,

**“காலபாசம் பிடித்து எழு தூதுவர்**

**பாலகர் விருத்தர் பழையார் எனார்”**[24]

என்ற அடிகள் மூலம் இளமை நீங்கி, பிணிவந்து, எந்த நேரத்திலும் இயமனின் கைக்குள் அகப்பட்டுக்கொள்ளும் என்கிறது.

இளமையில் செல்வம் சுகமானது. அதை அனுபவிக்கும் இளமை நிலையில்லாதது. மனிதனுடையப் பருவங்களில் பாலன், இளைஞன், கிழவன் என்று வெவ்வேறு விகாரங்களையுடைய தசையுடலினுள்ளே குடியிருக்க விரும்பாத மாணிக்கவாசகர்,

**“வேற்று விகார விடக்கு உடம்பின் உள்கிடப்ப**

**ஆற்றேன் எம்ஐயா”[25]**

என்று வேண்டும் நிலையில், இளமை மாறி முதுமை அடைவது இயற்கை எனக்கூறி இளமை நிலையாமையைச் சுட்டுகிறார். இளமையிலிருந்து முதுமை அடையாமலே வாழ்க்கை முடிதலும் உண்டு என்பதும் இதன் மூலம் அறியமுடிகிறது.

காமனைப் போன்ற இளைஞர் பருவம் மாறி ஈளைகட்டி, இருமல் வந்து நெய் திரண்டாற்போலக் கோழையை உமிழ்ந்து, முதுமை தோன்றி ஒரு கோலையே காலாக ஊன்றி நடந்து, உணர்வு நீங்கி நிற்பதற்கு அவர்களது இளமை நீங்கியது என்பதனை சீவகசிந்தாமணி,

**“கருந்தலைகள் வெண் தலைக ளாய்க்கழியா முன்னே”[26]**

என்று கூறுகிறது.

இளமையின் பருவநிலை இதுபோன்ற மாற்றங்களை உடையது. அதனால் அவற்றை பேணிப்பாதுகாக்காமல் இளமை இருக்கும்போதே அறங்களை செய்து புகழ் பெறுவாயாக என்று கூறுகின்றது.

## முதுமை நிலை

கால மாறுதலுக்கேற்ப உடலில் ஏற்படும் மாற்றங்களே இளமை நிலையில்லாதது என்பதை இலக்கியங்கள் விளக்குகின்றன. மனிதன் பேசும் ஆற்றல் இழந்து பற்கள் விழுந்து, நடைதள்ளாடி, கோலூன்றி நடந்து, மிக்கமுதுமையடைந்து, உடம்பில் திரை உண்டாகி, முடியில் நரையுண்டாகி,

அருவருப்பான தன்மையை அடைந்து அனைவரும் அடைய விரும்பாத அந்த நிலையே முதுமை எனலாம்.

இளமை நிலையாமையைப் பற்றி நரிவெரூஉத்தலையார் பாடல் முதுமையின் தன்மையைக் காட்டி விளக்குகிறது. சான்றோர்களே! மீன் முள் போன்ற நரை முதிா்ந்தக் கன்னங்களையும், பயனற்ற முதிரும் மூப்பினையும் உடையீா்! என புறநானூறு பாடல் விளக்குகிறது.

**“கயல்முள் அன்ன நரைமுதிர் திரைகவுள்**

**பயனில் மூப்பின் பல்சான் றீரே!”[27]**

என்கின்றது. இதே கருத்திலமைந்த மற்றொரு புறப்பாடல்,

**“நரம்பு எழுந்து உலரிய நிரம்பா மென்தோள்**

**முளரி மருங்கிண் முதியோள்.....”[28]**

என்று தளதளத்த இளமைப்பருவம் மாறி, நரம்பு தெரிய வாடிய மென்மையான தோளையுடைய முதுமைப்பருவம் வந்தது என்கின்றது.

இளமை மாறி, முதுமையடைவது இயல்பாகும். இதனை திவ்வியப் பிரபந்தம்.

**“போர்த்து பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை**

**போர்த்து பெருந்துன்பம்”[29]**

என்ற அடிகளின் மூலம் இளமை அழியும் மூப்பும், மரணமும் அனைவரையும் சாரும் என்கின்றது.

**“பிடித்தேன் பிறவி கெடுத்தேன் பிணி சாரேன்**

**மடித்தேன் மனைவாழ்கையுள் நிற்பதோர் மாயையை”[30]**

என்ற அடிகளின் மூலம் இளமை நிலையாமையோடு அனைத்து நிலையாமையும் வெளிப்படுகிறது. நமக்கென்று வரையறுக்கப்பட்ட கால எல்லையைக் காட்டி,

**“வைத்த நாள்வரை எல்லை குறுகிச்சென்று**

**எய்த்தி ளைப்பதன் முன்னம்”[31]**

என்ற அடிகளின் மூலம் இளமையோடு காலமும் நிலையில்லாதது என்ற கருத்து பெறப்படுகிறது.

இளமை நிலையாமையைக் காரைக்கால் அம்மையார் புராணத்தில்,

**“.......................... மெய்யில்**

**ஊனடை வனப்பை எல்லாம் உதறிஎற் புடம்பேயாக**

**வானமும் மண்ணும் எல்லாம் வணங்குபேய் வடிவ மானார்”[32]**

என்ற அடிகளின் மூலம் இளமை பருவ வேறுபாடுகளையும், மாற்றங்களையும் அறியமுடிகிறது. இதேக் கருத்தைக் கம்பராமாயணமும் தசரதன் கண்ணாடியில் தன் உருவத்தைப் பார்த்தான். தன் தலைமுடியில் ஒருநரை இருப்பதைக் கண்டான். உடனே இராமனுக்கு முடிசூட்ட எண்ணினான் என்று கூறுவதிலிருந்து, இளமை மாறி முதுமை எய்துதல் இயற்கை. அதற்கு அடையாளங்களாக நரை, திரை, மூப்பு வெளிப்படுகிறது என அறிய இயல்கிறது. இதனை,

**“மன்னனே! யவனியை மகனுக் கீந்துநீ**

**பன்னருந் தவம்புரி பருவ மீதெனக்**

**கன்னமூ லத்தினிற் கழற வந்தென**

**மின்னருங் கருமை போய் வெளுத்த தோர்மயீா்”[33]**

என்ற பாடல் வெளிப்படுத்துகிறது.

செல்வத்தையும், அதன் தன்மைகளையும் உணர்ந்தவர்கள் இளமையை நன்கு கழிப்பர். ஏனெனில் இளமையும் அதனால் வரும் இன்பமும் நிலையாதது என்று அறிந்தவர்களாதலால் அவர்கள் இளமையிலேயே அறம் செய்து நற்கதி பெறுவர் என்பதனைக் குண்டலகேசி,

**"பாளையாந் தன்மை செத்தும்**
**பாலனாந் தன்மை செத்தும்**
**காளையாந் தன்மை செத்தும்**
**காமுறு மீளமை செத்தும்**
**மீளுமூவ் வியல்பு மின்னே**
**மேல்வரு மூப்பு மாகி"[34]**

என்று கூறி இளமைமாறி முதுமை அடைவதை விளக்குகிறது.

இளமையின் தன்மை மாறி முதுமை அடைதல் உறுதி என்பதனை அன்னம், வேலன் பாத்திரங்களின் உரையாடல் வாயிலாக, பாண்டியன் பரிசு நூலில்,

**"பேரிளமை என்னுமொரு கரும்பின் சாறும்**
**கொள்ளைபடப் பெய்துவைத்த இளமை என்னும்**
**கொப்பரையில் 'நாள்' என்னும் பூனை நாவால்**
**மொள்ளையில் 'உயிர்' என்பார் பார்த்திருத்தல்**
**முறைதானோ என்றுரைத்தாள் அன்னம்"[35]**

என்று கூறுகின்றது. பேரிளமையைக் கரும்பின் சாறுக்குக் கூறுவதை நோக்கும்போது அது தரும் துன்பம் நமக்குக் குறிப்பாக விளங்குகிறது. இதனையே இரட்சணிய யாத்திரிகமும்,

**"முதுமை யாகிய வாடைவந் துடலிடை முயங்க"[36]**

என்ற அடியின் மூலம் முதுமையின் கொடுமையை விளக்குகிறது. மேலும், பாரதிதாசன் கவிதை, மக்கள் நிலையாமையுணர்ந்து வாழும் முறையையும், இளமைமாறி முதுமை அடைதல் இயற்கை என்பதனையும், மனித உடலில் ஏற்படும் மாற்றங்களைக் காட்டியும் வலியுறுத்துகின்றது.

**"பேன் நாறி வீழ்குழலைத் தேனா றென்றும்**

**பீழைஒழு கும்விழியை நீல மென்றும்**

**மேல்நாறும் சளிமூக்கை எட்பூ என்றும்**

**வெறுங்குறும்பிக் காதை எழில் வள்ளை என்றும்**

**ஊன் நாறும் ஊத்தைப்பல் வாய்உ தட்டை**

**ஒளிமுல்லை செவ்வாம்பல் கோவை என்றும்**

**தோல்நாறும் கன்னம்கண் ணாடி என்றும்**

**துயர்ஈளை பயில் குரலைக் குயில் தான் என்றும்"[37]**

என்ற கவிதையடிகளின் மூலம் இவ்வுலகில் வாழும் மனிதனுடைய நிலையை விளக்கி, நிலையாமை உணர்ந்து முதுமை வரும் முன் நல்லது செய்து வாழுமாறு குறிப்பாக அறிவுறுத்துகின்றது.

## நிலையில்லாதது இளமை

உலக வாழ்வில் காதலைப் பற்றிச் சிந்திக்காத மனிதர்களே இல்லை எனலாம். கவிஞன் சமுதாயத்தின் ஓர் அங்கமாவான். அவன் மனித வாழ்வில் காதல், இன்பம் இவற்றைச் சிந்தித்துப் பாடல்களைப் பாடினான். வாழ்க்கையின்

முடிவான சிறப்பையும் நினைத்துப் பார்த்துப் பாடல்களைப் பாடலானான். காதலால் மகிழ்வும், பிரிதலால் துன்பமும் ஏற்படுவதற்குக் காரணம் புலன்களேயாகும். தலைவியின் உறுப்புகள் நலன் கெடுவதற்கு முன் விரைவில் தலைவியைத் திருமணம் செய்துகொள்வாயாக! எனக் கூறும் போக்கில் இளமை நிலையாமை, இன்ப நிலையாமை ஆகியவை விளக்கப்படுகின்றன. இந்த இன்ப துன்பத்தினைப் பற்றி வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்கள்,

**"உலகப் பொருள்களில் உயிர்களின் உடம்புகளும் அடங்கும். உடம்பின் புலன்கள் உலகப் பொருள்களைத் துய்ப்பதற்குப் பயன்படுகின்றன. பொருள்களின் வழியாக அடையும் நுகர்வுதான் இன்பம்"**[38] என்று கூறுகிறார்.

இந்தக் கருத்துப்படி, தலைவன், தலைவி இருவரும் நடத்தும் இல்லறத்தின் மூலம் அடையும் இன்பநுகர்ச்சி குறிப்பிட்ட வயதுவரைதான் என்பது புலனாகிறது. எனவேதான், அகஇலக்கியங்கள் தலைவன் பொருள் ஈட்டச் செல்லுங்கால் இன்பத்தின் தன்மையைக் காட்டிச் செல்வம், அழகு, காமம், இளமை இவை நிலையில்லாதவை என அறிவுறுத்துகின்றன. எனவே, நிலையில்லாத பொருளின் மீது பற்றுக்கொள்ளாது தலைவியுடன் இன்பம் காணுவாய் என அறிவுறுத்துகின்றது. அக இலக்கியங்களில் குறிப்பிட்டுள்ளத் துறைகளில் தலைவன், தலைவி, தோழி, பாணன், பாங்கர் இவர்களின் வாயிலாக நிலையாமைக் கோட்பாடுகள் வெளிப்படுத்தப்படுகின்றன.

தலைவியின் அழகு, இளமை, காமம், அவளாள் அடையும் இன்பம் இவற்றின் நிலையாமைகளை நற்றிணைப் பாடல்,

**“அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்**

**பொன்னேர் மேனி மணியிற் தாழ்ந்த**

**நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்**

**நீத்த லோம்புமதி பூக்கே ழூர”**[39]

என்ற பாடலில் விம்பிப் புடைத்த மார்பகங்கள் தளர்வுற்ற முதுமைக் காலத்தும், கருமேகக் கூந்தல், வெள்ளிய நிறம் பெற்று நரைத்திடும் நிலைக்கு வந்தாலும், இவளைக் கைவிட்டுவிடாதே எனக் கூறுமுகமாக இளமை நிலையாமையோடு, அழகு நிலையாமை இவற்றை நற்றிணைப் பாடல் இணைத்துக் காட்டுகிறது. தலைவிக்கு மட்டுமல்லாமல் மேனித் தன்னிலை மாறுதல், முடி நரைத்தல் போன்றவை இருபாலார்க்கும் பொதுவானது என்பதை உணர்தல் வேண்டும் என்பதை ‘யசோதர காவியம்’ உறுதிப்படுத்துவதனை,

**“மற்றொருநாள் மன்னவன் மகிழ்ந்து கண்ணாடி**

**பற்றுவா னடிதொழப் படிவ நோக்குவான்**

**ஒற்றைவார் குழன்மயி ருச்சி வெண்மையை**

**உற்றுறா வகையதை யுளைந்து கண்டனன்”**[40]

என்கின்ற பாடலால் அறியலாம். நற்றிணையின் மற்றொரு பாடலில் செல்வம், இளமை இவற்றை இணைத்துப் பாடியுள்ளதை.

**“இறந்துசெய் பொருளும் இன்பந் தருமெனின்**

**இளமையின் சிறந்த வளமையும் இல்லை**

**இளமை கழிந்த பின்றை வளமை**

**காமந் தருதலும் இன்றே”**[41]

என்பதால் உணரலாம். இதனால் செல்வத்தையும் இளமையையும் மீண்டும் பெற இயலாது என்பது பெறப்படுகிறது. இவையனைத்தும் இணைந்த வாழ்க்கையும் நிலையில்லாதது என்பதனை நற்றிணை,

**"கவறு பெயர்த் தன்ன நில்லா வாழ்க்கையிட்டு"[42]**

என்ற அடி விளக்குகின்றது.

**"வைகல் தோறும் இன்பமும் இளமையும்**

**எய்கணை நிழலின் கழியும்இவ் உலகத்து"[43]**

என்ற பாடலில் இல்வாழ்க்கைக்குத் தேவையான இன்பம், அதற்குரிய இளமையும் எய்யப்பட்ட அம்பினது நிழல்போல் விரைந்து செல்லக்கூடிய இவ்வுலகியல்பினை அறிந்து, தலைவியைப் பிரிவதைத் தவிர்ப்பாயாக! என்று தலைவனிடம் தோழி கூறுவதாக அமைந்துள்ளது. இளமையும் இன்பமும் மிக விரைவில் மறைந்துவிடும் என்று கூறி, இளமை நிலையாமையையும், இன்ப நிலையாமையையும் எடுத்துக்கூறுகின்றது. இதனை குறுந்தொகை,

**"………………… நின்**

**அம்கலும் மேனிப் பாஅய பசப்பே"[44]**

என்கின்றது.

இளமை நிலையாமை உணர்ந்து தலைவன் பொருளீட்டும் நோக்கோடு சென்றவன் தன் நெஞ்சிற்கு கூறுவதாக குறுந்தொகை,

**"மறப்பு அருங் காதலி ஒழிய**

**இறப்பல் என்பது ஈண்டு இளமைக்கு முடிவே"[45]**

என்று தலைவியை மறந்து பொருளீட்ட செல்வதால் இளமையின் இன்பம் பயனின்றி அழியும் என்று கூறுகின்றான். இதனால் தலைவன் வாயிலாக இளமை நிலையாமை உணர்த்தப்படுகின்றது.

தலைமகன் சிறைப்புறத்தானாக தோழி சொல்லெடுப்பத் தலைமகள் கூறுவதாக அகநானூறு இதனை,

**"................நாடன்**

**நிலையா நல்மொழி தேறிய நெஞ்சே"[46]**

என்று அவன் கூறிய நிலையில்லாத வார்த்தைகளை எண்ணி வருந்துகின்றேன் என்ற அடிகள் மூலம், சொன்னச் சொல்லும் மாறும் தன்மையது என்றறியலாம். மேலும், தலைமகளைப் பிரிந்த தலைவி, தோழியிடம் அழகு நிலையாமையை ஓர் எடுத்துக்காட்டு மூலம் விளக்குமுகமாக அறியவைக்கிறது அகநானூறு,

**"திதலை மாமை தளிர் வனப்பு அழங்குப்**

**புதல்இவர் பீரின் எதிர்மலர் கடுப்பப்**

**பசலை பாய்ந்த நுதலேன் ஆகி**

**எழுது எழில் மழைக்கண் கலுழ நோய் கூர்ந்து"[47]**

என்ற அடிகளின் மூலம், உடலில் தோன்றும் வேறுபாடுகளைக் காட்டி இளமை நிலையாமை, அழகு நிலையாமை சுட்டப்படுகிறது. கால நிலையாமையும் அழகு, இளமை இவற்றோடு தொடர்புடையது என்பதனை அகநானூறு,

**"நாளது செலவும், மூப்பினது வரவும்**

**அரிது பெறு சிறப்பின் காமத்து இயற்கையும்"[48]**

என்கின்றது.

தலைவன் போருக்குச் சென்றதால் தலைவி தன் அழகு குன்றி வருந்துவாள் என்பதைப் பதிற்றுப்பத்து,

**“நாணு மலி யாக்கை வாள்நுதல் அரிவைக்கு**

**யார்கொல்? அளிவை..”[49]**

என்கின்றது. இதனை புறநானூறும்,

**“இன்னுயிர் நடுங்குந்தன் இளமைபுறங் கொடுத்தே”[50]**

என்ற பாடலில் பெருங்கோப்பெண்டு தீயில் பாயும் காட்சியைக் கண்ட புலவர் வருந்தும் நிலையைக் காட்டி, இளமை நிலையாமையை உணர்த்துகிறது. ஒரு துறவியின் இளமைக் காலத்து உடலழகையும், இன்று அவனுடைய முதுமைத் தன்மையும் காட்டி இளமை நிலையாமைப் படம்பிடித்துக்காட்டுகிறது புறநானூறு.

**“கறங்குவெள் அருவி ஏற்றலின் நிறம்பெயர்ந்து**

**தில்லை அன்ன புல்லென் சடையோடு**

**அள்இலைத் தாளி கொய்யு மோனே**

**இல்வழங்கு மடமயில் பிணிக்கும்**

**சொல்வலை வேட்டுவன் ஆயினன் முன்னே”[51]**

புறப்பாடல்களில் சில இளமை நிலையாமையிலேயே அழகு நிலையாமையும், இன்ப நிலையாமையையும் குறிப்பாக உணர்த்துகின்றன.

உடலைப்பெற்று மனிதன் செல்வத்தையும் அடைகின்றான். அவனிடமுள்ள இளமை கொண்டு இன்பம் துய்க்கின்றான். அந்த இளமை, இன்பம் இரண்டும் நிலையில்லாதவை. இளமை நிலையில்லாதது என்பதைச் சூரியனைக் காட்டியும், இளங்கன்றை எடுத்துரைத்தும் விளக்குவதனை திருமந்திரம்,

**“கிழக்கெழுந்தோடிய ஞாயிறு மேற்கே**

**விழக்கண்டுந் தேறார் விழியிலா மாந்தா்**

**குழக்கன்று மூத்தெரு தாய்ச்சில நாளில்**

**விழக்கண்டுந் தேறார் வியனுல கோரே”**[52]

என்ற பாடலின் மூலம் இளமை, இன்பம் இவை நிலையில்லாதவை என அறியமுடிகிறது. மேலும்,

**“தேய்ந்தற் நொழிந்த இளமை கடைமுறை**

**ஆய்ந்தற்ற பின்னை அரிய கருமங்கள்”**[53]

**“கூறுங் கருமயிா் வெண்மயி ராவது**

**ஈனும் பிறப்புமொ ராண்டெனும் நீரே”**[54]

**“எய்திய நாளில் இளமை கழியாமை”**[55]

என்ற திருமந்திர அடிகளின் மூலம், இளமை நிலையாமை தெள்ளத் தெளிவாகின்றது.

உடலில் இளமை உள்ளபோதே நிலையாமை உணா்வினைச் சிலப்பதிகார இலக்கியம் மாடலன் அறிவுரை கூறும்போக்கில்,

**“இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையா**

**உளநாள் வரையாது ஒல்லுவது ஒழியாது”**[56]

என்கின்றது. மணிமேகலையில் விசாகை, தருமதத்தனிடம்,

**“இளமையும் நில்லா; யாக்கையும் நில்லா;**

**வளவிய வான்பெரும் செல்வமும் நில்லா;”**[57]

என்று கூறி, இளமையிருந்தால்தான் உடலைப் பாதுகாத்துச் செல்வத்தைத் துய்க்க இயலும் என்பதை, உணர்த்தும் போக்கில் இளமை நிலையாமையை முன்னர் வைத்து அதற்கு முதன்மைத் தந்துள்ளார் சீத்தலைச்சாத்தனார்.

உடலிருந்து உயிர் நீங்குவது இயற்கையானதொன்றாகும். அதுபோலவே, இளமை மாறி முதுமைபெறுவதும் தவிர்க்கமுடியாத ஒன்றாகும். நாலடியார் இதனை,

**“பனிபடுசோலைப் பயன் மரம் எல்லாம்**

**கனி உதிர்ந்து வீழ்ந்தற்று இளமை”[58]**

என்கின்றது.

தலைவன், தலைவி மீது கொண்ட மோகத்தின் காரணமாக அவள் நலனை உண்டு சென்றுவிடுகிறான். நீண்ட நாட்களுக்குப் பிறகு தலைவி மீது மோகம் தோன்ற, பாணனை வாயில் வேண்டி அனுப்புகிறான். தலைவியிடம் வாயில் வேண்டி வந்த பாணனுக்கு, வாயில் மறுத்ததோடு இளமைநிலையில்லாததையும் குறிப்பாக உணர்த்துவதைத் திணைமொழி ஐம்பது,

**“வேனிற் பருவத் தெதிர்மல ரேற்று ஊதுங்**

**கூனிவண் டன்ன குளிர்வயல் நல்லூரன்**

**மாணிழை நல்லார் இளநல முண்டவர்**

**மேனி யொழிய விடும்”[59]**

இப்பாடலில் எதிரில் அகப்பட்ட மலரிலுள்ள தேனையெல்லாம் சுவைத்துப் பறந்து செல்லும் வண்டினைப் போலத் தலைவன் தலைவியின் இளமை நலத்தைக் கைக்கொண்டு அவளது மேனியழகு நீங்கியவுடன் பிரிந்துச் சென்றான். இத்தகைய,

தன்மையுடைய தலைவனது உறவே எமக்கு வேண்டியதில்லை என்று கூறி, தலைவி வாயில் மறுத்த செய்தி இளமை நிலையற்றது என்ற கருத்து இடம்பெற்றுள்ளது. இதே கருத்தை, மையமாக வைத்து 'கைந்நிலை'யில் ஒரு பாடல் வந்துள்ளது.

**"மூத்தேம் இனிப்பான முன்னாயின் நாம் இளையேம்**

**கார்த்தண் கலிவயல் ஊரான்"[60]**

முன்னாளில் இளமையுடையவராக இருந்த நாம், இந்நாளில் முதுமை அடைந்ததே தலைவன் எமை நீங்கக் காரணம், என்று இளமை நிலையில்லாததைப் பாணனுக்குச் சுட்டி, தலைவி வாயில் மறுத்தாள் எனும் இப்பாடல் இளமை நிலையில்லாததை விளக்குகின்றன.

திருவருட்பா, மனிதனின் வாழ்நாளை அவனது இளமையின் கால அளவினை உதாரணங்கள் காட்டி விளக்குகின்றன. இளமையின் தன்மையினைப் பகலில் கொண்ட மாறுவேடம் பளிச்சென்று வெளியாகி விடுவதுபோலவும், வஞ்சனையானது நெடுநாள் மறைந்திராமல் வெளிப்படுவது போலவும், மாலை நேரத்தின் முன்வெளிச்சத்தில் மஞ்சள் வெயில் தோன்றி மாறிவிடுவது போலவும், மேகத்தில் தோன்றும் வானவில் விரைந்து மறைவது போலவும், நீரில் தோன்றும் குமிழி நொடியில் இல்லாமல் உடைந்துபோவது போலவும், கொல்லனுலையில் அனலுக்காக ஊதப்பெறும் துருத்தியானது உட்புறம் காற்றிழுத்தபோது, புடைத்துக்காணப்பட்டு, அழுத்தியவுடன் ஒடுங்கிவிட்டது போலவும், மிக விரைந்து மறைந்துபோகும் இளமை எனத் தெள்ளத்தெளிவாக விளக்குகிறார் வள்ளலார். இதனை,

**“........................... பருவம் நேர்**

**கண்டொழியும் இளமைதான் பகல்வேட மோ”[61]**

என்ற அடிகளின் மூலம் இளமை, இன்பம் இவை நிலையற்றவை என அறியமுடிகின்றது.

**விரைந்தழியும் இளமை**

தலைவன் பரத்தையொடு சென்று நீராடிபின் தன் இல்லம் திரும்பித் தலைவியைப் பாராட்டுகிறான். தலைவி, அவன் பரத்தையுடன் நீராடிய செயலை அறிந்திருந்தாலும், தலைவி புதல்வனை ஈன்றெடுத்தக் காரணத்தால் அவளின் இளமை விரைந்தழிந்து முதுமை தோன்றியது என்ற செய்தி அகநானூற்றில் ஆறாம் பாடலில் இளமை விரைந்தழியும் என்ற கருத்தில்,

**“.................கழாஅர் அன்னளம்**

**இளமை சென்றுதவத் தொல்ல∴.தே**

**இனிமை எவன் செய்வது பொய்ம்மொழி எமக்கே?”[62]**

என்ற பாடலில் புதல்வனை ஈன்றெடுத்ததால் தலைவியின் இளமையில் மாற்றம் ஏற்பட்டு முதுமை தோன்றியது. அதை உணர்ந்த தலைவன் பரத்தையரை நாடிச்சென்றான். இப்பொழுது இங்கு வந்து எனது மார்பின் தோலையும், கற்பினையுடைய புதல்வன் தாய் என்று பொய்மொழி கூறி என்னுடைய முதுமையை இகழாமல் இருக்கவேண்டும் என்று கூறுகிறாள்.

இளமை நிலையில்லாதது போல், வாழ்வும் நிலையில்லாதது என்ற கருத்தில் கலித்தொகை அடிகளும் வலியுறுத்துகின்றன.

**“வளியினும் வரைநில்லா வாழும்நாள் நும்ஆகத்து**

**அளிஎன உடையேன்யான் அவலங்கொண்டு; அழிவலோ?”[63]**

என்ற வரிகளில் வாழ்வானது காற்றைப்போல ஓர் அளவில் நிற்காது விரைவில் அழியும் தன்மையுடையது என்று கூறுகின்றன. இதே கருத்தில் ஐங்குறுநூறும்,

**“களிறு பிடிதழீஇப் பிறபுலம் படராது**

**பசிதின வருந்தும் பைதறு குன்றத்துச்**

**சுடர்த்தொடிக் குறுமகள் இணைய**

**எனைப்பயம் செய்யுமோ விடலைநின் செலவே?”[64]**

என்று இளமை பொருந்திய இவள் உன்னுடைய பிரிவினை ஆற்றாது அழுது புலம்பும்படி நீ பிரிந்து செல்லுவதால் என்ன பயன் நேரப்போகின்றது. ஒரு பயனும் தராது என்று தோழி கூறுகிறாள். இப்பாடலில் ‘குறுமகள்’ என ஆசிரியர் கூறக்காரணம் அவள் குறுமகளாக உள்ள காலம் சிறிதே என்றும், அவள் இளமை விரைந்தழியும் தன்மையுடையது என்பதே ஆகும்.

யாக்கையின் ஒரு குறிப்பிட்ட பருவம் இளமையாகும். அந்த இளமையில் அழகும், அழகின் ஈடுபாட்டால் காமமும், காமத்தால் இன்பமும் ஏற்படுவதால் இவை மூன்றும் இளமையில் அடங்கும். இதை பெண்ணாசை என்று சித்தர்கள் கூறி வெறுக்கின்றனர். இவற்றால் விளைவது இன்பமல்ல துன்பமே என்றும், அவர்களது அழகு நிலையாமையைக்காட்டியும், எமனது வருகையைக் காட்டியும் அச்சுறுத்தும் வகையில் பாடல்கள் அமைந்துள்ளன.

**“மலக்குடம் மீதினிலே மஞ்சள் பூச்சென்றும்**

**மல்கும் புழுக் கூட்டின்மேல் வண்ணத்தோல் என்றும்**

**சலக்குழிக்குள்ளே நாற்றஞ்சார்ந்த சேறென்றும்**

**தான் அறிந்து தள்ளினோம் என்று ஆடுபாம்பே”[65]**

என்ற பாடலின் மூலம் விரைந்தழியும் இளமை, அழகு இவற்றை துறந்து நிலையான இறைவனை நாடுவதே யாக்கையின் பயன் என்று உணர்த்துவதை அறியலாம்.

இளமையில் இன்பம் இனியது. இவை அழியும் தன்மையது. இளமையோடு தொடர்புடைய அழகு இன்பம், மாறும்தன்மையன என்பதனை,

**“காலையிலே மலர்ந்த மலர் மாலையிலே உலர்ந்து விடும்**

**மனிதர் வாலிபமும் அப்படியே வந்தது போல் சென்று விடும்**

**இதை இன்பமென்பார் சிலநாளில் - கொடும்**

**துன்பமென்பார் பல நாளில் - ஓஇன்பமில்லை - துன்பமில்லை**

**இயற்கையென்பார்”[66]**

என்று பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரனார் கூறுகின்றார்.

உடலில் உள்ள உயிர் இளமையிலேயே பிரியவும் நேரும். அப்பொழுது இளமையுடன் இன்பம், அதனுடன் தொடர்புடைய அழகு அனைத்தும் அழியும். இது அஃறிணைக்கும் பொருந்தும் என்பதனைக் கண்ணதாசன்,

**“சேற்றி லொரு**

**செங்கழுநீர்**

**ஏற்றுமணித்**

**தீபமெனச்**

**சாற்றிவைத்த வண்ணமலர் ஜனனம் - அது**

**தன்னழகினாலடையும் மரணம்”[67]**

என்ற இப்பாடலடிகள் இளமை, இன்பம், அழகு இவற்றின் நிலையில்லாதத் தன்மையைத் தெள்ளத்தெளிவாக்குகின்றது.

பட்டுக்கோட்டையாரின் வாழ்வு இளமையிலேயே முடிந்துவிட்டது என்பதைக் கண்ணதாசன்,

**“விழுது விட வந்தமகன்**
**விழுந்து விட்டான் சாவினிலே”**[68]

என்று கூறி இறப்பு என்பது இளமை, முதுமை என்று பாராமல் எக்காலத்திலும் வரும் என்பது இதன் மூலம் தெளிவாகின்றது.

## ஆற்றுக அறம்

முற்காலம் முதல் தற்காலம் வரை வாழும் ஞானியர் முதல் எளிய மனிதர் வரை அனைவருக்கும் எழும் அடிப்படை வினா வாழ்வது ஏன்? வாழ்வின் பயன் என்ன? என்பதாகும். விஞ்ஞானம் இயற்கையின் புதிர்களுக்கு விடை தேடிக் கொண்டிருக்கின்றது. மெஞ்ஞானம் வாழ்வின் புதிர்களுக்கு விடைதேடிக் கொண்டிருக்கிறது. இவ்வினாக்களுக்கு இதுவரை வாழ்ந்த ஞானியர் கண்டுள்ள விடை அறம் செய்தல் என்ற உண்மையாகும்.

சங்க கால மக்கள் இயற்கையோடு இணைந்து வாழ்ந்தனர். அகம், புறம் என வாழ்க்கையை வகுத்துக்கொண்டனர். இன்ப வாழ்வு வாழ்ந்தனர். நீதிநெறிகளைப் புகட்டும் நோக்கத்துடன் நன்னெறிகளைப் போற்றினர். புலவர்களும், அறிஞர்களும், மக்களும், மன்னர்களும் தவறுகள் புரிந்தபோது தயங்காமல் நீதிக்கருத்துக்களைக் கூறியும், எடுத்துரைத்தும், இடித்துரைத்தும் அறத்தை நிலைநாட்டினர். அறிவுரைகளை அகப்பாடலிலும், புறப்பாடலிலும் புகுத்தி அமைத்தனர்.

**“ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை”[69]**

**“புரைய மன்ற புரையோர் கேண்மை”[70]**

**“பண்பு எனப் படுவது பாடறிந்து ஒழுகுதல்”[71]**

**“வினையே ஆடவர்க்கு உயிரே”[72]**

**“திறவோர் செய்வினை அறவது ஆகும்”[73]**

**“யாதும் ஊரே; யாவரும் கேளிர்**

**தீதும் நன்றும் பிறர்தர வாரா”[74]**

**“சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே**

**நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே”[75]**

**“நல்லது செய்தல் ஆற்றீராயினும்**

**அல்லது செய்தல் ஓம்புமின்”[76]**

என்பன போன்ற நீதிகள் சங்க இலக்கியங்களில் ஆங்காங்கே காணமுடிகின்றன. அகப்பாடல்கள் காதல் சுவை நிரம்பியப் பாடல்களாக அமைக்கப்பட்ட போதும், அனைத்து நிலையாமைகளையும் வழியுறுத்தி, தோழி முதலானோர்கள் அறத்தொடு நின்று நீதிகளை எடுத்துரைத்தனர்.

இளமைப்பருவம் துடிப்பானது. கட்டுங்கடங்காத வேட்கைகளைத் தூண்டுவதாகும். ஆனால், இவ்விளம் பருவத்தில் ஆசைகளைக் கட்டுப்படுத்தி ஒழுக்கத்துடன் வாழ்தல் இம்மையில் நல்வாழ்க்கையாகவும், மறுமையில் நன்மைக் கொடுப்பதாகவும் அமையும். இளம்பருவத்திலேயே இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை உணர்ந்தவர். இளமையும் நிலைத்த தன்மையுடையது அன்று என்பதை உணர்ந்து ஒழுக்கநெறியை மேற்கொள்வர். காலையில் கிழக்கில்

தோன்றிய கதிரவன் மாலையில் மேற்கில் சென்று மறைகிறான். இளமையும் இவ்வாறானதே. சிலப்பதிகாரம்,

**“நரைமுதிர் யாக்கை நீயும் கண்டனை”[77]**

நரைமுடி கொண்டோரை கண்ணெதிரில் நாள்தோறும் காண்கின்றோம். இளமை நிலையற்றது என்பதை உணர இதைவிட வேறொன்றும் தேவையில்லை. இதனை,

**“இன்சொல் விளைநிலமா ஈதலே வித்தாக**
**வன்சொல் களைகட்டு வாய்மை எருவட்டி**
**அன்புநீர் பாய்ச்சி அறக்கதிர் ஈன்றதோர்**
**பைங்கூழ் சிறுகாலைச் செய்”[78]**

இளமைப்பருவம் தொட்டே இனிய சொற்கள், ஈகைத்தன்மை, மெய் பேசுதல், அன்புநெறி, அறநெறி ஆகியவற்றை மனதில் கொண்டு கடுஞ்சொற்களை நீக்கி வாழும் அறவாழ்வை வாழ வேண்டும் என்று அறநெறிச்சாரம் கூறுகின்றன. மேலும்,

**“காலைச் செல்வோம் என்று அறத்தைக் கடைப்பிடித்துச்**
**சாலச் செய்வாரே தலைப்படுவார் - மாலைக்**
**கிடந்தான் எழுதல் அரிதால் மற்றென்கொல்**
**அறங்காலை செய்யாத வாறு”[79]**

இரவில் படுத்தவன் தூங்கி மறுநாள் காலையில் துயில் எழுதல் இல்லாமலும் போகலாம். ஆகவே அறத்தினை இளமையிலேயே செய்வோம் என்ற உறுதியை மேற்கொண்டு செல்பவரே உயர்ந்தோராவர் என்கின்றது. இதே கருத்தை ஏலாதியும்,

**“இளமை சுழியும் பிணிமூப்பு இயையும்**

**வளமை வலிஇவை வாடும் - உளநாளால்**

**பாடே புரியாது பால்போலும் சொல்லினாய்**

**வீடே புரிதல் விதி”[80]**

என்று இளமைப்பருவம் நிலைபெறாமல் கழிந்துவிடும். நோயும், முதுமையும் வந்துசேரும். செல்வமும், உடல்வலிமையும் குன்றும். இவை கழிந்தது போக மற்ற நாளில் துன்பம் தரும் செயல்களைச் செய்துகொண்டிருக்காமல் வீடுபேறு அடைவதற்கான ஒழுக்கத்தை விரும்புதல் சிறந்தது என்று கூறும் பாடலாக இவை உள்ளன.

சங்க இலக்கியத்தில் நிலையாமைக் கருத்துகளின் அடிப்படையில் இன்பம் துய்த்து வாழும் இல்வாழ்வே சிறந்தபொருள் வாழ்வு என்று மொழியப்பட்டிருக்க, நாலடியாரிலோ இளமையும் செல்வமும் நில்லா வகையில் வாழ்வைத் துறக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. நாலடியாரில் இளமை நிலையாமைக் கருத்துக்கள் எவ்விதம் வாழ்க்கை மறுப்புக்கொள்கையாக வற்புறுத்தப்படுகின்றன என்பதை பல பாடல்கள் உணர்த்துகின்றன.

இளமை நிலையாமை அதிகாரப் பாடல்கள் இல்லற வாழ்வை ஏசிப்பழிக்கும் போக்குக் காணப்படுகின்றன. துறவறத்தை ஏற்றிப் போற்றும் பாங்கு வெளிப்படுகின்றன.

இளமைப்பருவத்தின் நிலையாமையைக் கூறுவதாக நாலடியாரில்,

**“நரைவரும் என்றெண்ணி நல்லறி வாளர்**

**குழவி யிடத்தே துறந்தார்”[81]**

முதுமைப்பருவம் வருமென்று எண்ணி இளமை பருவத்திலே வாழ்வை துறந்தவர் நல்லறிவாளர் என்று கூறுகின்றன. மேலும்,

**“................ உட்காணாய்**

**வாழ்தலின் ஊதியம் என்னுண்டாம் வந்ததே**

**ஆழ்கலத் தன்ன கலி”[82]**

கடலில் மூழ்கும் கப்பலில் இருப்போர்க்கு நேர்ந்த துன்பம் போல, இளமையில் மகிழ்ந்து வாழ்ந்தவர்க்கு முதுமையில் துன்பம் வந்து சேரும். ஆகவே, இளமையைத் துறந்து, துறவை மேற்கொண்டு வாழ்வாயாக என்று கூறுகின்றன. இதே கருத்தில் அமைந்த மற்றொரு பாடல்,

**“மற்றறிவாம் நல்வினை யாம்இளையாம் என்னாது**

**வைத்துண்டாம் போழ்தே கரவாது அறஞ்செய்ம்மின்**

**முற்றி யிருந்த கனியொழியத் தீவளியால்**

**நற்காய் உதிர்தலும் உண்டு”[83]**

நல்லறங்களைப் பின்னர் ஆராய்ந்து செய்வோம். இப்போது இளைஞராக இருக்கின்றோம் என்று நினைக்காமல் இளமை, பொருள் இருக்கும்போதே மறக்காமல் அறத்தைச் செய்துவிடுங்கள். ஏனெனில், பெருங்காற்று வீசும்போது பழங்கள் உதிராமல் இருக்க, காய் உதிர்வதும் உண்டு. அதுபோல, வயதானவர் பிழைத்திருக்க வாலிபர் இறத்தலும் உண்டு. ஆதலால், இளமை இருக்கும்போதே அறம் செய்யவேண்டும் என்று கூறுகின்றன. அதனால்தான், ஔவையாரும் சிறுகுழந்தைப் பருவத்திலேயே நல்ல பழக்கத்தை ஏற்படுத்த வேண்டுமென்பதை பாடியுள்ளார். ஒருவன் ஒரு பிறப்பில் செய்த தீவினை அடுத்து வரும் பிறவிகளிலும் அவனுக்கு ஊழ்வினையாக வந்துசேரும் என்பதனை இளங்கோவடிகள்,

**"ஊழ்வினை உறுத்துவந்து ஊட்டும்"[84]**

என்ற பாடல் வழி மூலம் தெளிவாக்கியுள்ளார்.

## இளமையின் இன்பம்

பொருளின் காரணமாகப் பிரிய கருதியத் தலைவன் அவற்றின் நிலையாமை உணர்ந்து, இளமைக்காலத்தில் தலைவியிடம் பெறும் இன்பமும் இனிமையும், ஈட்டும் பொருளில் இல்லை என்று தன் நெஞ்சிற்குக் கூறுவதாக அமைந்த நற்றிணைப் பாடல் கருத்தினை,

**"அரவுக் கிளர்ந்தனை விரவுறு பல்காழ்**
**வீடுறு நுண்துகில் ஊடுவந்து இமைக்கும்**
**திருந்துஇழை அல்குல், பெருந்தோட் குறுமகள்**
**மணிஏர் ஐம்பால் மாசுஅறக் கழீஇ,**
**கூதிர் முல்லைக் குறுங்கால் அலரி**
**மாதர் வண்டொடு"[85]**

என்று பலமணிகள் கோர்த்த மேகலை அசைய, துகிலினுள்ளே தோன்றி விளங்கி நிற்கும் அல்குலை உடைய இளம் பெண்ணுடன், அவளுடைய கூந்தலணையொடு பொருந்திக் கிடப்பதே இன்பம் என்றான். அவ்வின்பம் கருதாமல் பிரிவோரை அறியாமை உடையவர் என்றும், இளமை நிலையில்லாததை உணராதவர் என்றும் கொள்ளலாம் என்று தலைவன் கூறுவது இப்பாடலின் பொருளாகும்.

நிலையாமையை நன்குணர்ந்த தோழி பாணன் போன்றோர் தலைவனைச் செலவழுங்கச் செய்வதுண்டு. தலைவன் தலைவியின் அழகு நிலையாமையை நன்கு உணர்ந்தவன் என்பதையும், நெஞ்சோடு புலம்புவதை மேலும் ஒரு நற்றிணைப் பாடல்,

**“அருவி ஆர்க்கும் பெருனுரை அடுக்கத்து**

**..............................................**

**ஆய் நிறம் புரையுமிவள் மாமைக் கவினே”[86]**

என்ற அடிகளால் தலைவன் நிலையாமையை நன்குணர்ந்தவன் என அறியலாம். தலைவன் தலைவியை நோக்கி, இவ்வுலகே கிடைத்தாலும் உன்னைப் பிரியேன் என்று கூறும்வகையில் பின்வரும் குறுந்தொகைப் பாடல் அமைந்துள்ளது.

**“யானே குறுங்கால் அன்னம் குவவுமணற் சேர்க்கும்**

**கடல் சூழ்மண்டிலம் பெரினும்,**

**விடல்சூழ லன்யான் நின்னுடை நட்பே”[87]**

என்பதால் அறியலாம்.

இளமை நிலையில்லாதது. இளமையில் பெறவேண்டிய இன்பங்களை எல்லாம் அந்தந்தக் காலத்தில் நுகர்தல் வேண்டும். கோவலனும் கண்ணகியும் பெற்ற இன்பத்தை இளங்கோவடிகள்,

**“தொலையாத இன்பமெலாந் துன்னினார் மண்மேல்**

**நிலையாமை கண்டவர்போல் நின்று”[88]**

என்று உலக வாழ்விலே நிலையாமை உறுதி என்ற உண்மையைக் கண்டவர் போல, அவர்கள் தம்முள் பிரிதலின்றி இணைந்து இன்புற்று வாழ்ந்தனர் என்று இளமையில் பெறவேண்டிய இன்பச் சிறப்புக் குறித்து இளங்கோவடிகள் கூறுகிறார். மேலும், இவ்வுலகின்கண் யாக்கை, இளமை, செல்வம் ஆகியவற்றின் நிலையாமையை உணர்ந்து அவை உடையதாக இருக்கும் பொழுதே அதனாலாகும் இன்பத்தை நுகர்வதற்கு விரும்புவது போன்று கோவலனும்

கண்ணகியும் அவ்வின்ப ஒழுக்கத்திலே நிலைபெற்றுக் காதலின்பம் எல்லாவற்றையும் நுகர்ந்தனர் எனக் கூறுகிறார். இளமையில் பெறவேண்டிய இன்பச் சிறப்புக் குறித்து இளங்கோவடிகள் கூறுவது இங்கு சுட்டத்தக்கது.

இவ்வாறு இளமைக்காலத்தில் இன்பம் துய்ப்பதோடு, இளமை நிலையாமையை உணர்ந்து, அறம் செய்து, புகழ்பெறவேண்டும் என்ற கருத்தினை இதன் மூலமாக அறியமுடிகின்றன.

# தொகுப்புரை

- இளமை என்பது இளமைக்கு இருக்கின்ற வளர்ச்சி நிலைகளும் விளக்கப்பட்டுள்ளன.
- இளமைக்கு அகராதிகள் தரும் விளக்கம் கூறப்பட்டுள்ளது.
- சங்க கால மக்கள் இளமை நிலையாமையை எவ்வாறு உணர்ந்திருந்தன என்பது சான்றுகளும் விளக்கி கூறப்பட்டுள்ளது.
- தலைவன் தலைவியோடு இளமையில் இணைந்து வாழும் இல்லற வாழ்வே சிறந்த வாழ்க்கை என்று சங்க இலக்கியங்கள்வழி ஆராயப்பட்டுள்ளன.
- மனித வளர்ச்சிநிலைகளில் இளமைப் பருவம், இன்பம் நிறைந்த பருவம் என்ற இளமையின் அருமையை உணர்தல் வேண்டும் என்று விளக்கப்பட்டுள்ளன.
- ஒவ்வொரு மனிதவாழ்விலும் வளர்ந்துவரும் பருவநிலைகளின் தன்மைகள் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.
- முதுமை என்ற பருவமும், அதுகொடுக்கும் மாற்றங்களும், அப்பருவத்தால் முடியாத செயல்களும் விவரிக்கப்பட்டுள்ளன.
- இளமை என்ற பருவம் ஒருபோதும் நிலைத்து நிற்கும் தன்மையுடையது இல்லை என்று கூறப்பட்டுள்ளன.
- இளமை நிலையில்லாதது என்பதை உணர்ந்து, ஒவ்வொருவரும் இளமை பருவம் இருக்கும்போதே, அறத்தை செய்து புகழ்பெறவேண்டும் என்று வலியுறுத்தப்பட்டுள்ளன.
- மனித பருவத்தில் அனைவரும் இருந்துவிட நினைக்கும் பருவம் இளமைப்பருவம். அப்பருவத்தின் இனிமை விளக்கப்பட்டுள்ளன.

# இயல் - 2

## அடிக்குறிப்புகள்

1. ஔவையார், ஆத்திச்சூடி, பா.எ.29.
2. Tamil Lexicon , Vol.I , University of Madras, 1982, P.No.357.
3. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), கலித்தொகை, பா.எ.12:10-12.
4. மேலது, பா.எ.14:17-19.
5. மேலது, பா.எ.15:22-26.
6. மேலது, பா.எ.17:4-8, 12-16.
7. மேலது, பா.எ.18:7-12.
8. மேலது, பா.எ.8:19-23.
9. முக்கூடற்பள்ளு, பா.எ.117.
10. ந.மு.வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ.), ரா.வேங்கடாசலம் பிள்ளை, அகநானூறு (நித்திலக்கோவை), பா.எ.353:1-6.
11. மேலது, பா.எ.69:1-4.
12. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), புறநானூறு, தொகுதி-2, பா.எ.243:9-14.
13. பாரதிதாசன், குடும்பவிளக்கு, ப.33.
14. மேலது, பக்.33-34.
15. மேலது, பக்.34-35.
16. நாலடியார், இளமை நிலையாமை, பா.எ.13
17. மேலது, பா.எ.18.
18. திருத்தக்கதேவர், சீவகசிந்தாமணி - முத்தி இலம்பகம், பா.எ.2626:4.

19. கதிர்முருகு (உ.ஆ.), முத்தொள்ளாயிரம், பா.எ.3.

20. சீத்தலைச்சாத்தனார், மணிமேகலை, காதை.20:40-43.

21. மேலது, காதை.20:67-69.

22. பாம்பாட்டிச்சித்தர், பெண்ணாசை விலக்கல், பா.எ.55:1-2.

23. பட்டினத்தார், உடற்கூற்று வண்ணம், பா.எ.12.

24. தேவாரம், திருவாட்போக்கி-5, பா.எ.86:1:1-2.

25. மாணிக்கவாசகர், திருவாசகம், சிவபுராணம், பா.எ.84-85.

26. திருத்தக்கதேவர், மே.கா.நூ., 13 முத்தி இலம்பகம், பா.எ.2619:3.

27. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), புறநானூறு, தொகுதி-1, பா.எ.195:2-3.

28. மேலது, பா.எ.278:1-2.

29. ஆழ்வார்கள், நாலாயிரதிவ்வியபிரபந்தம், பா.எ.2797:2-3.

30. மேலது, பா.எ.3153:1-2.

31. மேலது, பா.எ.2335:1-2.

32. சேக்கிழார், பெரியபுராணம், காரைக்கால் அம்மையார் புராணம், பா.எ.50:2-4.

33. கம்பர், கம்பராமாயணம், அயோத்திய காண்டம், மந்திரப்படலம், பா.எ.3.

34. நாதகுத்தனார், குண்டலகேசி, பா.எ.9:1-6.

35. பாரதிதாசன், பாண்டியன் பரிசு, இயல்66, பா.எ.126.

36. H.A.கிருஷ்ணப்பிள்ளை, இரட்சணிய யாத்திரிகம், சோகபூமிப்படலம், பா.எ.4:2.

37. பாரதிதாசன், பாண்டியன் பரிசு, இயல் 87, பா.எ.165.

38. வெ.இராமலிங்கம்பிள்ளை, திருக்குறள் கனிகள், ப.எ.166.

39. பின்னத்தூர் திரு. அ.நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), நற்றிணை, பா.எ.10:1-4.

40. திரு. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), யசோதரகாவியம், பா.எ.79.

41. பின்னத்தூர் திரு.அ.நாராயணசாமிஐயர் (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.126:7-10.

42. மேலது, பா.எ.243:5.

43. மேலது, பா.எ.46:1-2.

44. திரு.பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), குறுந்தொகை, பா.எ.143:6-7.

45. மேலது, பா.எ.151:5-6.

46. ந.மு.வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ.), ரா.வேங்கடாசலம்பிள்ளை, மே.கா.நூ., நித்திலக்கோவை, பா.எ.348:13-14.

47. மேலது, பா.எ.135:1-4.

48. மேலது, பா.எ.353:4-5.

49. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), பதிற்றுப்பத்து, 2-ம் பத்து, பா.எ.19:14-15.

50. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-2, பா.எ.247:10.

51. மேலது, பா.எ.252.

52. திருமூலர், திருமந்திரம், பா.எ.177.

53. மேலது, பா.எ.223:1-2.

54. மேலது, பா.எ.234:3-4.

55. மேலது, பா.எ.228:1.

56. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், காதை.30:199-200.

57. சீத்தலைச்சாத்தனார், மே.கா.நூ., காதை.22:135-136.

58. நாலடியார், இளமை நிலையாமை, பா.எ.17:1-2.

59. கண்ணன் சேந்தனார், திணைமொழி ஐம்பது, 4-மருதம், ப.எ.35.

60. புல்லங்காடனார், கைந்நிலை, 3-முல்லை, பா.எ.45:1-2.

61. வள்ளலார், திருவருட்பா, பா.எ.323:2-3.

62. ந.மு.வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ.), ரா.வேங்கடாசலம்பிள்ளை, மே.கா.நூ., (களிற்றியாணை நிரை), பா.எ.6:20-22.

63. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), கலித்தொகை, பா.எ.20:9-10.

64. திரு.பொ.வே. சோமசுந்தரனார், ஐங்குறுநூறு, பா.எ.305.

65. பாம்பாட்டிச்சித்தர், பெண்ணாசை விலக்கல், பா.ள்.59.

66. பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரனார் பாடல்கள், ப.182.

67. கண்ணதாசன் கவிதைகள், பா.எ.31.

68. மேலது, பா.எ.89.

69. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.18-11.

70. பின்னத்தூர் திரு. அ.நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.1-5.

71. நச்சினார்க்கினியர்(உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.133:8.

72. திரு.பொ.வே. சோமசுந்தரனார், குறுந்தொகை, பா.எ.135:1.

73. மேலது, பா.எ.247:2.

74. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-1, பா.எ.192:1-2.

75. மேலது, பா.எ.312:2-4.

76. மேலது, பா.எ.195:6-7.

77. இளங்கோவடிகள், மே.கா.நூ., காதை-28, பா.எ.158.

78. கதிர்முருகு (உ.ஆ.), அறநெறிச்சாரம், பா.எ.13.

79. மேலது, பா.எ.14.

80. கணிமேதாவியார், ஏலாதி, பா.எ.21.

81. நாலடியார், இளமை நிலையாமை, பா.எ.11-12.

82. மேலது, பா.எ.12:2-4.

83. மேலது, பா.எ.19.

84. இளங்கோவடிகள், மே.கா.நூ., அடிகள் நீரே அருளுக. பா.57.

85. பின்னத்தூர் திரு. அ.நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.366:1-6.

86. மேலது, பா.எ.205:1-11.

87. திரு.பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), குறுந்தொகை, பா.எ.300:6-8.

88. இளங்கோவடிகள், மே.கா.நூ., காதை.2:93-94.

# இயல் - 3

## யாக்கை நிலையாமை

**முன்னுரை**

உலகில் வாழும் உயிர்கள் எல்லாம் அது தங்கியிருப்பதற்கு உரிய இடத்தை ஒரு கூட்டை உண்டாக்கிக்கொள்கிறது. அவ்வுயிர் இருக்கின்ற வரைதான் அக்கூடு இருக்கும். உயிர் பிரிந்தால் அக்கூடு நாற்றம் எடுக்கும். இதனை உணராமல் உடம்பை பெருக்குகின்றனர். உடம்பு என்பது நிலையற்றது. அந்த நிலையற்ற உடலுக்கு 'மெய்' என்று பெயர் வைத்திருக்கிறார்கள். ஏனென்றால், என்றும் நிலையான, அழியாத உயிரை அவ்வுடம்பு சுமப்பதினால் உயிர் இருக்கும் வரை மெய் என்று சொல்லுவர். உயிர் உடலைவிட்டு போய்விட்டால் அதைப் பிணம் என்றும், கூடு என்றும் கூறுவர். இதனை 'சாக்காடு' என்றும் அழைக்கின்றோம். இங்கு உடம்பு முக்கியமான பொருளல்ல. அது நிலையற்றது. நாம் உயிரைப் பெரிதென மதிப்பதில்லை. உயிர் என்று சொல்லப்படுகின்ற 'ஆத்மா'தான் இவ்வுலகில் நிலையானது என்பதை உணருவதில்லை.

சாதாரணமாக உலகில் உலாவி வருகின்ற ஆத்மா உடலில் வளர்கிறது. அவ்வுடல் இளமையிலேயே தன்னுடைய உடலையும் பொருளையும் பிறருக்காக நாட்டுக்காக தியாகம் செய்யுமானால் அவ்வாத்மா 'மகாத்மாவாக' மாறுகிறது. தன்னலம் கருதி தன் உடலையும் உடமையையும் பெரிதென நினைக்கும் ஆத்மா துன்பம அடைந்து அடுத்த பிறவியிலும் ஊழ்வினைப் பெற்று தீராப்பழியை ஏற்கிறது. எனவே, யாக்கை என்று சொல்லப்படுகின்ற உடம்பில் ஆத்மா புகழை அடைவதற்கு இடமாக இருக்கிறது.

## யாக்கை (Yakkai)

யாக்கை yakkai பெ(n.), 1.கட்டுகை tie, bond, 2.உடம்பு; body 'யாக்கை யகத்துறுப்பன்பி லவர்க்கு' (குறள்.79) "காக்கைக்கும் கழுகுக்கும் இறையாகும் இந்த யாக்கை, நீரில் எழுத்தாகும் யாக்கை…." (அறநெறி) கவா. குமரகுருபர் (யா + கு = யாகு ⟶ யாக்கு + ஐ = யாக்கை) 'யா' என்னும் பொருந்தற் கருத்து மூலத்தினின்று முகிழ்த்த - சொல் நரம்பு - நார் - எலும்பு - தசை - அரத்தம் முதலியவற்றால் கட்டுறப் பெற்றதாகிய உடம்பு, உடல் - யாக்கை"[1] என்று யாக்கையைப் பற்றி செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகராதி விளக்கம் தருகின்றது.

### யாக்கை - பெயர்க்காரணம்

யாக்கை தோல், தசை, இரத்தம், நரம்பு, எலும்பு, கொழுப்பு, மூளை போன்ற ஏழுவகைப் பொருள்களால் ஆக்கப்பட்டது. யாக்கப்பட்டதால் யாக்கை என்கின்றோம். இந்த ஏழு பொருளுக்கும் சப்த தாதுக்கள் என்று பெயர். இப்பொருள்களை உண்டாக்குவது உணவே. உணவுப்பொருள் பூமியின் சத்தினாலும், வெப்பம், நீர் முதலியவற்றின் உதவியினாலும் விளைவனவாம். ஆகவே, உணவுப்பொருள்கள் பஞ்சபூதங்களின் சாரம். அவ்வுணவுப் பொருள்கள் தோல், தசை, எலும்பு முதலியவற்றை ஆக்குவதற்கு ஏற்றவகையில் மாறுகின்றன. ஆகையால் உடம்பு என்பது பஞ்சபூதங்களின் பரிணாமம். பரிணாமம் மாறுதல் அடைந்த நிலையை, உயிரை நீக்கி உடம்பை மட்டும் கருதும்போது அது உயிரில்லாத பொருளேயாகும். இக்கருத்தை ஒட்டியே புறநானூறு உடலுக்கு உணவுக் கொடுத்தவரே உயிர் கொடுத்தவர் ஆவார் என்கிறது. உணவால் அமைவதுதான் உடல் என்பதனை,

**"நீர்இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்**

**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே**

**உண்டி முதற்றே உணவின் பிண்டம்**

**உணவுஎனப் படுவது நிலத்தொடு நீரே**

**நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு**

**உடம்பும் உயிரும் படைத்திசினோரே"[2]**

என்கிறது. மணிமேகலையும் உடல் உணவினாலாகிய ஒரு தொகுதி என்பதனை,

**"மக்கள் யாக்கை உணவின் பிண்டம்"[3]**

என்கிறது.

## உடல் - உயிர்

உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு பற்றி 'திருக்குறள் உவமை நயம்' என்ற நூலில், உயிரும் உடலும் ஒன்றாய் இந்த நிலவுலகில் நாம் அறிமுகமாகிறோம். "உயிரும் உடலும் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கிறது. ஆனால் இரண்டும் ஒன்றல்ல. உயிருக்கு உண்மையாய் இருக்கும் இடம் இந்த உடம்பல்ல. இது ஒரு தற்காலிகத் தங்குமிடம்……. காலம் வரும்போது உயிர் இந்த உடல் கூட்டை விட்டுப் பறந்து சென்றுவிடும். உயிருக்கும் உடலுக்கும் இருக்கும் உறவு ஒரு நிலையற்ற உறவு.

**"உயிர் - உருவமில்லாதது; அழிவில்லாதது.**

**உடல் - உருவமுடையது; அழியக்கூடியது."[4]**

என்று கூறுகிறது. இதனை புறநானூறு,

**“உடம்பொடு நின்ற உயிரும் இல்லை”**[5]

என்ற அடியின் மூலம் கண்ணுக்குத் தோன்றும் உடலிருந்து உயிர் நீங்கும். கண்ணுக்குத் தோன்றும் உடம்பும், தோன்றா உயிரும் ஒரே நேரத்தில் மாறும் என்பதனை மேலும் புறநானூறு,

**“உடம்பும் தோன்றா உயிர்கெட் டன்றே”**[6]

என்று கண்ணுக்கு தோன்றும் உடலும், தோன்றா உயிரும் ஒரே நேரத்தில் மாறும் தன்மையுடையது என்கிறது. இதே கருத்தினை ஔவை குறள்,

**உயிர்க்குறுதி யெல்லா முடம்பின் பயனே”**[7]

என்று உயிரால் உடல்பெறும் உறவினைக் கூறுகிறது.

வள்ளுவர் உயிர் அழியாதது என்றும், அறிவுடையதென்றும், அருவத் தன்மையுடையதென்றும் கூறுகிறார். உடம்பு அழியும் அறிவற்றது. உருவுடையது நிலையில்லாதது எனவும் விளக்குகிறார். இதனை ஒரு பறவையின் முட்டையில் தோன்றித் தனக்குரிய பருவம் வந்தவுடன் பறந்துவிடுவது போன்றே உயிருக்கு உடம்புக்கு ஆதரவாய் இருந்து பயனடைந்தவுடன் உடலைவிட்டுச் சென்றுவிடுகிறது. மீண்டும் உடலை அடையலாமென உயிர் எண்ணினாலும் உள்ளே செல்ல இயலாது என, குறள் உடலுக்கும் உயிருக்குமுள்ள தொடர்பை விளக்குகிறது. பாமரர்களும் விளங்கிக்கொள்ளும் வகையில் உடல், உயிர் பற்றிய விளக்கம் சிறப்பாக உள்ளது. நாம் உறங்கும்போது மெய், வாய், கண், செவி, மூக்கு என்ற ஐம்பொறிகளும் ஓய்வுகொள்கின்றன. அப்பொழுது உடம்புக்கு ஓரளவு அமைதி கிட்டுகிறது. அதுபோலவே உயிர்களுக்கும் ஓய்வு தேவைப்படுகிறது. இதனை இறப்பு என்கிறது. அதுபோல உயிர்களின்

மாற்றத்திற்குப் பிறப்பு தேவையாகிறது. உடம்பில் உறக்கம், விழிப்பு ஏற்படுகிறது. உயிரில் இறப்பு, பிறப்பு ஏற்படுவதனை,

**"உறங்குவது போலும் சாக்காடு உறங்கி**

**விழிப்பது போலும் பிறப்பு"[8]**

என்கிறது. மேலும் உயிருக்கு நிலையாகப் புகுந்திருக்கும் வீடு இல்லாததால் அது மாறிமாறி வினைக்கேற்ற உடலைச் சென்றடைகிறது. இதனை வள்ளுவர்,

**"புக்கில் அமைந்து இன்று கொல்லோ உடம்பினுள்**

**துச்சில் இருந்த உயிர்க்கு"[9]**

என்று திருக்குறளில் குறிப்பிடுகின்றார். மேலும், இதனை நாலடியாரும் உடலுக்கும் உயிருக்கும் உள்ள உறவினை, கூடு மரத்தில் கிடக்க, பறந்து போய்விடும் பறவைகள் போல, மக்கள் யாரையும் கேளாமல் வந்து, சுற்றங்களாய் ஒரு குடும்பத்தில் பிறந்து பிறகு உடம்பை உறவினரிடம் விட்டுவிட்டு இறந்துபோவர். இதுவே, உடலுக்கும் உயிருக்குமுள்ள உறவு என்பதனை,

**"தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும்**

**கூத்தன் புறப்பட்டக் கால்"[10]**

என்று கூறி, உயிர் உடம்பினைக் காக்கும் கூத்தனை ஒத்தது என்கிறது. இதனை திருவாசகமும்,

**"ஊசல் ஆட்டும் இவ்வுடல் உயிர் ஆயின்"[11]**

என்கிறது. ஊஞ்சலில் வைத்து இப்படியும் அப்படியும் ஆட்டுவது போன்று உன் உடலையும் உயிரையும் மீண்டும் மீண்டும் பிறக்கச் செய்கின்ற நிலையைக் கூறுகிறார். உடம்பையும் உயிரையும் பற்றித் தேவாரமும்,

**“உடம்பு எனும் மனை அகத்து உள்ளமே தகளிஆக**

**மடம்படும் உணர்நெய் சுட்டி, உயிர் எனும் திரி மயக்கி”**[12]

என்று விளக்குகிறது. சிலப்பதிகாரமும், உடலோடு கூடிய உயிர் நில்லாது என்பதனைக் கடுங்காற்றடிக்கும் வெளியிலுள்ள சிறுசுடர்போல என்று கூறுகிறது. இதனை,

**“கடுங்கால் நெடுவெளி இடும்சுடர் என்ன**

**ஒருங்குடன் நில்லா உடம்பிடை உயிர்கள்”**[13]

என்பதால் அறியலாம். மணிமேகலையும், உடம்பினை விட்டு உயிர் ஓடும் ஒரு வடிவத்தை மேற்கொண்டு வேறோர் இடம் செல்லும் என்பதனை,

**“உடம்புவிட் டோடும் உயிருருக் கொண்டோர்”**[14]

என்று கூறுகிறது. கம்பர், இலக்குவனைப் பிரிந்த இராமன் நிலையை, உடலை விட்டுப் பிரிதலில்லாத உயிர் என்று ஒன்றும் இல்லை என்பதனை.

**“ஊன் பிரிகின்றிலாத உயிர்என மறைதலோடும்”**[15]

என்ற அடியின் மூலம் இயல்பாக உடலை விட்டு உயிர் நீங்குமென அறியலாம். திருமந்திரத்தில் திருமூலரும்,

**“தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டுங்**

**கூத்தன் புறப்பட்டுப் போனஇக் கூட்டையே”**[16]

என்று கூறி, உடலுக்கும் உயிருக்குமுள்ள தொடர்பைக் காட்டி யாக்கை நிலையாமையைச் சுட்டுகிறது. உடலும் உயிரும் படும் துன்பத்தினைப் பாரதியார் கவிதைகள்,

**“விசையுறு பந்தினைப்போல் - உள்ளம்**

**வேண்டிய படிசெலும் உடல்கேட்டேன்**

**நசையுறு மனங் கேட்டேன் - நித்தம்**

**நவமெனச் சுடர்தரும் உயிர் கேட்டேன்”[17]**

என்று சக்தியைப் பாடுவதன் மூலம் உடல் உயிர் இவற்றின் தன்மைகள் உய்த்துணரப்படுகிறது.

## யாக்கையின் தன்மை

உலகில் தோன்றிய உயிர்களுக்கு இறப்பு என்பது புதுமையானது அல்ல. அது காலம் காலமாக இயல்பாய் நடந்துவரும் உண்மை. இதனை,

**“சாதலும் புதுவது அன்றே”[18]**

என்கிறது புறநானூறு.

எமனது வருகையை யார் தடுத்தாலும் தடுக்க இயலாது என்பதனை ஒரு நிகழ்ச்சியின் மூலமாக விளக்குகிறது. வானத்தில் இருந்து ஓர் எரிநட்சத்திரம் கீழ்நோக்கி விழுந்தது. கண்ட நானும் பிற இரவலரும் அஞ்சினோம். நோயில்லாமல் மன்னன் வாழவேண்டும் என்று எண்ணினோம். நாங்கள் அஞ்சியவாறே ஏழாவது நாள் அவன் வாழ்நாள் முடிந்தது என்பதனை,

**“………………………. நல்நாட்டுப் பொருநன்**

**நோய் இலன் ஆயின் நன்றுமன் தில்என**

**அழிந்த நெஞ்சம் மடிஉளம் பரப்ப,**

**அஞ்சினம், எழுநாள் வந்தன்று, இன்றே**

**மைந்துடை யானை கைவைத்து உறங்கவும்**

**திண்பிணி முரசம் கண்கிழிந்து உருளவும்**

**காவல் வெண்குடை கால்பரிந்து உலறவும்**

**கால்இயற் கலிமாக் கதிஇல வைகவும்**

**மேலோர் உலகம் எய்தினன்”[19]**

என்று இரும்பொருறையின் இறப்பினைப் பற்றி புறநானூறு கூறுகிறது. இதே கருத்தினை,

**“கடைநாள் இதுவென்று அறிந்தாரும் இல்லை**

**……………………………………………**

**……………………………………………**

**கூற்றமும் மூப்பும் மறந்தாரோடு ஓராஅங்கு**

**மாற்றுமைக் கொண்ட வழி”[20]**

என்று கலித்தொகை பாடலால் அறியலாம்.

உயிரை எந்த நேரம் வேண்டுமானாலும் எமன் கொண்டு செல்வான். இதற்கு காலவரையறை இல்லை என்பதனை புறநானூறு,

**“உயிர்புறப் படாஅ அளவைத் தெறுவர”[21]**

என்ற அடிகளிலிருந்து உயிர் உடலில் ஊசலாடும் தன்மையது எனவும் அறியமுடிகிறது. எமன் வந்த காலத்து அவனிடமிருந்து நம்முயிரை மீட்க இயலாது என்பதனை, சீவகசிந்தாமணி,

**“கறந்துகூற் றுண்ணு ஞான்று கண்புதைத் திரங்கினல்லால்”**

**இறந்தநாள் யாவர் மீட்பார் இற்றெனப் பெயர்க்கலாமோ”[22]**

என்பதனால் அறியலாம். இதனை கம்பரும்,

**"பொன்றுதல் ஒரு காலத்தும் தவிருமோ பொதுமைத்து அன்றோ"**[23]

என்ற அடிகளின் மூலம் யாக்கையின் தன்மை, உடலை விட்டு உயிர் நீங்குவதே என அறியலாம். மேலும் கம்பர்,

**"என்பு பெறாத இழிபிறவி எய்தினும்"**[24]

என்று இரணியன் வதைப் படலத்தில் பிரகலாதன் நரசிங்க பெருமானைப் பார்த்து, யாக்கையின் இழிவைக் கூறுவதாக இப்பாடலடி அமைந்துள்ளது. இதனை தேம்பாவணியும் இன்று இருப்பவர் நாளை இல்லை என்ற தன்மையைக் காட்டி,

**"இன்றுளார் நாளையே இரப்ப ரன்றி"**[25]

என்கிறது. இதனை தாயுமானவர் பாடல்,

**"இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்**

**றெண்ணவோ திடமில்லையே"**[26]

என்று யாக்கையின் நிலையற்றத் தன்மையைக் கூறுகிறது.

திருவருட்பாவில் உடம்பினைப் பொய்யென்றும், நிலையில்லாதது என்றும் கூறுவதனை,

**"வெய்ய உடல் பொய்"**[27]

**"நிலை யற்ற தேகம்"**[28]

**"நீரின் மேல் எழுதும் எழுத்தினும் விரைந்து**

**நிலைபடா உடம்பினை"**[29]

**"நொடிக்குளே மறையும் உடம்பு"**[30]

**"பொய் கொண்ட மெய்"**[31]

**"அழியுடம்பை"**[32]

**"பொய்யுடல்"**[33]

என்பவற்றால் அறியலாம். நிலையாமையே உறுதியுடையது என்பதனை கண்ணதாசன்,

**"நிர்வாண மேனிதான் இறைவன் கொடுத்ததே!**
**நிர்வாணம் இறுதி யாகும்**
**நில்லாத பருவமே நிமலன் கொடுத்ததே**
**நில்லாமை உறுதியாகும்!"**[34]

இதனையே, பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம அவர்கள், யாக்கையின் தன்மையை,

**"கருவுலகில் உருவாகி - மருவுலகில் வரும் நாளைக்**
**கண்டறிந்து சொல்வாருண்டு - இந்தத்**
**திருவுடலில் குடியிருக்கும் சீவன் பிரியும் நாளைத்**
**தெரிந்தொருவர் சொன்னதுண்டோ?"**[35]

என்று கூறுகின்றார்.

**"உயிர் பிரிந்த பின்னே - இது**
**ஒன்றுக்கும் உதவாத மண்ணே"**[36]

என்று கூறி யாக்கையின் தன்மையை எளிமையாக உணர்த்துகிறார்.

## உறவு - யாக்கை இரண்டுக்குமுள்ள தொடர்பு

போர்க்களத்தில் இறந்த வீரனோடு தொடர்புடைய உற்றார், உறவினர், நண்பர்கள் வருந்தும் பாடல்களைக் 'கையறுநிலைப் பாடல்கள்' என்பார்கள்.

இப்பாடல்கள் மூலம் உறவும் நிலையில்லை. யாக்கையும் நிலையில்லை என்பது உணர்த்தப்படுகிறது. உயிருக்கு உயிராக விளங்கும் தாய் - மகன் உறவு, கணவன் - மனைவி உறவு, அரசர்கள் - புலவர்கள் உறவு இவைகளைக் காட்டிடும் யாக்கை நிலையாமைப் பாடல்கள் புறநானூற்றில் அமைந்துள்ளன.

ஒரு தலைவி தலைவனைப் போர்க்களத்தில் இழந்தாள். தன் கணவனை அணைத்துக்கொண்டு, நீ இறந்துகிடப்பதை உன் தாயிடம் கூறினால், நாள்தோறும் உன்னைப் புகழும் தாயின் நிலை என்னவாகும் என்று வருந்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

**"………………………….. நாளும்**

**ஆனாது புகழும் அன்னை**

**யாங்கு ஆகுவள்கொல்? அளியல் தானே!"[37]**

என்று புறநானூறு, போர்க்களத்தில் மகனை இழந்த தாய் வருந்துவதாக அமைந்த இப்பாடல், யாக்கை நிலையாமை மூலமாக உறவு நிலையாமையை கூறுகிறது.

கணவனை இழந்த மகளிர் அடையும் துன்பம் எல்லையில்லாதது. வார்த்தைகளால் கூறமுடியாதது. சுரத்திடைக் கணவனை இழந்தாள் தலைவி. கதறினாள் புலி வந்து உன் உடலைக் கொண்டுபோய் விடுமோ! என நான் அஞ்சுகிறேன். நின் அகன்ற மார்பினைத் தூக்கவும் எனக்கு உரம் இல்லையே என்று தலைவி வருந்துவதைப் புறநானூறு.

**"ஐயோ! எனின், யான் புலி அஞ் சுவலே;**

**எணைத்தனன் கொளினே, அகல்மார்பு எடுக்கவல்லேன்**

**என்போல் பெருவிதிர்ப் புறுக, நின்னை**

**இன்னாது உற்ற அறன்இல் கூற்றே!"[38]**

என்ற இப்பாடலில் காணலாம்.

கம்பராமாயணமும், போர்க்களம் புகுந்த அரக்கியர்கள் தம் கணவரைக் கண்டவுடன் அவர்களைத் தழுவினர். அவர்கள் உயிரும் அப்பொழுதே பிரிந்தன. அக்காட்சி கொடியினால் சுற்றப்பட்ட பெரிய மரங்களைப் போல, அரக்கர்கள் திகழ்ந்தனர் என அவலக் காட்சிகளைக் காட்டி, யாக்கை நிலையாமையோடு உறவுநிலையாமையை,

**"புல்லிமுற்றிய உயிரினர் பொருந்தினர் கிடந்தார்**

**வல்லி சுற்றிய மாமரம் நிகர்த்தனர் வயவர்"[39]**

என்கிறது. இராவணனை இழந்த அவன் மனைவி மண்டோதரி புலம்பலானாள். தேவர்களுக்கும், திசையானைகளுக்கும், சிவனுக்கும், பிரம்மனுக்கும், திருமாலுக்கும் மற்றும் எத்தன்மை வாய்ந்தோருக்கும் வலியவனான உனக்கு இறப்பு வராது என எண்ணியிருந்தேன். உன்னை எவராலும் அழிக்க இயலாதே எனவும் எண்ணினேன். மூன்றரைக் கோடி ஆயுள் உள்ள நீயோ, வீரமரணம் அடைந்தாயே! என்று புலம்புவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

**"அரைகடை இட்டு அமைவுற்ற முக்கோடி ஆயவும்"[40]**

என்ற அடிகளின் மூலம் இராவணன் நீண்ட ஆயுளைப் பெற்றவன் எனவும் அறியலாம். பிறந்த உயிரை எப்படிப் பேணிப் பாதுகாத்தாலும், உயிர் உடலைவிட்டு நீங்கும் நேரம் வந்தால் நீங்கிவிடும் என்ற உண்மையும், உறவு நிலையில்லாதது என்றும் உணரலாம்.

கணவனை இழந்த கண்ணகி, பாண்டியன் முன்னிலையில் உண்மையை உணர்த்த, பாண்டிமாதேவி வருந்தினாள். உயிர்ந்துறந்தாள் எனச் சிலம்பு கூறுகிறது.

**“கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்என்று**

**இணையடி தொழுது வீழ்ந்தனளே மடமொழி”[41]**

என்பதனால் உறவு யாக்கையும் நிலையில்லாதது என்பதை அறியலாம்.

தலைவி தலைவனைப் பிரிந்து வாடுகின்ற நிலையைக் கண்ட தோழி கூறும் கூற்றாக நந்திக்கலம்பகத்தில் அமைந்த பாடல் ஒன்று,

**“ஆவி அனந்தமுண் டோஉயிர் தான்விட் டகலுமுன்னே”[42]**

மனைவியை இழந்து வாடும் தலைவனின் துன்பநிலை புறநானூற்றில் வெளிப்படுகிறது. கள்ளிவளர்ந்த சுடுகாட்டிலே விறகு அடுக்கிய ஈமத்தின் கண், அழற்பாயலிலே அவளைக்கிடத்தினேன். அம்மடவாள் மேலுலகம் போய்விட்டாள். ஆனால், நான் இறவாமல் இருக்கின்றேனே! என்று,

**“நாங்கர் மாய்ந்தனள் மடந்தை**

**இன்னும் வாழ்வல்; என் இதன் பண்பே!”[43]**

என்று கூறுகிறான். அரிச்சந்திரப்புராணத்தில், அரிச்சந்திரன், சந்திரமதி இவர்கள் வாழ்வில் ஏற்பட்ட சோதனைகளையும், அதனை வென்ற அவர்களது உள்ளத் திண்மையையும் கூறும் கதையோட்டத்திற்கிடையே நிலையாமைக் கருத்துக்களும் கூறப்பட்டுள்ளன.

**“ஒன்றிலாத உயிரினை யோம்பியே**

**பொன்றிலாது புலையனுக் காட்பட்டான்**

**வென்றி வேந்தினி மீட்கத் தகுவனோ**

**என்றி றந்தனை யோவென் றியம்பினான்"[44]**

என்ற இப்பாடல் உடலின் இழிவினையும், மகனை இழந்த தந்தை வருந்தும் நிலையில் உறவு நிலையாமை சுட்டப்படுகிறது.

சங்க காலத்தில் கணவனை இழந்த பெண்கள் மறுமணம் செய்துகொள்ளாமல் தனித்து விரத வாழ்க்கை வாழவேண்டும். அதற்கு 'கைம்மை நோன்பு' என்று பெயர் இல்லையென்றால், உடன்கட்டை ஏறி கணவனுடன் இறத்தல் வேண்டும். இவற்றின் கொடுமையைக் கூறும் பாடல்கள் புறநானூற்றில் உள்ளன. அவற்றில் கைம்மை நோன்பின் கொடுமையைக் காட்டும் பாடல்களைப் பாடிப் புலவர்கள் உறவு, யாக்கை நிலையாமையைச் சுட்டுகின்றனர். கணவனை இழந்தப் பெண்கள் கடைப்பிடிக்கக் கூடிய கைம்மை நோன்பினைப் பற்றி,

**"கொய்ம்மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய**

**கழிகல மகடூவப் போலப்**

**புல்லென் றனையால், பல்அணி இழந்தே"[45]**

என்ற வரிகளின் மூலம் கணவனை இழந்த தலைவித் தலைமழிக்கப்பட்டும், அணிகலன்கள் அகற்றப்பட்டும், அழகிழந்து காணப்பட்டாள் என்று கூறுகிறது.

சிறிய அளவு இருக்கின்ற வெள்ளை அல்லியின் அரிசியை உண்டு கைம்மைநோன்பு இருப்பதை,

**"சிறுவெள் ஆம்பல் அல்லி உண்ணும்**

**கழிகல மகளிர் போல"[46]**

என்ற அடிகளால் அறியலாம். மேலும், அணிலின் வரிபோன்றும், வெள்ளரிக்காய் விதைபோன்றும், வெண்மையான, நெய்விடாத சோற்றுடன் எள் துவையல் சேர்த்து, புளியிட்டுக் காய்ச்சிய வேளைக்கீரையை உணவாக உண்டு கல்பரப்பிய படுக்கையைப் பாயாகப் படுத்து கைம்மை நோன்பு இருப்பதைப் புறநானூறு,

**"அணில்வரிக் கொடுக்காய் வாள்போழ்ந் திட்ட**

**காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டாது**

**அடைஇடைக் கிடந்த கைபிழி பிண்டம்**

**……………………………………..**

**பரற்பெய் பள்ளிப் பாய்இன்று வதியும்**

**உயவல் பெண்டிரேம் அல்லேம் மாதோ"**[47]

இத்தகைய கைம்மை நோன்பு இருப்பதைக் காட்டிலும் கணவனோடு உடன்கட்டை ஏறுதல் பற்றி,

**"பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்**

**நுமக்குஅரி தாகுகதில்ல, எமக்குஎம்**

**பெருந்தோட் கணவன் மாய்ந்தென அரும்புஅற**

**………………………………………….**

**நள்இரும் பொய்கையும் தீயும்ஓ ரற்றே!"**[48]

என்று கூறி யாக்கை, உறவு நிலையாமையை உணர்ந்து தலைவி, தலைவனோடு உடன்கட்டை ஏறி இறத்தலை இப்பாடல் உணர்த்துகின்றது.

இவ்வுலகில் தோன்றும் எந்த பொருளும் அழியும் என்று கூறி, அரசனுடைய மூதாதையர்களின் வள்ளன்மையை விளக்கியும், எமனது வருகையைக் காட்டியும்,

அவனுக்கு முன்பு நாட்டை ஆண்ட மன்னர்களின் எண்ணிக்கையைக் கூறியும் யாக்கை நிலையாமையை மதுரைக்காஞ்சி விளக்குகிறது.

**“........................... பல்வேல் மன்னர்**

**கரைபொருது இரங்கும் கனைஇரு முந்நீர்**

**திரையிடு மணலினும் பலரே”[49]**

என்று யாக்கை நிலையாமையை கூறுகிறது.

போரினால் வரும் அழிவு மனித மனத்தை மாற்றக்கூடிய வலிமையுடையது. அதனால் அவர்கள் உள்ளத்தில் தெளிவு பிறக்கும். அங்கு நிலையாமைக் கருத்துக்கள் வெளிப்படும். வில்லிபாரதத்தில் போர்ச்சருக்கத்தில் காட்டப்பட்டுள்ள நிலையாமை, உடல், உயிர் இவைகளின் தன்மையும், மகனைப் பிரிந்து தந்தை வருந்தும் நிலையிலும் யாக்கை நிலையாமை சுட்டப்படுகிறது. இதனை,

**“வந்தவான் றீம்பானெய்போ லுயிர்க்குயி ராகிவாழும்”[50]**

என்றும்,

**“பூதலந் தன்னில் யாவர் புதல்வரோ பிறந்தா ரையா**

**சாதலிங் இயற்கை யன்றென் றருளுடன் றடுத்த காலை”[51]**

என்பதால் அறியலாம் இவ்வடிகளின் மூலம் பசுவின் பாலில் உள்ள நெய் போல் ஆன்மா மறைந்துள்ளது என்றும், மனிதனுக்கு எந்த வயதிலும் இறப்பு வரலாம் எனவும் கூறுகின்றது.

இவ்வுலகில் அரசாட்சி புரிந்து நாட்டைக் கவர்ந்து புகழ்பெற்று விளங்கிய மன்னர்கள், கடற்கரையிலுள்ள மணலைவிடப் பலராவர் என்று கூறுகிறது. இக்கருத்தினை ஒட்டியே யசோதர காவியமும்,

**"பாரின்மேன் மனித ரியாக்கை பண்டுநாங் கொண்டுவிட்ட**

**வாரிவாய் மணலு மாற்றா வகையின வல்ல வோதான்"[52]**

என்று கூறுகிறது. அவனது வாழ்வும் நிலைத்து நிற்பதில்லை என்பதனை மதுரைக்காஞ்சி,

**"மகிழ்ந்து இனிது உறைமதி பெரும!**

**வரைந்துநீ பெற்ற நல் ஊழியையே!"[53]**

என வாழ்வு நிலையாமையை இணைத்துப் பாடுகிறது.

அரசனிடத்தில் நட்புக்கொண்டிருந்த புலவர்கள் அரசன் இறந்தபொழுது வருந்தி பாடிய பாடல்கள் புறநானூற்றில் அமைந்துள்ளன. சோழன் கரிகாலன் இறந்தது குறித்து கருங்குழல் ஆதனார்,

**"அறிந்தோன் மன்ற அறிவுடையாளன்**

**இறந்தோன்தானே; அளித்துஇவ் உலகம்!"[54]**

என்று பாடிய பாடல் உறவு, யாக்கை நிலையாமைகளை உணர்த்துகின்றன.

**"என்இவன் ஒழித்த அன்பிலாள!**

**எண்ணாது இருக்குவை அல்லை;**

**என் இடம் யாது? - மற்று இசைவெய் யோயே!"[55]**

போன்ற பாடல்களால் நண்பர்களை இழந்து தவிக்கும் புலவர்கள் பாடிய பாடல்கள் புறநானூற்றில் உறவுநிலையில்லாதது என்பதை உணர்த்துகின்றன.

## யாக்கையின் பயன்

யாக்கையைப பெற்றதன் பயன் மறுமையின்பமாகிய வீடுபேறு பெறுதலாகும். தன்னைச் சார்ந்தவர்களின் பிரிவின் மூலம் அனைத்து நிலையாமைகளையும்

உணர்ந்து எமனது வரவு, எந்நிலையிலும் நிகழும் என்பதால் செய்யவேண்டிய கடமைகளைச் செய்தல் வேண்டும்.

பதிற்றுப்பத்து ஏழாம்பத்தில் செல்வக்கடுங்கோ வாழியாதனைக் கபிலர் வாழ்த்தும்போது, அரசனே! யாக்கை நிலையில்லாதது. போரில் வெற்றி பெறுவாயாக! என்று வாழ்த்தி இவ்வுலகில் பிறந்தவர் இறப்பர். எனவே, நிலைத்த புகழ் பெறுவாயாக! என்று நிலையாமையை அறிவுறுத்தும் போக்கில் இப்பாடல் அமைந்துள்ளது.

**"வாள்முகம் பொறித்த மாண்வரி யாக்கையர்**
**………………………… மெய் சிதைந்து**
**சாந்துஎழில் மறைத்த சான்றோர் பெருமகன்"[56]**

என்பதால் அறியலாம். இதனையே நீதிநெறி விளக்கமும், இறைச்சியாலாகிய உடலானது தளர்ச்சியை அடையக்கூடியது என்று நினைத்து, புகழாகிய உடம்பைப் பெற முயலுவர் சான்றோர் என்று கூறுகிறது. இதனை,

**"களைகணாத் தம்மடைந்தார்க் குற்றுழியு மற்றோர்**
**…………………………….**
**………………………….**
**தானுடன் பட்டார்க டாம்"[57]**

என்ற இப்பாடலின் மூலம் புகழ் நிலைத்தது என அறியலாம்.

உயிருக்கு உறுதியானவைகளை அறநெறிச் சாரமும்,

**"மூப்பொடு தீப்பிணி முன்று இப் பின்வந்து**
**கூற்ற வரசன் குறும்பெறியும் - ஆற்ற**

**அறவரண மாராய்ந் தடையின ∴தல்லால்**

**பிறவரணம் இல்லை யுயிர்க்கு”[58]**

என்கிறது. இப்பாடலின் மூலம் உடம்பாகிய கோட்டையை இயமன் வந்து பிடிக்கும் முன், அறமாகிய கோட்டையை அமைத்துக்கொள்ளவேண்டும். அதுவே, உயிருக்கு உறுதி தருவது என்று கூறப்படுகிறது. சிலப்பதிகாரம் இந்நிலையை அடைய நல்லது செய்யவேண்டுமென கூறுகிறது.

**“இறந்த பிறப்பின் எய்திய வெல்லாம்**

**பிறந்த பிறப்பிள் காணாயோ; நீ!**

**வாய்மையின் வழாஅது மன்னுயிர் ஓம்புநர்க்கு**

**யாவதும் உண்டோ எய்தா அரும்பொருள்!”[59]**

என்ற அடிகளின் மூலம் பிறவித் துன்பம் தீர இறைவனை வழிபடுமாறு அறிவுறுத்துகிறது.

## யாருக்கும் யாக்கை நிலையானது அன்று

உலகில் தோன்றிய அனைத்தையும் உரிமை கொண்டாடி ஆளக்கூடியவன் மனிதன். அவனின் யாக்கையும் அழியக்கூடியது. மன்னனாக இருந்தாலும் இறக்கும்போது ஆட்சி புரிந்தநாடு அவருடன் செல்லாது என்பதை புறநானூறு,

**“நாகத்து அன்ன பாகுஆர் மண்டிலம்**

**தமவே ஆயினும் தம்மொடு செல்லா”[60]**

விண்ணுலகம் ஒத்த பகுதிகளை உடைய மண்ணுலகம் தம்முடையதே ஆனாலும், தாம் இறந்து செல்லும்போது கூடவராது என்று இவ்வரிகளில் உணர்த்தியுள்ளார் ஆசிரியர்.

இதே கருத்தை வலியுறுத்தி எழுதப்பெற்ற மற்றொரு பாடல் புறநானூற்றில்,

**“இருங்கடல் உடுத்த இப்பெருங் கண் மாநிலம்**

**உடையிலை நடுவணது இடை பிறர்க்கு இன்றி**

**தாமே ஆண்ட ஏமங் காவலர்**

**இடுதிரை மணலினும் பலரே”**[61]

என்று பெரிய கடல் சூழ்ந்த பரந்த இடத்தையுடைய உலகத்தில், உடைமரத்தின் சிறிய இலை அளவு இடமும், பிறருக்கு இல்லாமல் தமக்கே உரியதாக ஆட்சி செய்த மன்னர்கள், அலை அடித்து தள்ளும் மணலினும் பலர். அதனால், இறப்பு அனைவருக்கும் சமமானதாகும் என்பதை இதன் மூலம் அறியலாம். மேலும்,

**“………………………… சுடுபிணக்**

**காடுபதி ஆகப் போகி தம்தம்**

**நாடுபிறர் கொளச்சென்று மாய்ந்தனரே;**

**அதனால், நீயும் கேண்மதி அத்தை! வீயாது**

**உடம்பொடு நின்ற உயிரும் இல்லை**

**மடங்கல் உண்மை மாயமோ அன்றே;”**[62]

அரசர்கள் பிணம் சுடும் சுடுகாட்டை தம் இடமாக சென்று தங்கள் நாடுகளைப் பிறர்கொள்ள இறந்தனர். அதனால், நீ கேட்பாயாக! அழியாமல் என்றும், உயிரோடு இருக்கும் வாழ்வினரைக் கண்டது இல்லை. எமன் உயிரைக் கொண்டுசெல்வதும், உடம்பு அழிவதும் உண்மையானது பொய்யில்லை. யாருக்கும் யாக்கை நிலையானது அன்று என்ற கருத்தை,

**“நெஞ்சு அமர் காதலர் அழுத கணீர்**

**என்புபடு சுடலை வெண்நீறு அவிப்ப**

**எல்லார் புறனும், தான் கண்டு, உலகத்து**

**மன்பதைக்கு எல்லாம் தானாய்த்**

**தன்புறம் காண்போர்க் காண்பு அறியாதே”[63]**

என்று அன்புமிகுந்த காதலர் அழுத கண்ணீர் எரிபிணத்தின் சாம்பலை அனைக்க, அனைவரும் வெற்றி கண்ட உலகத்து மக்களுக்கு எல்லாம் இறுதியிடமாக, தன்னை வெல்வார் எவரையும் அறியாதது இச்சுடுகாடு என்று கூறுவதிலிருந்து, பிறப்பெடுத்த யாக்கை அழிந்து சுடுகாட்டை அடையும் என்று கூறுகிறது.

உலகத்தில் பிறந்தோரெல்லாம் இறந்துவிடுவர் என்பதும், இறப்பை வென்றவர் இல்லை என்ற கருத்தும் பெறப்படுகிறது.

மக்களாய்ப் பிறந்தவர் என்றேனும் ஒருநாள் அழிவது உறுதி. அதனால், உடல்மீது பற்றுவைக்காமல் இறைவன்மீது பற்று வைப்பதே சாலச்சிறந்ததாகும். உடம்பின் நிலையாமையை அறிந்தால் ஆசையை ஒழித்துவிடலாம். ‘ஆசை இல்லையேல் துன்பமில்லை’ என்றும், ‘ஆசையை ஒழித்துவிடு’ என்பதே புத்தரின் கொள்கையாகும். நால்வகைப் படையுடன் இந்த நிலவுலகை ஆளக்கூடிய அரசனாக இருந்தாலும், அவனும் ஒருநாள் இறந்துவிடுவான். உயிர் உடலை விட்டுப் பிரிந்து சென்றுவிடும். அதனால், இறக்காமல் நின்றவர் இவ்வுலகில் இல்லை. யாக்கை யாருக்கும் நிலையானது இல்லை என்பது பற்றி புலவர்கள் கூறியுள்ளனர்.

பிறப்பினால் வருவதுதான் துன்பம். பிறவியில்லாத வாழ்வே பேரின்பத்தைத் தரும். அப்பிறப்பை ஒழிக்கவேண்டுமானால் உலக பற்றுக்களைத் துறந்து மெய்ப்பொருளை உணரவேண்டும். இக்கருத்தையே மணிமேகலையில்,

**"பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்**
**பிறவா உறுவது பெரும் பேரின்பம்**
**பற்றின் வருவது முன்னது பின்னது**
**அற்றோர் உறுவது அறிகென் அருளி"[64]**

என்று கோடிகோடியாக செல்வத்தை பெற்றவராக இருந்தாலும், பல்வேறு நாடுகளை ஆட்சிசெய்யும் அரசர்களாக இருந்தாலும், இவ்வுலகில் அவர்களுடைய உடல்களும் நிலைத்து நிற்காது, என்றோ ஒருநாள் ஏதோ ஒரு சூழ்நிலையில் உடலைவிட்டு உயிர் போய்விட்டால் உடல் அழிந்துவிடும். இக்கருத்தை நாலடியார்,

**"மலைமிசைத் தோன்றும் மதியம்போல் யானைத்**
**தலைமிசைக் கொண்ட குடையர் - நிலமிசைத்**
**துஞ்சினார் என்றெடுத்துத் தூற்றப்பட்ட டாரல்லால்**
**எஞ்சினார் இவ்வுலகத் தில்"[65]**

என்ற பாடல் மலையின் மீது காணப்படும் சந்திரனைப்போல, யானைத்தலையின் மீது பிடித்தக் குடையுடைய அரசர்களும், உலகில் இறந்தனர் என இகழப்பட்டார்களே அல்லாமல், இவ்வுலகில் இறக்காமல் எஞ்சி இருந்தவர் எவரும் இல்லை. மன்னாதி மன்னர்களும் மாண்டனர் என்றதனால் யாக்கை நிலையாமை உணர்த்தப்பட்டது.

மனிதன் எவ்வளவு உயர்ந்த நிலையை அடைந்தாலும் இறுதியில் மண்தான் அவனுடைய இருப்பிடம் என்பதை,

**“நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்**

**வாளது உணர்வார்ப் பெரின்”[66]**

என்ற குறள் மூலம் வாழ்க்கையை ஆராய்ந்தால், நாள் என்பது ஒரு கால அளவைப் போல் காட்டி, உயிரை உடம்பிலிருந்து பிரித்து அறுக்கும் வாளாக உள்ளது என்று கூறுவதை அறியமுடிகிறது.

## போற்றிக் காத்த உடலின் நிலை

மனிதன் குறையில்லாமல் பிறந்து, வாழ்வாங்கு வாழ்வதே சிறப்பாகும். குறையோடு பிறப்பதும், உறுப்புகளை இழந்து வாழ்வதும் யாக்கையின் நிலையாக உள்ளது. இந்நிலையை பெற்றவர் அடையும் துன்பம் பலவாகும் என்பதனை,

**“சிறப்புஇல் சிதடும் உறுப்புஇல் பிண்டமும்**

**கூனும், மருளும், ஊமும், செவிடும்**

**மாவும், மருளும், உளப்பட வாழ்நர்க்கு**

**எண்பேர் எச்சம் என்று இவை எல்லாம்**

**பேதைமை அல்லது ஊதியம்இல் என**

**முன்னும் அறிந்தோர் கூறினர்”[67]**

என்ற அடிகளின் மூலம் குறையுடன் பிறப்பவர்களின் துன்பம் வெளிப்படுகிறது. பிறப்பிலும், வளர்ப்பிலும் குறையில்லா நிலையையே மானிடர்கள் வேண்டுவதை ஔவையார்,

**“அரிதுஅரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது**

**எனினும் கூன், குருடு, செவிடு, பேடு நீங்கி**

**பிறத்தல் அரிது”[68]**

என்று கூறுகிறார். இவ்வாறு குறைபாடுகளை நீங்கி போற்றிக்காத்த உடலின் நிலையை நாலடியார், தோலாலானப் பை இந்த உடம்பு. இவ்வுடம்பினுள் உயிர் இருந்து அறச்செயல்களைச் செய்கிறது. இவ்வுடம்பிலிருந்து உயிர் புறப்பட்ட பின்பு அவ்வுடலை நாரினால் கட்டி இழுத்தாலென்ன? நன்றாகத் தூய்மை செய்து அடக்கம் செய்தாலென்ன? கண்ட இடத்தில் போட்டாலென்ன? அதனால், பலரும் புகழ்கின்ற புகழ்தான் என்ன? பலரும் பழிப்பதால் வரும் சிறுமைதான் என்ன? ஒன்றுமே இல்லை. அதனால், இவ்வுடலை ஓம்பி மகிழாமல் அறமாகிய நற்செயல்களைச் செய்யவேண்டும் என்ற கருத்தையே,

**“நார்த்தொடுத்து ஈர்க்கிலென் நன்றாய்ந்து அடக்கிலென்**
**பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்**
**தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும்**
**கூத்தன் புறப்பட்டக் கால்”**[69]

என்ற பாடலிலிருந்து உயிர் இருக்கின்றவரைதான் உடல் நம்முடையது. உயிர் உடலைவிட்டு பிரிந்துவிட்டால் அவ்வுடல் நாறும் தன்மையுடையது. பயனற்றது என்பதை உணராமல் உடலைப் பெரிதாக எண்ணி வயிராற உண்டு உடம்பிலே ஊனைப்பெருக்கிக் கொள்கிறார்கள். இவ்வுண்மையை உணர்ந்தால் உயிர் நல்வழியை அடைவதற்கான அறங்களைச் செய்வர். இவ்வுண்மையை உணராதவர்களை தீய வழிகளில் பொருளைச் சேர்த்து தினமும், சிற்றின்பத்திலே மூழ்கி இறைமையாகிய பேரின்பத்தை மறந்து திடீரென்று மறைந்துவிடுகின்றனர். உடம்பைச் சுருக்கினால் உள்ளம் தெளிவடையும். உள்ளம் தெளிவடைந்தால் உள்ளத்திலே அறிவொளி ஏற்படும். இக்கருத்தையே,

**"ஊனினைச் சுருக்கி**

**உள்ளொளி பெருக்கி"[70]**

என்ற பாடலில் மாணிக்கவாசகர் கூறும் கூற்றால் அறமே சிறந்தது என்பதை உணர்தல் வேண்டும்.

சீவகசிந்தாமணி, போற்றிக் காத்த உடலின் தன்மையைப் புழுக்கள் மொய்க்க, மாமிசம் மூடிய போர்வை என்கிறது. மேலும், இவ்வுடல் பிணியுற்று வேதனையடையும் என்கிறது. இதனை,

**"ஊண்சேர் உடம்பென்னும் ஓங்கல் மரச்சோலை**

**தான்சேர் பிணியென்னுஞ் செந்தீக் கொடிதங்கிக்**

**கான்சேர் கவியென்னுங் காமர் மலர்வாடத்**

**தேன்சேர் மலர்மார்ப தீத்திட் டிறக்குமே"[71]**

என்கிறது. இக்கருத்தினை,

**"வாயொருபக்கம் வாங்கி வலிப்ப**

**வார்ந்த நீர்க்குழிக் கண்கள் நிழற்ற"[72]**

என்ற பெரியாழ்வார் பாசுரம் தெள்ளத்தெளிவாக்குகிறது. இந்த உடல் உழைத்து அடையும் செல்வமும் நிலையில்லாதது. அதனால், வரும் இன்பமும் வெகுவிரைவில் நீங்கும் என்கிறது சீவகசிந்தாமணி. இதனை,

**"பொழிதரு மழைமொக்குட் போகம்விட் டாசை நீக்கி"[73]**

**"……………………… போகம்**

**மின்னெனத் துறக்கும்"[74]**

என்கிறது. யாக்கையின் நிலையைக் களிமகன் கூற்றாக மணிமேகலை,

**“அழுக்குடை யாக்கையிற் புகுந்த நும்முயிர்**

**புழுக்கறைப் பட்டோர் போன்றுளம் வருந்தாது”**[75]

என்று உரைக்கிறது. இதனை நாலடியார்,

**“தோற்போர்வைமேலும் துளை பலவாய், பொய்ம் மறைக்கும்**

**மீப்போர்வை மாட்சித்து உடம்பு”**[76]

தோலை போர்வையாகவும், அதன்மேல் பலதுளைகளும் உடையது உடம்பு என்று கூறுகிறது. மேலும், உடலின் உறுப்புகள் அடையும் மாற்றங்களைக் காட்டி யாக்கை நிலையாமை சுட்டப்படுகிறது. இதனை,

**“குடரும் கொழுவும், குருதியும், என்பும்**

**தொடரும் நரம்பொடு தோலும்”**[77]

என்று நாலடியார் கூறுகிறார்.

போற்றிக் காத்த உடலின் நிலையைக் கூற வந்த தேவாரம், உடல் பிணிகள் நிறைந்தது என்பதனை,

**“ஒருமுழம் உள்ள குட்டம், ஒன்பது துளை உடைத்து ஆய்,**

**அரைமுழம் அதன் அகலம்; அதனில் வாழ் முதலை ஐந்து**

**பெருமுழைவாய்தல் பற்றிக் கிடந்து”**[78]

என்று கூறுகிறது. உடல்படும் துன்பம், உடலின் அமைப்பு இவை மூலம் யாக்கை நிலையாமை சுட்டப்படுகிறது. இந்த உடல் இறந்தபின் மண்ணுக்குச் சொந்தமாகித் துன்பங்களை அடைகிறது. இதனை,

**“ஒழுகு மாடத்துள் ஒன்பது வாய்தலும்**

**கழுகு அரிப்பதன் முன்னம்”[79]**

**“ஓட்டை மாடத்தில் ஒன்பது வாசலும்**

**காட்டில் வேவதன் முன்னம்”[80]**

**“ஊன் உடுத்தி ஒன்பதுவாசல் வைத்து(வ்)**

**ஒள் எலும்பு தூணா உரோமம் மேய்ந்து**

**தாம் எடுத்த ஊரை தவிரப் போவார்”[81]**

என்று தேவாரம் உடலின் நிலையை விளக்கி அதன் நிலையாமை சுட்டப்படுகிறது. யாக்கையை இழிவுப்படுத்துகிறது.

திருவாசகம் உடலில் உள்ள உறுப்புக்களை இழிவுப்படுத்திக் கூறி யாக்கை நிலையாமையைச் சுட்டுகிறது.

**“கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே”[82]**

என்று வஞ்சகத்தையுடைய ஐம்பொறிகளுக்கு இடமாகிய உடம்பை யாக்கை என்று அழைக்கிறது. மெய்ஞ்ஞானத்தைக் குலைக்கும் தன்மையுடையது பொறிகளாகும். அப்பொறிகளுக்கு உறைவிடம் இவ்வுடல் என்று கூறி, மீண்டும் பிறப்பு வேண்டாமென வேண்டுகிறது. புலால் நாற்றத்தையுடையதும், மாமிச மயமானதும், நோய்கள் பலவற்றிற்கு இருப்பிடமானதும் ஆகிய இவ்வுடலை நான் தாங்கியிருக்கமாட்டேன் என்று கூறி உடம்பினை வெறுக்கிறது திருவாசகம்.

**“விடக்கு ஊன் முடைந்த**

**சிதலைச்செய் காயம் பொறேன்”[83]**

**“புறம் தோல்போர்த்து எங்கும் புழு அழுக்குமூடி**

**மலம் சோரும் ஒன்பது வாயில் குடிலை**

**மலங்கப் புலன் ஐந்தும் வஞ்சனையைச் செய்ய”[84]**

**“பொத்தை ஊன் சுவர் புழுப்பொதிந்து உளுத்து அசும்பு**

**ஒழுகிய பொய்க் கூரை”[85]**

என்ற அடிகளின் மூலம் உடல் ஓயாது அழுக்காக மாறிக்கொண்டிருக்கிறது. அத்தகைய புல்லிய அமைப்பானது புறத்தில் தோலைப் போர்வையாகக் கொண்டு மூடிவைக்கப்பட்டிருக்கிறது எனவும், உடல் பல துளைகளையுடைய தன்மையுடையது எனவும் அறியலாம்.

சித்தர் பாடல்களும் உடலிலிருந்து உயிர் நீங்கியப்பின் நடக்கும் செயல்களை வரிசையாகவும் கூறுகின்றன.

**“சீயும்மலமும் செறி செந்நீரும் நிணமுஞ்**

**சேர்ந்திடு துர்நாற்றமுடைக் குடமது உடைந்தால்**

**நாயும்நரி யும்பெரிய பேயுங் கழுகும்**

**நமதெமன்றே தின்னுமென்று ஆடாய் பாம்பே”[86]**

என யாக்கையின் நிலையை வெளிப்படுத்தி யாக்கை நிலையாமை உணர்த்தப்படுகிறது. இதேக் கருத்தைக் குணங்குடி மஸ்தான் சாகிபு பாடலும்,

**“நாய்க்கு விருந்தோ நரிக்கோ புழுக்கூடு**

**தீக்கு விறகோ தெரியே நிராமயமே**

**ஈக்க ளெறும்புமுத லென்னதுவா மென்னுமுடல்**

**பேய்க்கள் தமக்குப்பெறு பேருநிரா மயமே”[87]**

இவ்வடிகள் மூலம் உயிர் போனப் பின்பு உடலின் இழிநிலையைத் தெளிவாகக் கூறுகிறது.

பாரதிதாசன் கவிதைகள் நிலையாமைக் கருத்துக்களை உணர்த்தியுள்ளன.

**“தேகம் அழிந்துவிடும்; சுற்றத்தார் செத்திடுவர்**

**……………………………………..**

**பாழுலகம் பொய்யே”[88]**

என்ற அடிகளின் மூலம் நிலையாமை பேசுபவர்களைச் சாடுகிறது. போற்றிக்காத்த உடல் அடையும் நிலைமை இவ்வாறு இலக்கியங்கள் கூறுகின்றன.

## புழுதியில் படும் யாக்கை

உடலைவிட்டு உயிர் நீங்கியப் பின் அவ்வுடல் புதைத்தல், எரித்தல், தாழிகளில் வைத்தல் என்று பல நிலைகளிலும் துன்பமடைகிறது. உயிர் போனப் பின்பு புழுதிபடும் யாக்கை மீது பற்றுக்கொள்ளாமல் இருத்தல் சிறந்தது என்று பல பாடல்கள் உணர்த்துகின்றன. புறநானூற்றில்,

**“கள்ளி வேய்ந்த முள்ளிஅம் புறங்காட்டு**

**வெள்ளி போகிய வியலுள் ஆங்கண்**

**உப்பு இலாஅ அவிப்புழுக்கல்**

**கைக்கொண்டு, பிறக்கு நோக்காது**

**இழி பிறப்பினோன் ஈயப் பெற்று**

**நிலம் கலனாக, இலங்கு பலி மிசையும்”[89]**

இப்பாடல் வரிகளில் இறந்த பின்னர், பிணத்தைப் பாடையில் கொண்டு செல்வதும், பிணத்தைச் சிதையில் கிடத்திய பின் உப்பில்லாமல் வேகவைத்த

சோற்றைப் பலி உணவாகப் படைத்து, அந்தச் சோற்றை, புலையன் பின்புறம் பார்க்காமல் நின்று மண்ணில் விட்டெறிவதும், பிணத்தை எரி ஊட்டுவதற்கு முன்னர் நிகழும் நிகழ்ச்சிகளும் சுட்டப்பெற்றுள்ளன.

இறந்த பிறகு உடலைச் சிறிது நேரம்கூட வீட்டில் வைத்திருக்கமாட்டார்கள். அதனால், யாக்கையின் நிலையாமை கருதி உடனே அறவழியில் நின்று புகழைத்தேடிக் கொள்ளவேண்டும். மனித உடல் பெறும் இன்பத்தைச் சிற்றின்பம் என்பர். நாள்தோறும் உயிர்கள் பிறப்பதையும், இறப்பதையும் கண்கூடாகப் பார்க்கிறோம். இந்த உடலை எரிப்பதற்கோ அல்லது புதைப்பதற்கோ மயானம் வரை எடுத்துச்செல்வதையும், மனைவி, மக்கள், சுற்றத்தார் அழுவதையும், மேள தாளத்தோடு இறந்த உடலை எடுத்துச்செல்வதையும் காணலாம். இதனையே நாலடியார் யாக்கை நிலையாமையில்,

**“கணம் கொண்டு சுற்றத்தார் கல்லென் றலறப்**
**பிணம் கொண்டு காட்டுய்ப்பார்க் கண்டும் மணங்கொண்டீண்டு**
**உண்டுண்டுண் டென்னும் உணர்வினாற் சாற்றுமே**
**டொண்டொண்டொ டென்னும் பறை”**[90]

என்ற பாடல் மூலம், கூட்டத்துடன் சுற்றத்தார் கூவி அழுது, பிணத்தை எடுத்துக்கொண்டுப் போய் இடுகாட்டில் இடுபவரைப் பார்த்தும் திருமணம் செய்துகொண்டு இவ்வுலகில் இன்பம் உண்டு. உண்டு என்று கருதி மயங்குகின்ற மயக்க உணர்வினை உடையார்க்கு டொண், டொண், டொண் என்று ஒலிக்கின்ற சாவுமேளம் அங்ஙனம் ஓர் இன்பம் இல்லை, இல்லை என்று சொல்லும். இவ்வுலக வாழ்க்கையை அறவழியில் செலுத்தவேண்டுமேயன்றி இதில் இன்பம் உண்டென்று மயங்குதல் கூடாது என்பதைத் தெளிவாக்குகிறது.

யாக்கையின் இழிவினையும், இடுகாட்டில் பிணங்களுக்கு செய்யப்படும் ஈமச்சடங்குகளையும் காட்டி, தவம் செய்யுமாறு திருமந்திரம் தூண்டுகிறது. உடலிலிருந்து உயிரை எமன் கவருவதற்குமுன் தவம்செய்து தன்னை உயர்த்திக்கொள்ளவேண்டும். தீயவழிகளில் செல்பவர்கள் தீவினைக்கு ஆளாகித் துன்புறுவார்கள் என்றும் கூறுகிறது.

**“சீக்கை விளைந்தது செய்வினை மூட்டிற்ற**

**ஆக்கை பிரிந்த தலகு பழுத்தது**

**மூக்கினிற் கைவைத்து மூடிட்டுக் கொண்டுபோய்க்**

**காக்கைக் குப்பலி காட்டியவாறே”**[91]

என்று உயிர் பிரிந்தப் பின் உடல் அடையும் நிலையை இவ்வாறு கூறுகின்றன. அதனால் புழுதியில் படும் யாக்கைமீது பற்றுக்கொள்ளாமல், தவம் செய்து தன்னை உயர்த்திக்கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்துகின்றன.

நம்பி நெடுஞ்செழியன் இறந்ததைக் கண்டு, மனம் வருந்திப் பேரெயின் முறுவலார் புறநானூற்றில் உடலை எரிப்பது குறித்து பாடுகிறார்.

**“காலன் என்னும் கண்ணிலி உய்ப்ப**

**மேலோர் உலகம் எய்தினன் எனாஅப்**

**பொத்த அறையுள் போழ்வாய்க் கூகை**

**‘சுட்டுக்கவி’ எனச் செத்தோர்ப் பயிரும்**

**கள்ளியம் பறந்தலை ஒருமுறை அல்கி”**[92]

என்று இரக்கமில்லாத எமன் உயிரைக்கொண்டு செல்லக் கள்ளி நிரம்பிய சுடுகாட்டில் வைத்து அவன் உடலை எரித்துவிட்டனர் என்று கூறுகிறார்.

தாழியில் புதைப்பதை, ஒரு தலைவி, தலைவனுக்குச் செய்யும் ஈமத்தாழியைக் கொஞ்சம் அகலமாக வனைக என்று கூறுகிறாள்.

**"கலம்செய் கோவே! கலம்செய் கோவே!**
**அச்சுடைச் சாகாட்டு ஆரம் பொருந்திய**
**சிறுவெண் பல்லி போலத் தன்னொடு**
**சுரம்பல வந்த எமக்கும் அருளி,**
**வியல்மலர் அகன்பொழில் ஈமத் தாழி**
**அகலி தாக வனைமோ**
**நனந்தலை மூதூர்க் கலம்செய் கோவே!"[93]**

என்றும்,

**"முதுமரப் பொத்தின் கதுமென இயம்பும்**
**கூகைக் கோழி ஆனாத்**
**தாழிய பெருங்காடு எய்திய ஞான்றே"[94]**

என்று கூறுவதன் மூலம் இறந்த உடல்களை அகலமானத் தாழிகளில் இட்டு புதைப்பதை இதனால் அறியலாம்.

## புறங்காட்டின் தன்மை

புறங்காட்டில் ஐந்து மன்றங்களின் இயல்புகள் விளக்கப்படுகின்றன. சாப்பறை முழக்கம், இறந்தவர்கள் பொருட்டு வாய்விட்டு அழுவோர் குறல், நரியின் ஊளை, ஆந்தையின் அலறல், கோட்டானின் குரல், ஆண்டலைப் பறவைகளின் ஆரவாரம் இவைகள் கடல் ஓசைபோல் இரவும், பகலும் கேட்டுக்கொண்டேயிருக்கும்.

புறநானூற்றில் முதுகாட்டின் தன்மை விளக்கப்படுகிறது.

**“களரி பறந்து, கள்ளி போகிப்**

**பகலும் கூஉம் கூகையொடு பிறழ்பல்**

**ஈம விளக்கின், பேஎய் மகளிரொடு**

**அஞ்சுவந் தன்றுஇம் மஞ்சுபடு முதுகாடு”[95]**

இதே கருத்தினை மற்றொரு புறநானூற்றுப்பாடல்,

**“பாறுபடப் பறைந்த பல்மாறு மருங்கின்**

**வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு**

**பிணம்தின் குறுநரி நிணம்திகழ் பல்ல**

**பேஎய் மகளிர் பிணம் தழுஉப் பற்றி**

**விளர் ஊன்தின்ற வெம்புலால் மெய்யர்**

**களரி மருங்கின் கால்பெயர்த்து ஆடி**

**ஈமவிளக்கின் வெருவரப் பேரும்**

**காடு முன்னினரே, நாடுகொண் டோரும்”[96]**

என்றும், மேலும்,

**“கள்ளி போகிய களரி மருங்கின்**

**வெள்ளில் நிறுத்த பின்றை, கள்ளொடு**

**புல்லகத்து இட்ட சில்அவிழ் வல்சி,**

**புலையன் ஏவ, புல்மேல் அமர்ந்து உண்டு,**

**அழல்வாய்ப் புக்க பின்னும்**

**பலர் வாய்த்து இராஅர், பருத்து உண்டோரே”[97]**

இதே கருத்தை,

**“சிறுவெள் என்பின் நெடு வெண் களிரின்**

**வாய்வன் காக்கை கூகையொடு கூடிப்**

**பகலும் கூவும் அகலுள் ஆங்கண்”**[98]

என்று சுடுகாட்டில் நெருப்புச் சட்டிகள், உடைந்த மண்டை ஓடுகள், பிணத்தைக் கொண்டுவந்த பாடைகள், பண்டங்கள் முடிந்த துணிகள், அறுத்து எறியப்பட்ட மாலைகள், உடைந்த குடங்கள், நெல், பொரி, பலியிட்ட அரிசி இவைகள் சுடுகாட்டில் எங்கு பார்த்தாலும் சிதறிக்கிடக்கின்றன. இவைகளைக் காட்டி கோதமையின் கதையினைக் கூறி, மாண்டவர் மீள்வதில்லை என்று மணிமேகலை கூறுகிறது. மேலும், இவற்றையெல்லாம் கண்ட மக்கள் வாழ்வு, செல்வம், உலகம், இளமை, யாக்கை, அழகு இவற்றையெல்லாம் நிலையானவை என எண்ணுகிறார்களே என்று மக்களுடைய பேதமையையும் சுட்டிக்காட்டுகிறது. இதனை,

**“தவத்துறை மக்கள், மிகப்பெருஞ் செல்வர்**

**ஈற்றிளம் பெண்டிர், ஆற்றாப் பாலகர்,**

**முதியோர் என்னான்; இளையோர் என்னான்**

**கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்ப; இவ்**

**அழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்**

**கழிபெருஞ் செல்வக் கள்ளாட்டு அயர்ந்து**

**மிக்க நல்லறம் விரும்பாது, வாழும்**

**மக்களிற் சிறந்த மடவோர் உண்டோ?”**[99]

என்கிறது. இதனை குணங்குடி மஸ்தான் சாகிபு பாடலும்.

**“கட்டையிற் போமுனேகட்டுபா சக்கயிறு**

**கட்டவிழ வருள் புரியவுங்**

**காலமுஞ் சென்றுசுடு காடுறையு முன்”[100]**

என்று உயிர் பிரிந்தப் பின் உடல் சேரும் இடத்தினைப் பற்றி அச்சமூட்டும் காட்சிகளால் விளக்குவதை அறியலாம்.

## அறத்தால் பெறும் பயன்

புலவர்கள், அரசர்களுக்கு நிலையாமை உணர்வினை ஊட்டப்பாடல்கள் பாடியுள்ளார்கள். நிலையாமை உணர்வு அரசனுக்கு வேண்டும், போர்க்களம் புகும் அனைவருக்கும் வேண்டும் என்பதனைப் பெருங்குன்றூர் கிழார், குடக்கோ இளஞ்சேரலிரும்பொறையின் வீரம், புகழ், மாட்சிமை, ஆளுமை இவைகளைப் போற்றிப் புகழும்போது இடையிடையே தேனில் மருந்தினைக் குழைத்துத் தருவது போலக் கூறியுள்ளார். இவ்வுலகில் யாக்கை, செல்வம் அனைத்தும் நிலையில்லாதது. ஆயினும், நிலையாமை உணர்வினை உணர்ந்து போரிலே உயிருக்கு அஞ்சாது போரிட்டு நிலைத்தப் புகழைப் பெறுவீர் என்று கூறியதுடன் போரிலே நாடு பிடிக்கும் ஆசை வெறியாக மாறாமல் இருக்கக் குறிப்பாக மனத்திற்குப் பொருந்தும் வகையில் நிலையாமைக் குறிப்பை உணர்த்துகிறார். இதனைப் பதிற்றுப்பத்து,

**“காஞ்சி சான்ற செருப்பல செய்து”[101]**

என்ற அடியால் அறியலாம்.

கூற்றம் போன்ற வலிமையுடையவர்களாகிய அரசர்கள் யாக்கை நிலையாமையுணர்ந்து, புகழ்பெறுவதற்கானச் செயல்களைச் செய்யுமாறு

பாடுகின்ற பாடல்களின் வழி நிலையாமை உணராது வாழ்பவர் நிலையாமை உணர்வுபெற்று மனத்தெளிவு கொள்வார்கள் என்கிறது புறநானூறு.

**"தாமே ஆண்டு ஏமங் காவலர்**

**இடுதிரை மணலினும் பலரே"**[102]

என்ற பாடல் நிலையாமை உணர வழிகாட்டுகிறது.

நிலையாமையை உணர்ந்தவர்கள் அருளும், அன்பும் கொண்டவர்களாகவும், அனைவரிடமும் இரக்கம் கொண்டவர்களாகவும் வாழ்வர். பிறந்தவர் இறப்பது உறுதி என உணர்ந்து நிலையானப் புகழைப் பெற அதற்கான வழிகளில் ஈடுபடுவர். நல்லனவைகளைச் செய்யும் நல்லவர்களோடே இருப்பர் என்பதனை புறநானூறு,

**"நல்லதன் நலனும் தீயதன் தீமையும்**

**இல்லை என்போர்க்கு இனன் ஆகிலியர்"**[103]

என்ற அடிகள் விளக்குகின்றன.

பிறப்பின் பயன் வீடுபேறடைவது ஆகும். பிறப்பிற்குப் பல வண்ணங்களைக் கூறி, அவற்றில் வெண்மையான பிறப்பிற் கலந்தால் வீடுபேறு கிட்டும் எனவும், அவர்கள் செம்போக்கு என்னும் நன்னெறியினைப் பின்பற்றுவார்கள் எனக் கூறி, யாக்கை நிலையாமை உணர்ந்து வீடுபேற்றிற்கு வழிபெற முயலுங்கள் என ஆசிவகன் கூற்றாக, மணிமேகலை யாக்கை நிலையாமையை சுட்டுகிறது. பிறவாமைக்குரிய வழிவகைகளைக் கூறுகிறது.

**"கரும்ம் பிறப்புங் கருநீலப் பிறப்பும்**

**பசும்ம் பிறப்புஞ் செம்ம் பிறப்பும்**

**பொன்ன் பிறப்பும் வெண்ண் பிறப்பும்**

**என்றிவ் வாறு பிறப்பினு மேவிப்**

**பண்புறு வரிசையிற் பாற்பட்டுப் பிறந்தோர்**

**கழிவெண் பிறப்பிற் கலந்துவீ டணைகுவர்"[104]**

என்று கூறி யாக்கைப் பெற்றதன் பயன் வீடுபேறு அடைதலாகும் என்று இதன் மூலம் அறியலாம்.

## உலகளாவிய அறப்புகழ்

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிய வளவன் இறந்துபட்டான். வள்ளலாக விளங்கிய அவனை அடக்கம் செய்வதற்கு ஈமக்கலம் புனைந்தான் ஒருவன். அவனிடம் கிள்ளிவளவனது புகழ் விளங்கும்படியாகப் பாடுகிறார் ஐயூர் முடவனார்.

**"கலம்செய் கோவே! கலம்செய் கோவே!**

**இருள்திணிந் தன்ன குருஉத்திரள் பருஉப்புகை**

**அகல்இரு விசும்பின் ஊன்றும் சூளை,**

**நனந்தலை மூதூர்க் கலம்செய் கோவே!**

**.............................................**

**மண்ணா வனைதல் ஒல்லுமோ நினக்கே"[105]**

தனது வள்ளல்தன்மையினால் உலகளாவிய புகழைக் கொண்ட பெரியவன் கிள்ளி வளவன், அவனுக்கு உன்னால் எப்படி ஈமக்கலன் செய்யமுடியும். அப்படி நீ செய்ய நினைத்தால் இந்தப்பெரிய உலகினைச் சக்கரமாகவும், மலையை மண்ணாகவும் கொண்டுதான் பெரிய பானையைச் செய்யமுடியும். எனவே, உன்னால் செய்ய இயலாத ஈமக்கலனைச் செய்யமுயன்றுள்ள நீ இரங்கத்

தக்கவன் என்று அந்தக் கலம் செய்பவனை என்னுவது போல் கிள்ளிவளவனின் ஈகைப் புகழைப் போற்றிப் பாடியுள்ளார்.

உலகம் புகழும் புகழினைக் கிள்ளிவளவன் கொண்டதுபோல் அதியமானும், வானளாவிய புகழ் கொண்டுள்ளான் என்று அவனது ஈமச்சடங்கின்போது ஔவையார் பாடியுள்ளார்.

**"எரிபுனக் குறவன் குறையல் அன்ன**
**கரிபுற விறகின் ஈம ஒள்அழல்,**
**குறுகினும் குறுகுக குறுகாது சென்று,**
**விசும்புற நீளினும் நீள்க - பசுங்கதிர்த்**
**திங்கள் அன்ன வெண்குடை**
**ஒண்ஞாயிறு அன்னோன் புகழ்மா யலவே"[106]**

என்று அதியமானின் உடல் எரியூட்டப்படுவதற்காக விறகுகள் அடுக்கப்பட்டுள்ளது. அதில் நெருப்புப் பற்றவைக்கப்பட்டு எரிகிறது. இந்த நெருப்பு எரிந்து அதியமானின் உடலை அழித்தாலும் அழிக்காவிட்டாலும் எனக்கு கவலை இல்லை. நிலவு போன்ற தண்ணிய கொற்றக் குடையினைக் கொண்டு நல்லாட்சி புரிந்த அதியமானின் புகழ் உடம்பு, சூரியனைப் போல் நிலைத்து நிற்கும் என்று பாடுகிறார். இங்கு அதியமானின் வள்ளல் தன்மை இரங்கற்பா வடிவம் தாங்கி வந்துள்ளது.

முந்தைய பாடலில் கிள்ளிவளவனின் உடல் புதைக்கப்பட்டது. இந்தப் பாடலில அதியமானின் உடல் எரிக்கப்பட்டது. எனவே, புதைத்தாலும் எரித்தாலும் பூத உடல்கள்தான் மறைந்தது. அவர்களின் புகழ் உடல் இந்த உலகம் உள்ளவரை நிலைத்திருக்கும் என அறியமுடிகிறது.

அதியமானின் வள்ளல் தன்மையினை நினைத்து மீண்டும் ஔவையார்,

**"சிறியகட் பெறினே, எமக்குஈயும்; மன்னே!**

**பெரியகள் பெரினே,**

**யாம்பாடத் தான் மகிழ்ந்து உண்ணும்; மன்னே!**

**சிறுசோற் றானும் நனிபல கலத்தன்; மன்னே!**

**பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தன்; மன்னே!**

**……………………………………………**

**ஈயாது வீயும் உயிர்த்தவப் பலவே!"**[107]

கள் கொஞ்சம் கிடைத்தால் அதை எமக்குக் கொடுத்துவிடுவான். மிகுதியான கள் கிடைத்தால் நாங்கள் குடித்துப் பாடும்போது எஞ்சிய கள்ளினை அவன் குடிப்பான். சிறிதளவு உணவு என்றாலும், பெரிதளவு உணவு என்றாலும் எல்லோருடைய கலத்திலும் பகிர்ந்து வழங்கும் இயல்பு கொண்டவன். எலும்பும் தசையுமான ஊனினை எல்லாம் நாங்கள் உண்ணும்படியாகத் தந்துவிட்டு அவன் பெரிய போர்களத்தில் தனித்த வீரனாக நிற்கும் இயல்பு கொண்டவன். அவனது மார்பில் தைத்த வேலானது பாணரின் கலத்தினைத் துளைத்து, இரப்போரின் கையைத் துளைத்து, பாடும் புலவரின் நாவினைத் துளைத்துவிட்டது. இனி போற்றிபாடும் புலவர்களும் இல்லை. அந்தப் புலவர்களுக்கு வழங்கும் வள்ளல்களும் இல்லை என்று அதியமானை விஞ்சும் அளவிற்கு வள்ளல் யாரும் இல்லை என்று வள்ளல்தன்மையினைப் போற்றிப்பாடியுள்ளார்.

இதுப்போன்ற இரங்கல் பாடல் ஒன்றினைக் குடவாயில் கீரத்தனார், ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் இறந்துபட்ட வேலையில் பாடியுள்ளார்.

பெருஞ்சாத்தனை இழந்து புலவர் வாடிக்கொண்டிருந்த வேளையில் முல்லைப்பூப் பூத்திருந்தது. அதனைக் கண்டு புலவர் வருந்திப் பாடியுள்ளார்.

**“இளையோர் சூடார் வளையோர் கொய்யார்**

**நல்யாழ் மருப்பின்மெல்ல வாங்கிப்**

**பாணன் சூடான்; பாடினி அணியாள்;**

**………………………………..**

**முல்லையும் பூத்தியோ, ஒல்லையூர் நாட்டே?”**[108]

இளமைத் தன்னைப் பொருந்திய வீரர்கள் முல்லைப்பூவே உன்னைச் சூடமாட்டார்கள். வளையல் அணிந்த பெண்களும், உன்னைத் தலையில் சூடுவதற்காகக் கொய்யமாட்டார்கள். உன்னைப் பறித்துத்தொகுத்து பாணன் தனது யாழினில் சூட்டமாட்டான். பாடினியும் உன்னை அணியமாட்டாள். ஏன் தெரியுமா? பல போர்களங்களில் தனது ஆண்மை வெளிப்படும்படியாகப் போர்புரிந்த சாத்தன் இறந்தப்பின் இங்கு எவரும் சூடமாட்டார்கள் என்று தெரிந்த பிறகு முல்லையே நீ ஏன் பூத்தாய்! என்று தனது துன்பத்தை வெளிப்படுத்தியுள்ளார்.

தனக்காக வாழாமல் பிறருக்காக வாழ்பவர்களுக்கு மரணமில்லை என்பதனை பொருநராற்றுப்படையில் மரணமின்மைப் பற்றியும், தெய்வநிலையை அடைதல் பற்றியும் ஒரு குறிப்பு வருகிறது.

**“தவம்செய் மக்கள் தம்உடம்பு இடாஅது**

**அதன்பயம் எய்திய அளவை மான”**[109]

ஏதோ ஒன்றுக்கு உவமை சொல்லும்போது, தவம் செய்கிறவர்கள் தவத்தின் பயனை இப்பிறவியிலேயே இந்த உடம்புடனேயே அடைவதுபோல என்று சொல்லப்படுகிறது.

கம்பர், தனது இராமாயணத்தில் சொல்கிறார். இராமன் முடிசூடுவான் என்று அறிவித்தபோது அந்தச் சபையில் இருந்தவர்கள் எல்லோரும் தங்களது பூத உடலுடனேயே சொர்க்கலோகத்துக்குச் சென்றுவந்ததுபோல உணர்ந்தார்கள் என்பதை,

**"விண்ணகம் உடலோடும் எய்தினர் ஒத்தார்"[110]**

என்று கூறுவதிலிருந்து இராமன் எத்தகைய புகழுக்குரியவன் என்பது புலனாகிறது.

மண்ணில் பிறந்த அனைவருக்கும் பிறப்பில் வேறுபாடு காண்பதும், குலத்தில் வேறுபாடு காண்பதும் இயல்பு. அவர்களுக்குள் இருக்கும் ஒருமைப்பாடான கூறுகள் சிலவே. அவற்றுள் முக்கியமான ஒன்று இறப்பாகும். இறத்தல் அனைவருக்கும் பொதுவானது. மதத்தால், இனத்தால், மொழியால், செய்தொழிலால், இன்னபிற வகையால் மாறுபட்டிருந்த போதும் அனைவரும் ஒன்றுபடுவது இறப்பில்தான் என்கிறது புறப்பாடல். இதனை,

**"மன்உயிாப்பான்மையும் கூற்றத்து ஒருமையும்**

**நின்னொடு தூக்கிய வென்வேற் செழிய"[111]**

என்னும் பாடலடிகளால் அறியலாம்.

இத்தன்மையுடைய யாக்கையின் நிலையாமை உணர்ந்து, புகழ்பெற வேண்டும் என்று உணர்த்தப்பட்டுள்ளன.

# தொகுப்புரை

- யாக்கை என்பதும், அதன் பெயர்க்காரணங்கள், அதன் வளர்ச்சிநிலைகள் குறித்து விளக்கி கூறப்பட்டுள்ளன.
- உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பை இலக்கியங்கள் வழி விவரிக்கப்பட்டுள்ளன.
- உயிருக்கு இடமான உடம்பின் தன்மைகள், அது அடையும் நிலைகள் விளக்கப்பட்டுள்ளன.
- யாக்கையின் நிலையாமையால் உறவினர்கள் படும் துன்பநிலைகளும் விளக்கி கூறப்பட்டுள்ளன.
- யாக்கையால் பெறுகின்ற மறுவீட்டுப் பயன் விளக்கப்பட்டுள்ளன.
- யாருக்கும் யாக்கை நிலையானது இல்லை. அதனால், போற்றிக்காத்த உடலின் நிலையும், அது அடைகின்ற துன்ப நிலையையும் விளக்கப்பட்டுள்ளன.
- புலவர்களும் சித்தர்களும் யாக்கையை எவ்வாறு வெறுத்தனர் என்றும், நிலையில்லாத யாக்கையின் வழி அடைய விரும்பிய புகழையும் இதன் மூலம் விளக்கப்பட்டுள்ளன.
- உயிர் நீங்கியப்பின் உடலினை அடக்கம் செய்யும் முறைகள் விளக்கப்பட்டுள்ளன.
- யாக்கையை அடக்கம் செய்யும் சுடுகாட்டின் நிலைகளை விரிவாக விளக்கி ஆராயப்பட்டுள்ளன.
- யாக்கை பெற்றதின் பயன் அறம் இயற்றிப் புகழ்பெறுதல். அவ்வாறு உலகளாவிய அறப்புகழ், பெற்ற அரசர்களை புலவர்கள் பாடிய பாடல்களின் சிறப்புக்கள் விளக்கி கூறப்பட்டுள்ளன.

# இயல் - 3

## அடிக்குறிப்புகள்

1. செந்தமிழ்ச்சொற்பிறப்பியல் பேரகராதி, எட்டாம் மடலம், முதற்பாகம், ப.7.
2. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), புறநானூறு, தொகுதி-1, பா.எ.18:18-23.
3. சீத்தலைச்சாத்தனார், மணிமேகலை, காதை-10:90.
4. நா.இராஜேந்திரன், திருக்குறள் உவமைநயம், பக்.59-60.
5. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-2, பா.எ.363-8.
6. மேலது, பா.எ.282:6.
7. வி.உ. தமிழ்ப்பிரியன், ஔவைக்குறள், பா.எ.2:18.
8. திருவள்ளுவர், திருக்குறள், கு.எ.339.
9. மேலது, கு.எ.340.
10. நாலடியார், யாக்கைநிலையாமை, பா.எ.26:3-4.
11. மாணிக்கவாசகர், திருவாசகம், அற்புதப்பத்து. பா.எ.8:1.
12. தேவாரம் : பொது 4, பா.எ.75:4:1-2.
13. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், காதை.10:174-175.
14. சீத்தலைச்சாத்தனார், மே.கா.நூ., காதை.16:93.
15. கம்பர், கம்பராமாயணம், யுத்தகாண்டம், நிகும்பலையாகப்படலம்-III, பா.எ.2888:2.
16. திருமூலர், திருமந்திரம், பா.எ.211:3-4.
17. பாரதியார் கவிதைகள், தோத்திரப்பாடல்கள், பா.எ.49:2:1-4.
18. திரு. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-1, பா.எ.192:4.
19. மேலது, தொகுதி-2, பா.எ.229:14-22.

20. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), கலித்தொகை, பா.எ.12:15-19.

21. திரு. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., (தொகுதி-2), பா.எ.283:11.

22. திருத்தக்கதேவர், சீவகசிந்தாமணி, 13 முத்தி இலம்பகம், பா.எ.2616:3-4.

23. கம்பர், மே.கா.நூ., யுத்தம், இந்திரசித் வதைப்படலம், பா.எ.3066:3-4.

24. கம்பர், மே.கா.நூ., யுத்தம், இரணியன் வதைப்படலம், பா.எ.298:3.

25. உமறுப்புலவர், தேம்பாவணி, 3-ஆம் காண்டம், வாமன ஆட்சிப்படலம், பா.எ.52:1.

26. தாயுமானவர் பாடல்கள், சச்சிதானந்தசிவம், பா.எ.72:2.

27. வள்ளலார், திருவருட்பா, பா.எ.328:2.

28. மேலது, பா.எ.118:2.

29. மேலது, பா.எ.1048:1-2.

30. மேலது, பா.எ.1049:3.

31. மேலது, பா.எ.1487:11.

32. மேலது, பா.எ.1928:6.

33. மேலது, பா.எ.1922:2.

34. கண்ணதாசன் கவிதைகள், ப.எ.60.

35. பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரனார் பாடல்கள், பா.எ.114.

36. மேலது, பா.எ.272.

37. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.),மே.கா.நூ., தொகுதி-2, பா.எ.254:10-11.

38. மேலது, பா.எ.255:1-4.

39. கம்பர், மே.கா.நூ., யுத்தம், படைத்தலைவர் வதைப்படலம்-III, பா.எ.2303:3-4.

40. மேலது, இராவணன் வதைப்படலம்-IV, பா.எ.413:1-2.

41. இளங்கோவடிகள், மே.கா.நூ., காதை-28:148-150.

42. நந்திக்கலம்பகம், பா.எ.81:3.

43. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-2, பா.எ.245:6-7.

44. அரிச்சந்திரப்புராணம், மயானகாண்டம், பா.எ.8:51.

45. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-2, பா.எ.261:17-19.

46. மேலது, பா.எ.280:13-14.

47. மேலது, பா.எ.246:3-10.

48. மேலது, பா.எ.246:11-15.

49. திரு.பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), மதுரைக்காஞ்சி, அடி.234-236.

50. வில்லிபுத்தூரார், வில்லிபாரதம், பா.எ.1:4-3.

51. மேலது, பா.எ.15:3-4.

52. யசோதர காவியம், பா.எ.39:3-4.

53. திரு.பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), மதுரைக்காஞ்சி, அடி.781-782.

54. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-2, பா.எ.224:10-11.

55. மேலது, பா.எ.222:4-6.

56. திரு.ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), பதிற்றுப்பத்து, பா.எ.67:14-18.

57. ச. மெய்யப்பன் (ப.ஆ.), நீதிநூல், நீதிநெறி விளக்கம், பா.எ.40.

58. கதிர்முருகு (உ.ஆ.), அறநெறிச்சாரம், பா.எ.105.

59. இளங்கோவடிகள், மே.கா.நூ., காதை-11:156-159.

60. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-2, பா.எ.367:1-2.

61. மேலது, பா.எ.363:1-4.

62. மேலது, பா.எ.363:4-9.

63. மேலது, பா.எ.356:5-9.

64. சீத்தலைச்சாத்தனார், மே.கா.நூ., காதை-2,64-67.

65. நாலடியார், யாக்கை நிலையாமை, பா.எ.21.

66. மேலது, கு.எ.336.

67. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-1, பா.எ.28:1-6.

68. ஔவையார், தனிப்பாடல் திரட்டு.

69. நாலடியார், யாக்கை நிலையாமை, பா.எ.26.

70. மாணிக்கவாசகர், திருவாசகம், பிடித்துப்பத்து, பா.எ.9:2.

71. திருத்தக்கத்தேவர், மே.கா.நூ., 13 முத்திஇலம்பகம், பா.எ.2797:1-4.

72. பெரியாழ்வர், பெரியதிருமொழி, பா.எ.379.:1-2.

73. திருத்தக்கத்தேவர், மே.கா.நூ., 13 முத்திஇலம்பகம், பா.எ.2651:3.

74. மேலது, பா.எ.2823:3-4.

75. சித்தலைச்சாத்தனார், மே.கா.நூ., காதை 3:94-95.

76. நாலடியார், தூய்தன்மை, பா.எ.42:1-2.

77. மேலது, பா.எ.46:1-2.

78. தேவாரம், திருக்கச்சி ஏகம்பம் 4, பா.எ.44.

79. தேவாரம், திருஆணைக்கா 5, பா.எ.31:7:1-2.

80. தேவாரம், திருவான்முயூர் 5, பா.எ.82:9:1-2.

81. தேவாரம், திருக்கழிப்பாலை 6, பா.எ.12:1:1-3.

82. திருவாசகம், சிவபுராணம், பா.எ.88.

83. திருவாசகம், நீத்தல் விண்ணப்பம், பா.எ.41:4-5.

84. திருவாசகம், சிவபுராணம், பா.எ.53-55.

85. திருவாசகம், அதிசயப்பத்து, பா.எ.7:1-2.

86. பாம்பாட்டிச்சித்தர், பா.எ.63.

87. குணங்குடியார் பாடற்கோவை, நிராமயக்கண்ணி, பா.எ.117-118.

88. பாரதிதாசன் கவிதைகள், சஞ்சீவிபர்வதத்தின் சாரல், ப.6.

89. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-2, பா.எ.2363:10-15.

90. நாலடியார், யாக்கை நிலையாமை, பா.எ.25.

91. திருமூலர், திருமந்திரம், பா.எ.147.

92. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-2, பா.எ.240:5-9.

93. மேலது, பா.எ.256:1-7.

94. மேலது, பா.எ.364:11-13.

95. மேலது, பா.எ.356:1-4.

96. மேலது, பா.எ.359:1-8.

97. மேலது, பா.எ.360:16-21.

98. மேலது, பா.எ.362:16-18.

99. சீத்தலைச்சாத்தனார், மே.கா.நூ., காதை-6,97:104.

100. குணங்குடியார் பாடற்கோவை, அகத்தீசன் சதகம்,38:5-6.

101. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), பதிற்றுப்பத்து, ஒன்பதாம் பத்து, பா.எ.84:19.

102. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-1, பா.எ.363:1-4.

103. மேலது, பா.எ.29:11-12.

104. சீத்தலைச்சாத்தனார், மே.கா.நூ., காதை, 27:150-156.

105. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-2, பா.எ.228.

106. மேலது, பா.எ.231.

107. மேலது, பா.எ.235.

108. மேலது, பா.எ.242.

109. திரு.பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.), பத்துப்பாட்டு பொருநர் ஆற்றுப்படை, அடிகள்:91-92.

110. கம்பர், மே.கா.நூ., மந்திரப்படலம், பா.எ.74.

111. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-1, பா.எ.19.

# இயல் - 4

# செல்வம் நிலையாமை

**முன்னுரை**

உலகத்தில் உள்ள பொருள்களைச் சங்ககாலப் புலவர்கள் அகப்பொருள் என்றும், புறப்பொருள் என்றும் இரண்டாகப் பிரிந்துள்ளனர். தொல்காப்பியர் தம் நூலில் 'பொருளதிகாரம்' என்ற ஒன்றைப் படைத்துள்ளார். ஆகவே, பொருள்தான் இவ்வுலக வாழ்க்கைக்கு முக்கியமானது. பொருளில்லாதவர்களை உறவினரும் மதியார். திருவள்ளுவரும் இவ்வுலக பொருளைப் பற்றி சொல்ல 'பொருட்பால்' என்ற ஒன்றை படைத்துள்ளார். பொருள்தான் உலக வாழ்க்கைக்கு உகந்தது என்றும், பொருளில்லாரை உலகம் ஒரு பொருட்டாக மதிக்காது என்பதனை,

**"இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை**

**எல்லாரும் செய்வர் சிறப்பு"[1]**

என்ற குறள் தெளிவுப்படுத்திக் காட்டியுள்ளது. பொருள் இல்லாதவர்களையும் ஒரு பொருளாக மதிக்கக்கூடிய அளவிற்கு உயர்த்துவது பொருள்தான். அப்பொருளை அறவழியிலே சேர்க்கவேண்டும். அப்படி சேகரித்தப் பொருள் பகைவரின் செருக்கையும் அறுக்கும் தன்மை உடையது. சிறந்த வழியிலே பொருளைத் தேடுகின்றவர்களுக்கு அறமும், அதனால் வருகின்ற இன்பமும் ஒருங்கே அமையும். இவ்வாறு பொருள்களின் அவசியத்தைப் பற்றி பலர் கூறி இருந்தாலும் அப்பொருள் நிலையற்றது என்பதும், அப்பொருளைப் பெற்றவர்கள் தானும் உண்டு பிறருக்கும் கொடுத்து இன்பமுற வாழவேண்டும். ஏனென்றால், எப்பொருளும் இவ்வுலகில் நிலைத்து நிற்காது இக்கருத்தையே நாலடியாரும் திருக்குறளும் 'செல்வம் நிலையாமை' என்ற தலைப்பில் செல்வத்தின் நிலையா

தன்மையைக் கூறியுள்ளார். வாழ்க்கைக்கு தேவை பொருள். ஆனால், பொருள் மட்டுமே வாழ்க்கையாகிவிடாது. அதனால் பொருள் நிலையாமையைக் கருத்தில் கொண்டு பொருளின் மேல் உள்ள பற்றுகளை நீக்கி இருக்கும்பொழுதே தருமங்களைச் செய்து புண்ணியத்தைத் தேடிக்கொள்ள வேண்டும் எனச் சங்க இலக்கியங்கள் வலியுறுத்துவதை இவ்வியலில் ஆராயப்படவுள்ளன.

## செல்வம் (Selvam)

"1.மதிப்புள்ள உடைமைகளின் தொகுப்பு; சொத்து; பொருள் வளம்; wealth riches. 'துகடீா் பெருஞ் செல்வம்' (நாலடி.2) எவ்வளவு செல்வம் இருந்து என்ன பயன். 2.செழிப்பு, வளமை, Immensity, prosperity, flourishing state; சேனையின் செல்வநோக்கி (திருவிளை. மெய்க்கா.29) 3.அழகு beauty. 'தேவரிற் பெற்ற நஞ்செல்வக்கடி' (திருக்கோ.14) 4.நுகர்ச்சி (தொல்.பொருள்.259.வரை) enjoyment, pleasure, experience of happiness. 5.மேலுலகம் (துறக்கம்) (அக.நி.); Indra's heaven, 6.கல்வி (அக.நி.) Learning 7.குழந்தை Child; 'உங்கள் செல்வங்களின் வளமான வாழ்க்கைக்குச் சொத்துச் சேருங்கள்"[2] என்ற செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகராதி செல்வம் என்பதற்கு விளக்கம் தருகிறது.

## செல்வம் என்பது எது?

செல்வம் என்று கூறும்போது உயிருள்ள, உயிரற்ற, அசையும், அசையா அனைத்தும் செல்வமாகவே கருதப்படும்.

**"நாடுநகர் வீடுமாடு நற்பொருள் எல்லாம்**

**நடுவண் வரும்பொழுது நாடி வருமோ!"[3]**

என்று பட்டினத்தாரும்,

**"வாழ்வும் மனைவியும் மக்கள் உடன்பிறந்**

**தாரு மளவே தெமக்கென்பர் ஒண்பொருள்**

**மேவு மதனை விரிவுசெய் வார்கட்குக்**

**கூவுந் துணையொன்று கூடலு மாமே"[4]**

என்ற திருமந்திர பாடலாலும் நாடு, நகர், வீடு, மாடு, நற்பொருள், மனைவி, மக்கள், உடன்பிறந்தோர் மற்றும் உள்ள பொருள்கள் அனைத்தும் செல்வமாகவே கருதப்பட்டது.

## பொருள் சிறப்பு

செல்வம் - செல்வோம் என்ற தனது நிலையாமைத் தன்மையைத் தன் பெயரகத்தே கொண்டிருந்தும், அதை அறியாத மாய உணர்வுடன் வாழும் மனம் படைத்தவன் மனிதன். செல்வம் என்பது மனிதன் தன்னுடைய தேவைகளைப் பூர்த்தி செய்துக்கொள்ளவேண்டி ஏற்படுத்திய ஒரு பொருளாகும். அப்பொருள் பிற்காலத்தில் மனிதனை தனக்கு அடிமைப்படுத்திய நிலை மிகவும் மோசமானதாகும். அச்செல்வம் எத்தகையது? அதை எவ்வாறு ஈட்டவேண்டும்? அதன் பயன் யாது? என்று அதன் அனைத்து தன்மைகளையும் சங்க இலக்கியங்களின் வழி அறியலாம்.

மக்கள் வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதது. வாழ்வில் வரும் இடர்பாடுகளைக் களைக்கக்கூடிய சக்தி பொருளுக்கே உண்டு. அறிவை அற்றம் காக்கும் என்பர். துன்பத்தை நீக்குவதற்கு அறிவு மட்டும் போதாது. பொருளும் தேவை. இல்லறம் நடத்துவதற்கு அறம், பொருள் இரண்டும் தேவை. அறம் நிரம்பிய செயல்கள் மட்டும் செய்தால் போதாது. பொருளையும் ஈட்டுதல் இன்றியமையாதது. சங்ககாலம் ஈகைக்குணம் நிறைந்தது. ஈகைக் குணத்தைச்

செயல்படுத்துவதற்கு பொருள் அவசியம். அப்பொருளை ஈட்டமுயற்சி மிகமிக அவசியம். தலைவன் பொருள்தேடச் செல்லும் இடத்து அவனது போக்கைத் தடுக்கும் முகமாகத் தலைவி சொல்லும் சொற்கள் பலவும் பொருளின் இயல்பைக் குறைத்துக் கூறித் தலைவனின் பிரிவை உயர்த்திக் கூறும் போதெல்லாம் பானையில் கசியும் நீராகப் பொருளின் சிறப்பு வெளிப்படுகிறது.

உலகில் கிடைக்கும் பொருள்கள் அனைத்துமே ஒவ்வொரு வகையில் சிறப்புடையது. ஒரு பொருளைவிடச் சிறந்த மற்றொரு பொருள் இருக்கவே செய்கிறது. பொருள்தேட பிரிவதாகக் கூறும் தலைவனிடம் தலைவி, நற்றிணையில்,

**“இனிதின் இனிது தலைப்படும்’ என்பது**

**இதுகொல்? வாழி, தோழி!”[5]**

என்று தோழியிடம் கூறுகிறாள். நீ தேடிச்செல்லும் பொருளைவிடச் சிறந்தபொருள் கிடைக்கும். இளமைக் காலத்தில் தலைவியின் மாட்டுக் கிடைக்கும் பொருள் அவை எல்லாவற்றையும் விடச் சிறந்தது என்னும் நிலையை இங்குக் காணமுடிகிறது. சிறந்த செல்வம் என்பது வசதியாக வாழ்வதும் சத்தான உணவுகளை உண்பதும், நாகரிகமாக இருத்தலும், இனிமையாகப் பேசுதலும் அன்று.

உண்மையான சிறந்த செல்வம் என்பது தன்னைச் சார்ந்து அடைக்கலமாக வந்தவரின் துன்பத்தை நீக்குவதே என நற்றிணை மொழிகிறது.

**“நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்**

**செல்வம் அன்றுதன் செய்வினைப் பயனே;**

**சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்**

**புன்கண் அஞ்சும் பண்பின்**

**மென்கட் செல்வம் செல்வஎன் பதுவே”[6]**

வசதி வாய்ப்புகள் ஊழ்வினைப் பயனால் தொடர்பவை. செல்வம் நிலையற்ற தன்மை உடையது. அதனால் மற்றோரை ஈகையால் மகிழ்வித்தல் அவசியம் என்பதை இப்பாடலடிகள் வலியுறுத்துகின்றன. செல்வத்தினுடைய தன்மை பிறருடைய துன்பத்தைத் தீர்ப்பதாக அமையவேண்டும். வள்ளுவர் இதனை,

**“பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்யும்**

**பொருள் அல்லது இல்லை பொருள்”[7]**

ஒரு பொருளாக மதிக்கத்தகாதவரையும் பொருளாக மதிக்கச் செய்வது பொருள். அவ்வாறு மதிக்கச் செய்யும் பொருளும் பிறருக்குப் பயன்பட வேண்டும் என்ற கருத்தினை. நற்றிணை,

**“இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்**

**அசையுநர் இருந்தோர்க்கு அரும்புணர்வு ஈன்மஎன”[8]**

என்று இம்மைக்கும், மறுமைக்கும் பயன்தருவது செல்வம். செல்வம் இருந்தால்தான் ஈகைக் குணத்தைச் செயல்படுத்தமுடியும். இம்மூன்றும் நடைபெறச் சோம்பியிருத்தல் கூடாது. சோம்பல் உள்ளோர்க்கு மேற்கண்ட செயல்கள் கைகூடி வருதல் இயல்பில்லை. அதேபோலப் பொருள்களால் இன்பத்தை அனுபவிப்பதும் பிறருக்குக் கொடுக்க நினைப்பதும் பொருள் இல்லாதவரால் செய்யமுடியாதவை. பற்றுள்ளமாக இருக்கமுடியுமே தவிர நிறைவேற்றிக்கொள்வதில் இடர்கள் ஏற்படும். அதனாலே,

**"ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்' எனச்**

**செய்வினை கைம்மிக எண்ணுதி"[9]**

என்கிறது குறுந்தொகை. இன்பத்தை விரும்புவதனால் அது நம்மை அடையும் வழிகளை ஆராயவேண்டும். அவ்வின்பத்தைப் பெறப்பொருள் அவசியமாகும். எனவே பொருள் இல்லாத வறுமையாளன் இன்பத்தை விரும்பமுடியாது என்கிறது. மேலும் ஒரு பாடல்,

**"இல்லோன் இன்பம் காமுற்றா அங்கு**

**அரிதுவேட் டனையால் நெஞ்சே!"[10]**

என்னும் பாடலடியால் அறியலாம். மேலும், அரிச்சந்திரபுராணத்தில் சந்திரமதி தன் மகனை எரிக்கச் சுடுகாட்டில் பணம் தர இயலாது துன்பமடைந்தாள். பிணங்களைச் சுடுபவன் காற்பணம், கொள்ளித்துண்டு, வஸ்திரம், வாய்க்கரிசி இவைகளைக் கேட்க, தரஇயலாது தவிக்கும் சந்திரமதியின் நிலையினைக் காட்டுவதிலிருந்து செல்வத்தின் இன்றியமையாமையும், அது இல்லாமல் துன்பமடையும் நிலையையும் புலப்படுத்துகிறது.

**"பொருளுடையேன் நமருடையே னானா சிந்தப்**

**புத்திரனைத் தோண்மீது வைத்துப் போந்திவ்**

**விருளிடையிற் சுடலையில்வந் தெய்து வேனோ**

**எரிந்தகுறைக் கட்டையினி லேற்று வேனோ**

**தெருளுடையா யறமுடையாய் வினையே னீன்ற**

**சிறுவனையான் சுடக்கருணை செய்யாய் தேயா"[11]**

என்றும் கூறும்முறையில் செல்வம் நிலையற்றது என்ற கருத்துப் புலப்படுகிறது.

செல்வம் பெற்றதன் பயன் ஈதல்தான். உழைத்துப் பெற்ற பொருளைப் பிறருக்குக் கொடுத்து உதவும்போது இன்பம் இருமடங்காகிறது. தன்னுடைய முன்னோர் சேர்த்து வைத்த செல்வம் ஊழினால் கிடைத்ததாயினும் எந்த முயற்சியும் இல்லாமல் அப்பொருளைக் கொண்டு வாழ்தல் சிறப்புடையதன்று. தன்னுடைய முயற்சி இன்றிப் பிறர் பொருளில் வாழும் வாழ்க்கை இரந்து வாழ்தலைவிட இழிவானதாகும். இதனை குறுந்தொகை,

**“உள்ளது சிதைப்போர் உளர்எனப் படாஅர்**

**இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவுஎனச்**

**சொல்லிய வன்மை தெளியக் காட்டிச்**

**சென்றனர் வாழி தோழி!”**[12]

என்று ‘குந்தித் தின்றால் குன்றும் மாளும்’ என்னும் பழமொழியும் இக்கருத்திற்கு அரண் செய்யும், ஈகைக் குணமின்றி உழைக்கும் திறனின்றிச் செல்வத்தை கொஞ்சங்கொஞ்சமாக அழிந்து, இறுதியில் பிறரிடம் இரத்தல் நிகழும் என்பதை உட்கருத்தாகக் கொண்டு விளங்குகிறது இப்பாடல். ஈகைக் குணம் இல்லாதவனிடம் சேர்கின்ற செல்வம் பயனற்றது. கருமியிடம் கிடைத்த செல்வம் யாருக்கும் பயன்படாது. ஈயாதவனின் செல்வம் பற்றிக் கூறவந்த பழமொழி.

**“நாய் பெற்ற தெங்கம் பழம்”**[13]

எனக் கூறும், நாயிடம் கிடைத்த தேங்காய் அதற்கும் பயன்படாது. அடுத்தவர்க்கும் பயன்படாது. அதுபோலக் கருமியின் செல்வமும் அறத்தின் பாற்பட்டதாகாது.

**“அறம்பெரிது ஆற்றி அதன்பயன் கொண்மார்”**[14]

என்று பரிபாடல் குறிப்பிடும். அச்செல்வம் அவனுக்கும் பயன்படாது. பிறருக்கும் பயன்படாது. அதனால், கருமியைச் சிறுமைக் குணம் கொண்டவனாகக் குறிப்பிடுகிறது. இதனை,

**“சிறியவன் செல்வம்போல், சேர்ந்தார்க்கு நிழல்இன்றி**

**யார்கண்ணும் இகந்துசெய்து இசைகெட்டான் இறுதிபோல”[15]**

என்று கலித்தொகை குறிப்பிடுகிறது. ஈதலே அறங்களுள் எல்லாம் மிகவும் சிறப்புடையதாகக் கொள்ளப்படும். வறியவர்க்கு ஈதல் மிகச்சிறப்பானது. தன்னை இரந்து நின்றார்க்கு கொடுக்க இயலாத நிலையில் மிகவும் வருந்தி துயரப்படுவர் சான்றோர்கள். பொருள் இருந்தும் பிறருக்கு ஈயாமல் வாழ்பவர் கீழ்மக்கள் என்பதை நல்வழி,

**“பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்துக்**

**கேடுகெட்ட மானிடரே, கேளுங்கள்! கூடுவிட்டு இங்கு**

**ஆவிதான் போயினபின்பு யாரோ அனுபவிப்பார்**

**பாவிகாள் அந்தப் பணம்?”[16]**

**“தனம்தேடி உண்ணாமல் புதைக்க வேண்டாம்”[17]**

**“எட்டிமரம் பழுத்தாலும் ஈயாதார்**

**வாழ்ந்தாலும் என்னுண்டாமே”[18]**

என்று அரும்பாடுப்பட்டுத் தேடிய செல்வத்தைத் தாமும் அனுபவித்து தம்மை நாடி வருபவர்களுக்கும் கொடுத்து வாழ்தலே அறவாழ்வாகும். அங்ஙனமின்றி மண்ணில் புதைத்து வைத்தால் யாருக்கும் பயன்படாமல் போகக்கூடும் என்பதை நாலடியார்,

**"துய்த்துக் கழியான் துறவோர்க்கொன்று ஈகலான்**

**வைத்துக் கழியும் மடவோனை - வைத்த**

**பொருளும் அவனை நகுமே உலகத்து**

**அருளும் அவனை நகும்"[19]**

என்று பெற்ற செல்வத்தைத் தாமும் அனுபவிக்காமல், பிறர்க்கும் ஈயாமல் வாழ்ந்தவனைக் கண்டு அவன் சேமித்து வைத்திருக்கின்ற செல்வமே சிரிக்கும். கருணையாளனாக வாழாமல் கருமியாக வாழ்ந்ததைக் கண்டு கருணை என்னும் பண்பும் சிரிக்கும் என்பதை நன்னெறி,

**"தங்கட் குதவிலர்கைத் தாமொன்று கொள்ளினவர்**

**தங்கட் குரியவராற் றாங்கொள்க - தங்கநெடுங்**

**குன்றினாற் செய்தனைய கொங்கையாய்! ஆவின்பால்**

**கன்றினாற் கொள்ப கறந்து"[20]**

பசுவிடம் கன்றைக் காட்டினால்தான் பாலைப்பெற இயலும். கருமியிடம் இருந்து பொருளைப் பெறவேண்டுமானால் அவருக்கு உரியவரைக் கொண்டுதான் பெறுதல் வேண்டும் என்று கொன்றைவேந்தன்,

**"ஈயார் தேட்டை தீயார் கொள்வர்"[21]**

என்ற பாடலடியும், கீழ்வரும் குமரேசச் சதகப்பாடல் அடியும்,

**"புரவலர்செய் தண்டஞ் தணிக்குவலு வாகப்**

**புகுந்திருட ருக்கும் ஈவீர்"[22]**

என்ற அடிகளின் மூலமாக அனுபவிக்காமலும், பிறருக்கு உதவாமலும் வைத்திருக்கும் செல்வமானது அயலாரிடம் சென்று சேரும். கள்வர்கள் தன்

வித்தையைக் காட்டி ஒரு நொடிக்குள் கவர்ந்து சென்றுவிடுவார்கள். எனவே, செல்வத்தின் சிறப்பு பிறருக்கு ஈதலே என்றுணர்தல் வேண்டும் என வற்புறுத்துகின்றன.

பொருளின் தன்மை அளவற்ற வலிமை உடையதாகும். ‘பணம் பத்தும் செய்யும்’, ‘பணம் பாதாளம் வரை பாயும்’ என்னும் முதுமொழிகள் இதனை உணர்த்தும் கலித்தொகையும்,

**“அரிதுஆய அறன்எய்தி அருளியோர்க்கு அளித்தலும்**

**பெரிதுஆய பகைவென்று பேணாரைத் தெறுதலும்**

**பிரிவுஅமர் காதலின் புணர்ச்சியும் தரும்”[23]**

அறம் செய்வதற்குப் பொருள் அவசியம். உயர்ந்த அறத்தைப் பொருள் அடையச் செய்யும். அருள் நிரம்பிய மனத்தால் பிறருக்கு அளிக்கச் செய்யும், தன் பகைவர்களை வீழ்த்தும் இயல்புடையது. அப்பொருளால் இன்பம் நிறைந்த வளமான வாழ்க்கைக் கிடைக்கும்.

செல்வத்திற்கு மக்களின் தன்மைத் தெரியாது. அதற்கு மக்களின் தன்மை கருதிச் சேரும் குணம் கிடையாது. நல்வினை ஆற்றும் அருள் நெஞ்சினோரையே பொருள் சென்றடையும் என குறிப்பிடுகிறது கலித்தொகை இதனை,

**“கிழவர் இன்னோர் ‘என்னது’ பொருள்தான்**

**பழவினை மருங்கின் பெயர்புபெயர்பு உறையும்**

**அன்ன பொருள்வயின் பிரிவோய் நின்இன்று**

**இமைப்புவரை வாழாள் மடவோள்**

**அமைக்கவின் கொண்ட தோளினை மறந்தே”[24]**

என்று தோழி, தலைவனிடம் முன்வினைப்பயனால் வருவது செல்வம். அவ்வாறு வந்தாலும் அதற்காகத் தலைவியை பிரிந்து நல்வினையாற்றும் செயலை மறவாதே என்று கூறுகிறாள்.

நல்வழியில் ஈட்டப்படக்கூடிய பொருள் இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் தரக்கூடியதாகும். தீயவழியில் ஈட்டப்படும் பொருள் இப்பிறவிக்கு மட்டும் அல்லாமல் மறுபிறவிக்கும் நீங்காத துயரத்தைத் தரக்கூடியது. இதனை,

**“செம்மையின் இகந்துஒரீ இப்பொருள் செய்வார்க்கு அப்பொருள்**

**இம்மையும் மறுமையும் பகையாவது அறியாயோ?”[25]**

என்கிறது கலித்தொகை.

வாய்மை எனப்படும் உண்மைத்தன்மை மனிதனை உயர்த்தும் தன்மையது. பெற்றப்பொருளைக் குறித்தக் காலத்தில் திருப்பித் தருதலால் பிறரிடம் அவரைப் பற்றிய நல்லெண்ணம் உயரும். ஆனால், உறவானாலும் நட்பானாலும் வாய்மை தவறும்போது உறவில் விரிசல் ஏற்படுதல் தவிர்க்க இயலாது. பொருள் பெற்றபோது மகிழ்தலும், திரும்பக் கொடுக்கும்போது முகவேறுபாடு கொள்வதும் நன்மையாகாதெனக் கலித்தொகை,

**“உண்கடன் வழிமொழிந்து இரக்குங்கால்முகனும், தாம்**

**கொண்டது கொடுக்குங்கால் முகனும் வேறு ஆகுதல்**

**பண்டும்இவ் வுலகத்து இயற்கை”[26]**

என்று குறிப்பிடுகின்றது.

பிறருடைய துன்பத்தைப் போக்கும் அருள் உள்ளம் கொண்டவர் ஆயினும், அவரிடம் பொருள் இல்லாமல் போனால் அவ்வருள் உணர்வால் எந்தப் பயனும்

விளைவது கிடையாது. எனவே, துன்பம் நீக்கும் முயற்சிக்கும், அருள் மனத்தைச் செயல்பட வைக்கும் முயற்சிக்கும் பொருள் தேடுதல் முதன்மையாகிறது.

**“இருள்படு நெஞ்சத்து இடும்பை தீர்க்கும்**

**அருள்நன்கு உடையர் ஆயினும் ஈதல்**

**பொருள்இல் லோர்க்குஅ.்.து இயையாது ஆகுதல்**

**யானும் அறிவென் மன்னே”[27]**

இல்லோர் எனக் கூறுவது பொருள் இல்லோரை அன்று தானாக முயன்று சேர்க்காத செல்வத்தைக் கொண்டு வாழ்வோரையே இல்லோர் எனக் கூறுவர். இத்தன்மையுடையவரைப் பகைவர்கூடப் பழிப்பர் என,

**“உள்ஆங்கு உவத்தல் செல்லார் கறுத்தோர்**

**எள்ளல் நெஞ்சத்து ஏஎச்சொல் நாணி**

**வருவர் - வாழி”[28]**

என்று அகநானூறு பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

பொருளே வாழ்க்கையை உறுதி செய்கிறது. எனவே, அறவாழ்வில் பொருளைப்பெற்று நிலையாமையை உணர்ந்து, ஈகை செய்து இன்பமாக வாழ்தல் வேண்டும் என்று குறிப்பிடுகின்றன.

## நிலையற்ற செல்வம்

இந்த உலகத்தில் செல்வம் நிலையானது அல்ல. இளமையும் நிலையானது அல்ல. நிலையில்லாத செல்வத்தைத் தேடுவதற்காக இளமைக் காலத்தை வீணாக்கிப் பொருள்தேடச் செல்லாதீர் என்கிறது நற்றிணைப் பாடல்.

**"தேம்படு சிலம்பில் தெள்அறல் தழீஇய**

**துறுகல் அயல தூமணல் அடைகரை**

**…………………………………….**

**அரிது மன்றம்ம அறத்தினும் பொருளே?"[29]**

உயர்ந்த மலை அடிவாரத்தின் ஆற்றங்கரையில் அழகியச் சோலை, அந்தச் சோலையில் உள்ள மாமரங்களில் மாங்குயில்கள் கூவுகின்றன. அவ்வாறு அவை கூவும்போது என்னச் சொல்லிக் கூவுகின்றன தெரியுமா? சூதாடும் கருவியாகிய கவறு நமது கையைவிட்டுப் பெயர்வது போல் நிலையற்றது பொருள். இந்த நிலையற்ற பொருளைத்தேட நினைத்து நிலையானக் காதலை விட்டு பிரியாதீர் என்று கூவுகின்றன என்கிறார்.

மற்றொருப் பாடலில் ஒரு தலைவன் சொல்லாமலே பிரியக் கருதுகிறான். இதனைக் குறிப்பாக உணர்த்துகிறாள் தோழி. அவனிடம் நீ ஈட்டும்பொருள் நிலையற்றது என அறிவுரைக் கூறிப் பிரிவைத் தடுக்கிறாள். இதனைக் கலித்தொகை,

**"…………………… இசைக்கும் கோல்**

**ஏழும்தம் பயன்கெட, இடைநின்ற நரம்பு அறூஉம்**

**யாழினும் நிலைஇலாப் பொருளையும் நச்சுபவோ?**

**மரீஇத்தாம் கொண்டாரைக் கொண்டக்கால் போலாது**

**பிரியுங்கால் பிறர்எள்ளப் பீடுஇன்றிப் புறம்மாறும்**

**திருவினும் நிலையிலாப் பொருளையும் நச்சுபவோ?"[30]**

விரல்களால் ஏழு நரம்புகளை முறையாக தடவுவதால் ஏற்படும் யாழின் இசையை அனுபவிப்பவர்களுக்கு மட்டுமே மகிழ்வைத் தரும், இடையில் ஒரு நரம்பு அறுந்துவிட்டாலும், அந்த யாழை இசைக்கவும் முடியாது. இசையும் பிறக்காது. மற்றவர்க்கு மகிழ்வும் ஏற்படாது. இத்தகைய யாழைக்காட்டிலும் காடு கடந்து நீ ஈட்டி வரும் பொருள் நிலையற்றது. மனைவியுடன் கூடியிருந்து பெறும் இன்பமே நிலைபெற்றது என்பதைக் கூறியுள்ளார் ஆசிரியர்.

செல்வம் ஒருவரை வந்து சேரும்போது அவருக்கு மிகுந்த மகிழ்வையும், இன்பத்தையும் தரும். அதே செல்வம் அவரிடம் இல்லாமல் போகும்போது அவர்களுக்குத் துன்பத்தை தரும். அவர்களின் நிலை பிறரால் இகழ்ந்து பேசப்படும். இத்தகைய நிலைபாடு உடையது செல்வம். கைமாறிக் கொண்டே இருக்கும் செல்வத்தை விரும்பாமல் உனக்கென்றே வாழும் உன் மனைவியின் நிலை உணர்ந்து பிரிந்து செல்லவேண்டாம். நிலையான இன்பம் மனைவியின்பால் பெறும் இல்லற இன்பமேயாகும்.

**“அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றின்**

**போஒய்ப் பெறுவது எவன்”**[31]

அறத்தின் வழி இல்வாழ்க்கை நடத்துபவர்க்கு துறவறம் தேவையில்லை என்று குறள் கூறுகின்றது.

உலகில் வாழ்கின்ற ஒவ்வொருவனும் நிலைத்தப் புகழைப் பெறவேண்டும் என்றால் அறவழியில் வாழ்க்கையினை அமைத்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு அமைக்கும் அறவாழ்க்கைக்கு உட்பட்டதுதான் காதல் வாழ்க்கை. இந்த வாழ்க்கையினை இளமைக் காலத்தில் மட்டுமே வாழமுடியும். செல்வம் நிலையில்லாதது போல் இளமையும் நிலையில்லாதது. இளமை இருக்கும்போது

செல்வத்தைத்தேடி ஓடாமல் இனிய காதல் செய்வீர் என்னும் கருத்தின் வாயிலாக செல்வம் நிலையற்றது என்று அறியமுடிகிறது.

ஒருவனுக்கு அதிகமாக செல்வம் வந்து சேர்தல் கூத்தாடும் இடத்தில் கூட்டம் வந்து சேர்வதைப் போன்றதாகும். கூத்து முடிந்தவுடன் கூட்டம் கலைந்து செல்வதைப்போல செல்வமும் அவனை விட்டு நீங்கிவிடும். அதனால் செல்வம் நிலையில்லாததை,

**“கூத்தாட்டு அவைகுழாத் தற்றே பெருஞ்செல்வம்**

**போக்கும் அதுவிளிந் தற்று”[32]**

என்ற குறளும், இதே கருத்தை,

**“கூத்தாட்டவைசேர் குழாம்விளிந்தாற் போலுமென்ற**

**சீர்த்தாட் குறள்மொழியும் தேர்ந்திலையே”[33]**

என்று திருவருட்பாவும், வள்ளுவர் வழி செல்வம் நிலையில்லாதது என்று விளக்குகிறது.

பொருள் தேடும் பொருட்டு தலைவன் சென்றுவிட்டான் என்பதைத் தலைவி தோழியிடம் சொல்லுவதாக அமைந்த ஐங்குறுநூற்றுப் பாடல் ஒன்று செல்வம் நிலையற்றது என்றும், செல்வம் பிணி போன்று துன்பம் தரக்கூடியது என்றும் கூறுகிறது.

**“நின்றதுஇல் பொருட்பிணி முற்றிய**

**என்றூழ் நீடிய சுரன்இறந் தோரே”[34]**

இதே கருத்தை,

**“மன்னாப் பொருட்பிணி பிரிதும் யாம் எனவே”[35]**

**“நில்லாப் பொருட்பிணி பிரிந்திசி னோரே?”[36]**

என்று நற்றிணையும்,

**“நிலையாப் பொருட்பிணிப் பிரிந்திசினோரே?”[37]**

என்று குறுந்தொகையும், பொருள் தேட பிரிந்து செல்ல விரும்பும் தலைவனைத் தோழி தடுத்து செல்வம் நிலையற்றது என்று கூறுவதாக, நற்றிணை,

**“மன்னாப் பொருட்பிணி முன்னி....”[38]**

என்று நிலையில்லாத பொருளைத் தேடித் திரியும் ஆசை உமக்கு அதிகரித்ததே நீ தலைவியை விட்டுப் பிரிய எண்ணியமைக்குக் காரணம் எனத் தோழி தலைவனிடம் கூறினாள். இதே கருத்துப்பட அமைந்த மற்றொரு பாடல்,

**“நில்லாப் பொருட்பிணிச் சேரி**

**வல்லே நெஞ்சம்! வாய்க்கநின் வினையே!”[39]**

என்று நில்லாப் பொருட்பிணி என்பதிலிருந்தே தேடும் பொருளும் நிலைபெறாத தன்மையுடையது என்பது பெறப்படுகிறது.

நம்முடைய மனைவி, மக்கள், உறவினர், நண்பர் என்று அனைவரிடமும் பற்று வைக்கிறோம். ஆனால், இந்த சொந்தம், நட்பு எல்லாம் நிரந்தரமானவை அல்ல. நம் கையில் இருக்கும் செல்வம் நீங்கிவிட்டால் சொந்தமும், பந்தமும் நீங்கிவிடும். மனைவியும், பிள்ளையும் உறவும் நம்மை மதிக்கமாட்டார்கள்.

இக்கருத்தையே,

**"…………………. இல்லானை**

**இல்லாளும் வேண்டாள் மற்று ஈன்றெடுத்த தாய் வேண்டாள்"[40]**

என்று நிலையில்லாதச் செல்வத்தை நிலையில்லாத உறவினருக்காக ஈட்டி மயக்கம் கொள்ளல் வேண்டாம் என்று தேவாரம் கூறுவதனை,

**"தந்தை தாயொடு தாரம் எனும் தனை…………**

**பந்தம் ஆங்கு அறுத்து"[41]**

என்றும்,

**"தாயத்தார் தமர் நன்நிதி என்னும் இம்**

**மாயத்தே கிடந்திட்டு மயங்கிடேல்"[42]**

என்ற பாடல் அடிகள் அறிவுறுத்துகின்றன.

செல்வம் இல்லாதவரை உலகில் உள்ளோர் யாரும் மதியார். அச்செல்வம் ஓரிடத்தில் நில்லாது என்பதை யாரும் உணருவதில்லை. இன்று செல்வந்தனாக இருந்தவன் நாளை ஏழையாகலாம். ஏழையாக இருந்தவன் திடீரென்று செல்வந்தனாக மாறலாம். எனவே செல்வம் என்பது ஓரிடத்தில் நிலையாக நிற்காது. இக்கருத்தையே,

**"அறுசுவை யுண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட**

**மறுசிகை நீக்கியுண்டாரும் - வறிஞராய்ச்**

**சென்றிரப்பர் ஓரிடத்துக் கூழ்எனின் செல்வம் ஒன்று**

**உண்டாக வைக்கற்பாற் றன்று"[43]**

என்ற நாலடியார் பாடல் மூலம், அறுசுவை உணவையும் மனைவி அமர்ந்துவிரும்பி உண்பிக்க உண்ட செல்வமும், ஒரு காலத்தில் வறுமையாளனாய் மாறி ஓரிடத்தில் சென்று கூழ் இரப்பர். அதனால், செல்வம் என்ற ஒன்றை நிலையுடையதாக மனதில் கருதவேண்டாம் என்று நறுந்தொகையும்,

**"உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா"[44]**

செல்வமும் வறுமையும் ஒரே இடத்தில் நிலைத்து நிற்காது. புகழுடன் செல்வச் செழிப்பில் வாழ்ந்தவரும் ஒருநாள் ஒருவேளை உணவுக்காகக் கையேந்தி நிற்கும் நிலை ஏற்படலாம். அதேப்போன்று வறுமையற்றவரும் அந்நிலை மாறி செல்வநிலைக்கு உயரலாம் என்பது உலகியல் உண்மையாகும்.

'அதிவீரராம பாண்டியர் எழுதிய 'வெற்றிவேற்கை' என்ற நூலில் செல்வந்தனாய் இருப்பவன் ஏழையானவன் என்றும், ஏழையான பிறகு அவனுக்கு நட்பும், உறவும் இல்லை' என்றும் பாடியுள்ளார்.

**"கேளும் கிளையும் கெட்டோர்க்கு இல்லை"[45]**

அதனால் செல்வம் இருக்கும்பொழுது பலருக்கும் கொடுத்து உண்ண வேண்டும். செல்வம் நிலைத்து நிற்காமையால் செல்வம் இருக்கும்பொழுதே பலருக்கும் கொடுத்து புண்ணியத்தைப் பெறவேண்டும்.

நல்வழியில் முயன்று பெற்ற செல்வத்தையும், உடல் உழைப்பால் வேளாண்மையில் பெற்ற செல்வத்தையும், நாம் உற்றார் உறவினரோடு பலருக்கும் பகிர்ந்தளித்து உண்ணவேண்டும். ஏனென்றால், செல்வம் என்பது ஓரிடத்தில் நிலையாக நில்லாது. வண்டியின் சக்கரங்கள் சுழல்வதைப்போல மக்களிடத்தே சுழன்று கொண்டே இருக்கும்.

**“துகள்தீர் பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டுப்**

**பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க**

**அக்குற யார்மாட்டும் நில்லாது செல்வம்**

**சகடக்கால் போல வரும்”[46]**

என்று விருந்தோம்பாதவர்களுடைய செல்வம் பயனற்றது. அச்செல்வத்தை அவர்கள் நிலையானது என்று கருதி கொண்டிருந்தாலும், சமயம் வரும்போது அச்செல்வம் அவர்களை விட்டு ஓடிவிடும். இக்கருத்தையே திருவள்ளுவர்,

**“பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி**

**வேள்வி தலைப்படா தார்”[47]**

என்ற குறள் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

## செல்வம் இடம்மாறும்

செல்வம் என்பது ஓரிடத்து நிற்காமல் செல்வது என்னும் பொருளைத் தன்னகத்தே கொண்ட ஒரு சொல் எனலாம். செல்வம் மாறும் தன்மையுடையது. என்பதை, எமனால் கொள்ளப்படும் உயிர்போல நாடு விளங்கியது என்று கூறிச் செல்வநிலையாமையை இணைத்துப் பேசுவதனை பதிற்றுப்பத்து,

**“நாடு கவின் அழிய நாமம் தோற்றி**

**கூற்றுஅடுஉ நின்ற யாக்கை போல,**

**நீசிவந்து இறுத்த நீர்அழி பாக்கம்”[48]**

என்ற அடிகளின் மூலம் காணலாம். இதனால் பகைவர்களுடைய நாட்டின் அழிவைக்காட்டி செல்வநிலையாமையைக் கூறுகிறது. முன்பு வயல்களில் ‘நெய்தல் பூப்ப’ நெற்பயிற்கள் விளைய, கரும்புகள் நிறைந்த அப்பகுதி இன்று

உள்ள நிலையைக் சுட்டிக்காட்டி செல்வம் மாறும் தன்மை உடையது என்கிறது. இதனை,

**“காணுநர் கைபுடைத்து இரங்க**

**மாணா மாட்சிய மாண்டன பலவே!”[49]**

என்ற அடிகளால் அறியலாம். மேலும்,

**“ஏழு நிலை மாடம் கால் சாய்ந்து உக்கு”[50]**

என்ற வெற்றிவேற்கை அடியும் இதே கருத்தைக் கூறுகிறது.

உடலை வருத்தி நாம் பெறும் செல்வமே பெருஞ்செல்வமாகும். அவை அணிகலன்களாகவோ, மாடமாளிகைகளாகவோ, நிலபுலன்களாகவோ, தம் பிள்ளைகளாகவோ, உற்றார் உறவினர்களாகவோ இருக்கலாம். போர்களத்தில் இறந்த வீரர்களைக் காட்டியும், தன்னைச் சார்ந்தவர்கள் விண்ணுலகை அடைந்த நிலையில் வருந்தும் முறையிலும், செல்வநிலையாமை குறித்த பாடல்கள் புறநானூற்றில் உள்ளன. மேலும், அரசனை இழந்து, நாடு அடைந்த நிலையைக் காட்டும் செல்வநிலையாமை பாடல்கள் பல உள்ளன. பாரி இறந்த பின் அந்த நாடு அடைந்த நிலைமையும், அவன் மக்கள் படும் துன்பத்தையும் காட்டிச் செல்வநிலையாமையை உணர்த்துகிறது.

மயிலினம் சோலையிலே ஆட, குரங்கினம் மலைமுகடுகளிலே தாவி விளையாட, அக்குரங்கினம் அனைத்தும் கூடித்தின்னும், தீராத கனிவகைகள் கணக்கற்று எங்கும் விளங்கின. அவ்வளமான மலையின்மேல் நின்றுகொண்டு போர்கொள்ளவரும் மன்னர்களின் குதிரைகளை அப்பெண்கள் எண்ணுவார்கள். ஆனால் இன்று,

**“…………………….. மகளிர்**

**புல்மூசு கவலைய முள்மிடை வேலி**

**பஞ்சி முன்றில், சிற்றில் ஆங்கண்**

**பீரை நாரிய சுரை இவர் மருங்கின்,**

**ஈத்துஇலைக் குப்பை ஏறி, உமணர்**

**உப்புஓய் ஒழுகை எண்ணுப மாதோ”[51]**

என்கின்றது புறம். பகைவர்களுடன் போர் செய்து நாடு அடைந்த நிலையைக் காட்டும் வகையிலும், செல்வநிலையைக் காட்டும் வகையிலும் இப்பாடல் அமைந்துள்ளன. அழிவெய்திய ஓர் ஊரினது நிலையினை,

**“மதிலும் ஞாயில் இன்றே; கிடங்கும்**

**நீஇர் இன்மையின், கன்றுமேய்ந்து உகளும்**

**ஊரது நிலைமையும் இதுவே”[52]**

என்கிறது. தன்னை நாடி வந்தவர்களின் பசியைப்போக்கிய ஒரு வள்ளலின் வீட்டைக் காட்டிச் செல்வ நிலையாமையைக் காட்டும் பாடல். படிப்பவர் உள்ளத்தில் துன்ப உணர்வுகள் ஊட்டும் வகையில் அமைந்துள்ளன. “செல்வம் நிரம்பியிருந்த அழகிய நகரே! தீம்பால் வேண்டியமும் பருவத்தையுடைய புதல்வர் தம் தந்தை தனித்துச் சென்றுவிட்ட புறங்காட்டிற்கு வான்சோறு கொண்டு அடைந்தனர். இரவலரை அடிசிலால் தடுத்து நிறுத்திய வாயிலையும், இரவலரின் கண்ணீரைத் தடுத்து அருளிய பந்தரையும், உடைய மனையே! கணவனை இழந்த அவன் மனையாளைப் போல, நீயும் அவனில்லாது பொலிவழிந்து விட்டனையே! என்று தாயங்கண்ணியார் அனைத்து நிலையாமைகளையும் இணைத்துப் பாடுவதாக அமைகின்ற பாடல். இதனை,

**“கூந்தல் கொய்து, குறுந்தொடி நீக்கி**

**அல்லி உணவின் மனைவியோடு, இனியே**

**புல்லென் றனையால் வளம்கெழு திருநகர்!”[53]**

என்கிறது.

வாழ்வில் பெற்ற செல்வம் நிலையில்லாமல் மாறும்நிலையை,

**“நாடெனும்பேர் காடாக**

**ஆசேந்தவழி மாசேப்ப**

**ஊர்யிருந்தவழி பாழாக**

**...........................**

**பேய் மகளிர் பெயர்பு ஆட”[54]**

என்ற மதுரைக்காஞ்சி அடிகளின்மூலம் நாட்டின் பழைய நிலையையும், இன்று அங்கு பெண்களுக்குப் பதிலாகப் பேய்கள் ஆடுகின்ற நிலையையும் காட்டிச் செல்வம் நீங்கும் என உணர்த்துகிறது.

சிலப்பதிகாரம், கோவலன் மதுரைக்குப் பொருளீட்டச் சென்றான் என்பதிலிருந்து செல்வம் இழந்து மீண்டும் அச்செல்வத்தை ஈட்டச் சென்றான் என்பது பெறப்படுகிறது. செல்வம் இடம்மாறும் தன்மையது என்பதனை,

**“சே யிழை! கேள்; இச்**

**சிலம்பு முதல் ஆகச் சென்ற கலனோடு**

**உலந்த பொருள் ஈட்டுதல் உற்றேன், மலர்ந்தசீர்**

**மாட மதுரையகத்துச் சென்று”[55]**

என்கிறது. மேலும், செல்வம் நில்லாது என்பதை,

**"...........................................வெல்போர்த்**

**தண்டமிழ் இகழ்ந்த ஆரிய மன்னரின்**

**கண்டனை அல்லையோ காவல் வேந்தே!"[56]**

என்ற மாடலன் கூற்றாகவும் செல்வம் வெகுவிரைவில் நீங்கும் எனவும் அறியலாம்.

கம்பராமாயணத்தில் குபேரன் திக்குவிஜயம் செய்த இராவணனைப் பார்த்த அளவில் புலியைக் கண்ட மான் போலத் தன் செல்வம் அனைத்தையும் இழந்து புஷ்பக விமானத்தையும், விட்டுவிட்டுச் சென்றான் என்று வீடணன் ராமனிடம் கூறுவதிலிருந்து செல்வத்தின் தன்மை இடம்மாறும் என்று அறியமுடிகிறது. இதனை,

**"திரண்ட மாடும் தன் திருவொடு நிதியமும் இழந்து**

**புரண்டு மான் திறள் புலிகண்டது ஆம்எனப் போனான்"[57]**

என்கிறது. ஆகவேண்டிய காலத்தில் அனைத்தும் வெற்றிபெறும். அழியும் காலத்து அனைத்தும் அழியும். இதனை,

**"ஆகுவது ஆகும் காலத்து அழிவதும் அழிந்து சிந்திப்**

**போகுவது அயலே நின்று போற்றினும் போதல் திண்ணம்"[58]**

என்று கம்பரும்,

**"பரியினும் ஆகாவாம் பால் அல்ல உய்த்துச்**

**சொரியினும் போகா தம"[59]**

என்று வள்ளுவரும் கூறுகிறார்.

அரிச்சந்திரப் புராணத்தில், விசுவாமித்திரர் ஒரு பொய்கூறி இழந்த செல்வம் அனைத்தையும் பெற்றுக்கொள்ளுமாறு அரிச்சந்திரனிடமும், சந்திரமதியிடமும் கூற,

அதற்கு அவர்கள் ஊரை இழந்தோம், பிள்ளையை இழந்தோம், செல்வத்தை இழந்தோம். இனி எங்களுக்கு என்று இருக்கின்ற நற்கதியை இழந்தாலும் சொன்ன சொல்லை இழக்கமாட்டோம் என்றனர். இதனை,

**"பதிஇ ழந்தனம் பாலனை இழந்தனம் படைத்த**
**நிதிஇ ழந்தனம் இனிநமக் குளதென நினைக்கும்**
**கதிஇ ழக்கினும் கட்டுரை இழக்கிலேம் என்றார்**
**மதிஇ ழந்துதன் வாயிழந்து அருந்தவன் மறைந்தான்"[60]**

என்ற பாடலால் அறியலாம். மேலும், மகனை இழந்த சந்திரமதியின் கழுத்தில் உள்ள தாலியைப் பார்த்து, அரிச்சந்திரன் பிள்ளையை எரிக்கத் தன் மனைவியின் கழுத்திலுள்ள தாலியைத் தருமாறு கேட்க, சந்திரமதி உலக நிலையாமைகளைக் கூறி வருந்துகிறாள். அரிச்சந்திரன் தன்னை விற்க, அதனால் தன் அழகுபோனது. பொறுமை போனது, உயர்வு போனது, என் பதி விரதத் தன்மையும் எவ்வாறு போனதோ என்று கூறி வருந்துகிறாள். இதனை,

**"அற்புக் காழிய னானரிச் சந்திரன்**
**விற்பப் போயின மேன்மைக் குலத்தொடும்**
**பொற்புப் போம்பொறை போம்நிறை போ மென்றன்**
**கற்புப் போவதென் னென்று கலங்கினாள்"[61]**

என்ற பாடல் மூலம், செல்வம் நீங்கினால் குலப்பெருமை, பொறுமை, அழகு இவையெல்லாம் மாறிப்போவதுண்டு என்பதனை அறியமுடிகிறது. அனைத்தும் நிரம்பியிருந்த மகாராசன் இன்று சுடுகாட்டைக் காவல் செய்யும் நிலையிலிருந்து செல்வம் இடம்மாறும் தன்மையது எனவும் அறியலாம்.

செல்வம் ஓரிடத்திலிருந்து வேறோரிடம் செல்லும் என்பதனைப் பறவைகள் செல்லும் காட்சியைச் சிங்கன் வாயிலாக,

**"வைப்பொடு செப்போ வரத்தொடு செலவோ**

**கைப்படு திரவியம் களவுபோ னதுவோ"[62]**

என்பதனால் அறியலாம். நம்பியவர்களை ஏமாற்றுவது செல்வம்தான் என்று திருக்குற்றாளக் குறவஞ்சி கூறுகின்றது.

**"பெற்றமும் கழுதையும் மேய்ந்த அப்பாழ்**

**………………………………….**

**நெற்பொலி நெடுநகர் ஆயினும் ஆகும்"[63]**

எருதுகளும், கழுதைகளும் வாழ்ந்து கொண்டிருந்த பாழ்நிலம் ஆடவரும், மகளிரும் சேர்ந்து வாழும் செழிப்பான நகரமாக மாறிவிடக்கூடும். ஏனெனில் நிரந்தரமானது எதுவுமே இல்லை என்று நறுந்தொகைக் கூறுகின்றது.

செல்வம் ஓரிடத்திலேயே நிலையாக நிற்காது. அதுமாறும் தன்மையுடையது என்பதை அழகிய பொற்கலத்தில் காய்ச்சியப் பாலை விரும்பிப் பருகாத பெண்ணொருத்தி வினையினால் தன்நிலை மாறி, பசியின் காரணமாக மண்கலத்தைக் கையிலேந்தி பிச்சைப் போடும்படி பிறரை நாடிச்சென்ற நிலையின் வழிப் பின்வரும் பாடலில் பதிவு செய்துள்ளார் ஆசிரியர் திருத்தக்கத்தேவர்.

**"நம்பனமின் செல்வ நமரங்காள்**

**நல்லறமே நினைமின் கண்டீர்"[64]**

என்று செல்வம் மாறும் இயல்புடையது. அதனால், அறம் இயற்றி சிறப்படைதல் வேண்டும் என்கிறது. இவ்வுலக வாழ்வுக்கு இன்றியமையாதது பொருள். அது போதிய அளவு இல்லாதவர்கள் படும் துன்பம் அளவிடமுடியாது.

**“அருள்இல்லார்க்அவ் உலகம் இல்லை பொருள்இல்லார்க்கு**

**இவ்உலகம் இல்லாகி யாங்கு”[65]**

என்பது வள்ளுவர் வாய்மொழி. இத்தகைய இயல்புடைய செல்வம் வாழ்வுக்குத் தேவை என்றபோது அது நிலைத்த தன்மையுடையது அன்று. ஓரிடத்தில் நிலைத்திருக்கும் இயல்புடையதன்று. செல்வத்தின் பால் அளவுக்கு மீறி பற்று கொண்டு சேமிப்பு என்ற பெயரில் மறைத்து வைக்காமல் மற்றவருக்குப் பயனுள்ள வகையில் உதவி வாழவேண்டும். செல்வத்தின் சிறப்பே மற்றவருக்கு கொடுத்து உதவுவதால் மட்டுமே கிடைக்கக்கூடியது.

## விரைந்தழியும் செல்வம்

செல்வம் நிலையில்லாதது. விரைந்தழியும் தன்மைக்கொண்டது. இதனை நற்றிணை,

**“…………………….. பொருளே,**

**வாடாப் பூவின் பொய்கை நாப்பண்**

**ஓடுமீன் வழியின் கெடுவ, யானே,**

**விழுநீர் வியலகம் தூணி யாக,**

**…………………………….**

**எனைய ஆகுக! வாழிய பொருளே!”[66]**

நீரின் வழியே ஓடுகின்ற மீன் ஒரு நொடிக்குள் ஓடி மறைந்துவிடும். அதுபோல, ஈட்டும்பொருள் விரைந்து அழியும் தன்மையுடையது. அதனால் நிலையில்லாத பொருளுக்காக, நிலையான இன்பத்தை விட்டு வரமாட்டேன். அப்பொருள் போற்றுவாரையேச் சாரட்டும் என்று தலைவன் பொருள் அழியும் நிலையைக் கூறுகிறான்.

கந்தர் அலங்காரமும்,

**"தேரீற் கரியீற், பரியிற் றிரிபவர் செல்வமெல்லாம்**

**நீரிற் பொறியென் றறியாத பாவி"[67]**

என்பதனால் செல்வம் நீரில் செல்லும் கலத்தைவிட வேகமாக அழியும் என்று கூறுகின்றது. மேலும் மாங்குடி மருதனார்,

**"கால்என்னக் கடிதுஉரா அய்**

**நாடுகெட எரிப்பரப்பி"[68]**

என்னும் வரிகளால் காற்றைப்போல விரைந்து சென்று பகைவன் நாடுகெடும்படி நெருப்பைப் பரப்பி அழித்த செயலைக் கூறுவதன் வாயிலாக செல்வம் நிலையில்லாதது என்பதனை மறைமுகமாக எடுத்துரைக்கிறார்.

**"நல்லேர் நடந்த நகைசால் விளைவயல்**

**பன்மயிர்ப் பிணவொடு கேழல் உகள,**

**வாழா மையின் வழிதவக் கெட்டுப்**

**பாழாயின நின் பகைவர் தேஎம்"[69]**

என்னும் வரிகளினால் நன்றாக எருதுகள் உழுது விளைகின்ற வயலில் பெண்பன்றியோடே ஆண்பன்றி ஓடித் திரியும். நின் ஏவல்கேட்டு அடங்கி வாழும் வழி மிகக் கெட்டு பாழாய்விட்டன உன்னுடையப் பகைவர் நாடுகள் என்று குறிப்பிட்டுச் செல்வம் நிலையாமையைச் சுட்டுகின்றார்.

**"ஓடமிடும் இடமது மணற்சுடும் சுடுமிடமும்**

**ஓடமிக வேநடக்கும்**

**உற்றதோர் ஆற்றின்மிகு மேடாகும் மேடெலாம்**

**உறுபுனல்கொள் மடுவாயிடும்**

**நாடுகாடாகும் உயர்காடுநா டாகிவிடும்**

**நவில்கசடு மேல் கீழதாய்**

**நடையுறும் சந்தைபல கூடும் உடனே கலையும்**

**நன்னிலவும் இருளாய்விடும்**

**நீடுபகல் போயபின் பிரவாகும் இரவுபோய்**

**நிறைபகல் போதாய்விடும்**

**நிதியோர் மிடத்திடுவார் மிடியோர் செழித்திடுவர்"[70]**

ஆற்றின் பள்ளமும் மேடாகும். நாடும் காடாகும். காடு நாடாகும். வண்டியின் சக்கரம் மேலும், கீழும் சுழல்வதும், சந்தையில் கூட்டம் கூடுவதும் கலைவதும், பகலும் இரவும் மாறிமாறி வருவதும், செல்வந்தர் வறியவர் ஆவதும், வறியவர் செல்வந்தர் ஆவதும், வாழ்வின் செல்வம் நிலையாதது என்பதை உணர்த்தி நிற்கின்றன. செல்வந்தர்கள் என்று அகங்காரம் கொண்டவர்களும், வறுமையை வாழ்வாகக் கொண்டவர்களும் செல்லும் இறுதி இடம் ஒன்றே. இறுதி முடிவும் ஒன்றே. இவற்றை அறிந்து அறம்பல செய்வீர்களாக என்றுரைக்கின்றன.

**"ஆறுஇடும் மேடும் மடவும் போல் ஆம் செல்வம்**

**மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர்"[71]**

என்ற மேற்கண்ட அடிகளோடு ஒப்புநோக்கத்தக்கதாகும்.

**"இன்று உளார் இன்றேயும் மாய்வர் அவர் உடைமை**

**........................................................**

**தருமம் தலை நிற்றல் நன்று"[72]**

உடம்பும் உயிரும் எப்பொழுது பிரிவுவெய்தும் என்பது யாரும் அறியமுடியாத ஒன்று. இறந்தபின் உள்ள உடைமையை மற்றவர் அபகரித்துக்கொள்வர். இவ்வுண்மையை உணரின் வாழ்கின்ற காலத்திலேயே அறச்செயலில் ஈடுபடக்கூடும்.

**“தன்னது சாயை தனக்கு உதவாது கண்டு**

**……………………………………..**

**கண்ணாது காண்ஒளி கண்டுகொள்ளீரே”[73]**

உடலோடு பொருந்தியது உயிர். உயிர் பிரிந்தவுடன் உடலும் அழிந்து விடுகின்றது. அப்படியிருக்க தமக்கு அயலாக உள்ள செல்வம் எப்படி நமக்கு உதவும் என்பதைச் சிந்திக்க வேண்டும். நம்முடன் வரும் நிழல் எப்பொழுதும் நமக்கு உதவுவதில்லை என்ற உண்மையை நாம் உணரவேண்டும் என்று கூறுகிறது.

சுதமதி, உதயகுமரனுக்கு யாக்கையினது இழிவினைக் கூறிய, பின்பு செல்வநிலையாமையைப் பற்றிக் கூறுகிறாள். நம்முடைய உயிர் நீங்கிய பின்பு உடலில் அணிந்திருக்கும் அணிகலன்களோடு இடுகாட்டிற்கு அனுப்புவதில்லை. இதனை, மணிமேகலை,

**“புனைவன நீங்கிற் புலால் புறத்திடுவது”[74]**

என்று கூறிச் செல்வம் நம்மோடு வருவதில்லை என்கிறாள்.

## அன்பும் அருளும் சார்ந்தது இல்லறம்

நற்செயல்கள் நடைபெறுவதற்கு அன்பும், அருளும் தேவை. நம்மைச் சார்ந்தோரிடம் உருவாவது அன்பு. நம்மைச் சாராத பிறரிடம் உருவாவது அருள். நம்மை சார்ந்த அருள் இரக்கமாகிய பண்பாகும். அதனால்தான்,

**"அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள்சேர்ந்த**

**இன்னா உலகம் புகல்"**[75]

என்று அருள் நிறைந்த நெஞ்சினார்க்குத் துயரம் தரும் நரக உலகம் இல்லை என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. அருள்நிறைந்த நல்வாழ்வு குடும்பத்தின் பிற கூறுகளான மக்கட்பேறு, இன்பம், ஈகை, விருந்தோம்பல் என்பவற்றிலும் தொடர்கிறது.

வாழ்விற்குப் பொருள் இன்றியமையாததுதான். அதற்காக வாழ்வை விடுத்துப் பொருள் தேடுதல் அறியாமை உடையதென மொழிகிறது. கலித்தொகை,

**"சென்றோர் முகப்பப் பொருளும் கிடவாது**

**ஒழிந்தவர் எல்லாரும் உண்ணாதும் செல்லார்"**[76]

பொருள் எந்த அளவு வாழ்விற்கு அவசியம் எனச் சங்க இலக்கியம் பகர்கின்றனவோ அதே அளவிற்கு இல்லற இனிமைக்கும் சமஅளவு முக்கியத்துவம் கொடுக்கின்றன. பல இடங்களில் இன்பத்தை உயர்த்திக் கூறுகின்றன.

**"ஒன்றன்கூறு ஆடை உடுப்பவரே ஆயினும்**

**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை"**[77]

கணவன் மனைவி சேர்ந்து நடத்தும் இல்லறத்தில் பொருளால் வறுமை ஏற்பட்டாலும், ஒரே ஆடையை இரண்டாகக் கிழித்து உடுத்துமளவு வறுமை ஏற்பட்டாலும் இணைந்து வாழும் வாழ்வை இனிதாகக் கூறுகிறது. உலக இன்பங்கள் நிலையானவை அல்ல. உணர்வுகள் அனைவருக்கும் பொதுவானவை. உறவு உள்ள நிலையில் இன்பமும், பிரிவு உள்ள நிலையில் துன்பமும் இயல்பானவை. உலகின் நிலையில்லாத பல்வேறு நிகழ்வுகள் போன்று இவையும் நடைபெறும். இதனை கலித்தொகை,

**“மகளிர்தோள் சேர்ந்த மாந்தர் துயர்கூர நீத்தலும்**

**நீள்சுரம் போகியார் வல்லை வந்து அளித்தலும்**

**ஊழ்செய்து, இரவும் பகலும்போல் வேறாகி**

**வீழ்வார்கண் தோன்றும் தடுமாற்றம் ஞாலத்துள்**

**வாழ்வார்கட்கு எல்லாம் வரும்”[78]**

என்னும் பாடல்களால் அறியலாம்.

இல்வாழ்க்கை அறம் செய்யச் சிறந்தது. அறம் செய்வதனால் பெருமை வந்துசேரும். அதனால்தான் இலக்கியங்கள் வாழ்விற்குப் பொருள் இன்றியமையாதது என்கின்றன. இதனை அகநானூறு,

**“அறன்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்**

**பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்**

**பொருளின் ஆகும்”[79]**

வாழ்க்கை இன்பதுன்பம் நிறைந்தது. நிலவு தேய்ந்து வளரும் இயற்கை நிலை போன்றது. நிலவு தேய்ந்து வளர்வதை எவ்வாறு தவிர்க்க இயலாதோ அதேப் போலத்தான் இன்பமும் துன்பமும் தவிர்க்க இயலாதென,

**“திங்கள் அரவுறின் தீர்க்கலா ராயினும்**

**தங்காதல் காட்டுவர் சான்றவர்”[80]**

இதே கருத்தை திருமந்திரமும் செல்வம் திங்களைப் போலத் தேய்ந்து அழியும். கள்வரால் களவு கொள்ளப்படும்.

**“இயக்குறு திங்கள் இருட்பிழம் பொக்குஞ்**

**துயக்குறு செல்வத்தைச் சொல்லவும் வேண்டா”[81]**

என்ற பாடலால் அறியலாம்.

மனிதனாகப் பிறப்பெடுத்தவர்கள் மனவள வளர்ச்சியில் கவனம் செலுத்தவேண்டும். வாழ்வதில் வரன்முறை தேவை. வாழ்க்கை இப்படித்தான் இருக்கவேண்டும். மனிதரில் சிறந்தவராக உருவாகிப் பிறர் நம்மைப் பின்பற்றும்படி எடுத்துக்காட்டாகத் திகழவேண்டும். பிறர் நமக்கு உவமையாகக் கூடாது என்கிறது புறநானூறு. இதனை,

**“பிறர்க்கு உவமம் தான் அல்லது**

**தனக்கு உவமம் பிறர்இல் என”[82]**

பிறர் பின்பற்றும்படியான, சிறந்த, நிலையானப் புகழைப் பெறவேண்டும் என கூறுகிறது.

தாம் பெற்ற செல்வத்தை வறுமையிலே வாடுகின்றவருடைய பசியைப் போக்கி அவர்களை முகமலர்ச்சி அடைய செய்தால் அதுவே அச்செல்வத்தை வைக்கின்ற இடமாகும். இக்கருத்தையே வள்ளுவர்,

**“அற்றார் அழிபசி தீர்த்தல் அ.்.து ஒருவன்**

**பெற்றான் பொருள் வைப்புஉழி”[83]**

கிடைத்தற்கு அரியது மனிதப்பிறவி. ‘அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது’ என்பார் ஔவையார். நாம் எடுத்த மனித பிறவி மகிழ்ச்சியோடு இருத்தல் வேண்டும் என்றால், மறையக்கூடிய செல்வத்தை மின்னலைப்போல தோன்றி மறையும் செல்வத்தைப் பிறருக்கு ஈதலே நன்று என்று,

**“செல்வர்யாம் என்றுதாம் செல்வுழி எண்ணாத**

**புல்லறிவாளர் பெருஞ்செல்வம் - எல்லில்**

**…………………………………………..**

**மருங்கறக் கெட்டு விடும்”[84]**

என்ற பாடல் மூலம் நாலடியார் கூறுகின்றது. இதனை புறம்,

**“வாழ்தல் வேண்டும் இவண் வரைந்து வைகல்**

**வாழச்செய்த நல்வினை அல்லது**

**ஆழங் காலைப் புனை பிரிது இல்லை”[85]**

என்னும் பாடலடிகளில் தான் மட்டும் வாழ்தல் வாழ்க்கையல்ல. அது இனிமையானதன்று. தன்னைச் சார்ந்தவரையும் உயர்த்திவாழச் செய்யவேண்டும். அதுவே, தன்னலமின்றிப் பொதுநலம் பேணும் நல்வினை எனக் குறிப்பிடுகிறது.

**ஈகை**

தமது பொருளைப் பிறருக்கு பகிர்ந்து கொடுத்தல், வறுமையால் வாழ வந்தவர்க்குத் தனது பொருள்களை ஈதல் என வாழ்வியல் அறங்கள் பல இருக்கின்றன. அரசனிடம் சென்று பொருள் பெற்று வந்த சங்கப் புலவர் ஒருவர் அறம் செய்வதற்கு என் அனுமதி அவசியம் இல்லை. நாடி வந்த வறியவர்களுக்குப் பொருளை வழங்கு எனத் தன் மனைவிக்கு அறிவுறை கூறுகிறார். செல்வம் பெற்றதன் பயன் ஈதல்தான். பழுத்த மரத்தை நாடிப் பறவைகள் செல்வதுபோலும் வறியவருக்கு ஈயும் குணமில்லாதவன் பொருள் இருந்தும் இல்லாதவனாகிறான்.

**“ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது**

**ஊதியம் இல்லை உயிர்க்கு”[86]**

வறியவர்க்கு ஈதலால் உண்டாகும் புகழ் மனித வாழ்விற்கு இன்றியமையாதது எனக் குறள் கூறுகிறது. இதே கருத்தை நற்றிணை புகழோடு வாழ்பவனின் செல்வம் அனைவருக்கும் பயன்பட்டு நிற்பதை,

**"இசைபட வாழ்பவர் செல்வம்போல"[87]**

என்று குறிப்பிடுகின்றது. இதனை குறுந்தொகை,

**"ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்" எனச்**

**செய்வினை கைம்மிக எண்ணுதி"[88]**

பிறருக்கு கொடுத்து இன்பம் பெறும்நிலை பொருள் இல்லாதவனுக்கு இல்லை. பொருள் ஒன்றே புகழ்பெறுவதற்கு வழிவகுக்கும் என்று இதன் மூலம் அறியலாம்.

பிறருடைய துன்பத்தை நீக்கி வேண்டியதைக் கொடுத்து வாழ்வதே இனிய வாழ்வு. தலைவன் எப்போதும் முயற்சி உடையவனாதலால் நாடிவரும் அனைவருக்கும் உதவும் குணமுடையவன். அதனால் இல்லை என்று சொல்லும் நிலையை அறியாதவன். அவனது மனம் பிறருக்கு உதவுவதையே குறிக்கோளாகக் கொண்டு எப்போதும் செயல்படும் மாற்றை,

**"இரந்தோர் மாற்றல் ஆற்றா**

**இல்லின் வாழ்க்கை வல்லா தோரே"[89]**

**"பிறர்க்குஎன முயலும் பேரருள் நெஞ்சம்"[90]**

என்னும் பாடலடிகளால் அறியமுடிகிறது.

**"பெருநன்று ஆற்றின் பேணாரும் உளரோ?"[91]**

என்னும் குறுந்தொகைப் பாடலடி பெரிய உதவி செய்தால் அவரை அனைவரும் விரும்பி போற்றுவர் எனக் குறிப்பிடுகிறது. இதனை,

**“காலத்தாற் செய்தநன்றி சிறிது எனினும்**

**ஞாலத்தின் மாணப் பெரிது”[92]**

எனக் குறள் கூறுகிறது.

ஈகை செய்யும் மனப்பான்மை அக்காலத்தில் வாழ்ந்த மக்கள் மனதில் வேரோடிக் காணப்பட்டது. ஈதல் இல்லா நாட்களும் இரவலர்கள் இல்லம் தேடி வராத நாட்களும் பயனற்றவை எனக் கருதப்பட்டது. இதனை குறுந்தொகை,

**“இரவலர் வாரா வைகல்**

**பலஆ குக!”[93]**

என்று கூறுகின்றது. அறத்தால் புகழ்பெற விரும்புபவர்கள் பொருளைச் சேமித்து வைத்து அழகு பார்க்கமாட்டார்கள். பிறருக்கு உதவுவதிலேயே கவனம் கொள்வர்.

**“நல்இசை வேட்ட நயனுடை நெஞ்சின்**

**கடப்பாட்டாள னுடையப்பொருள் போலத்**

**தங்குதற்கு உரியது அன்று”[94]**

எப்போதும் ஈதல் நன்மை தரும். ஈயாமல் இருப்பது நற்செயல் அன்று. வறியவருக்கு ஈந்து அன்புடையவராக வாழ்தல் நலம் தரும்.

**“நல்கின் வாழும் நல்கூர்ந் தோர்வயின்**

**நயன்இலர் ஆகுதல் நன்று”[95]**

என்று நாட்டை வாழ்த்தும் போதும், மன்னரை வாழ்த்தும்போதும் ஈகை போற்றப்பட்டது. நாட்டின் வளத்தோடு ஈகையும் சேர்த்துக்கொள்ளப்பட்டது. விளை

பொருள் நிறைய விளையவேண்டும். பொருள் பெற்று மகிழ இரவலா் வரவேண்டும் எனக் கூறும் மக்களின் அறநெஞ்சத்தின் உணா்வை அறியமுடிகிறது. இதனை ஐங்குறுநூறு,

**"விளைக வயலே! வருக இரவலா்"[96]**

என்ற பாடலடியின் மூலம் செல்வம் பெற்றவா்கள் அச்செல்வத்தைத் தனது எனக் கருதாமல் செல்வநிலையாமையை உணரவேண்டும். அந்நிலையாமையை உணா்ந்து பிறருக்கு வழங்குவதில் மகிழ்வுகொள்ளவேண்டும். தன்சுற்றத்தாா் வறுமையுடன் வாடியிருக்கத் தான்மட்டும் மகிழ்ந்திருப்பது தவறானச் செயலாகும். ஈதல் என்னும் பண்பு மனித மனதை மேலே உயா்நிலைக்கு உயா்த்தும். ஈகை புரியாமல் வாழ்தலைவிட இறப்பதே மேலானதாகும் என்று கூறுகின்றது. இதனை கலித்தொகை,

**"…………………………….இவள்?**
**செறாஅது ஈதல் இரந்தாா்க்குஒன்று, ஆற்றாதுவாழ்தலின்**
**சாதலும் கூடுமாம் மற்று"[97]**

செல்வத்தைப் பெற்றவன் தான் இறக்கும் வரை அழியாமல் அதைப் பாதுகாத்து வைத்திருந்தாலும், பிறருக்குக் கொடுக்காமல் இருந்தாலும் அதை அவன் இழந்தவனாகவே கருதப்படுவான். பெற்ற பயனை அடையவில்லை என்று இதனால் அறியலாம்.

**"உண்ணான் ஒளிநிறான் ஓங்கு புகழ்செய்யான்**
**துன்னருங் கேளிா் துயா்களையான் - கொன்னே**
**வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ**
**இழந்தான்என் றெண்ணப் படும்"[98]**

என்று நாலடியாரில் செல்வத்தைப் பெற்றவன், செல்வ பயனை இழந்ததைக் கூறுகிறது.

**“உடாஅதும் உண்ணாதும் தம்உடம்பு செற்றும்**

**……………………………………………………**

**……………………………………………………**

**உய்த்தீட்டும் தேனிக் கரி”[99]**

செல்வத்தைப் பெற்றவன் பிறருக்கு ஈதல் வேண்டும். இல்லையேல் அதை எவ்வாரேனும் இழந்துவிடுவான். தான் பல இடங்களிலிருந்து கொண்டுவந்து சேர்த்த தேனை ஒரு நாளில் தேனீ இழந்து விடுவதைப்போல, செல்வந்தனும் ஒருநாள் தன் செல்வத்தை இழந்துவிடுவான் என தேனீயை உவமையாகக் காட்டப்பட்டுள்ளது.

கொடுக்கக் கொடுக்க செல்வம் வளரும். தன் சுற்றம் வாடத் தான் மட்டும் செல்வம் பெற்று மகிழ்ச்சியாக வாழ்வதினால் எந்தச் சிறப்பும் இல்லை. அச்செல்வம் பொலிவற்ற செல்வமேயாகும். இதனைக் கலித்தொகை,

**“கிளைஅழிய வாழ்பவன் ஆக்கம்போல் புல்லென்று**

**வளையானா நெகிழ்போடும் தோளாயின் எவன்செய்கோ?”[100]**

என்று கூறுகின்றது. யாருக்காவோ நன்மை செய்யும் பொருட்டுப் பொருள் தேடிச் சென்றவர்கள் அறம் சான்ற மனமுடையவராகக் கருதப்பட்டனர். அறம் செய்வதற்காக அவர்கள் ஈட்டச்சென்ற பொருள் உயிரைவிடச் சிறந்ததாகப் போற்றப்படுகிறது.

**“உயிரினும் சிறந்த ஒண்பொருள் தருமார்**

**நன்றுபுரி காட்சியர் சென்றனர்”[101]**

பிறருக்குக் கொடுப்பதன் மூலம் மகிழ்வடையும் மனம் இல்லாதவர்கள் வறுமையாளர்களாகக் கருதப்பட்டனர்.

**"தம்நயந்து உறைவோர்த் தாங்கி, தாம்நயந்து**

**இன்அமர் கேளிரொடு ஏமுறக் கெழீஇ,**

**நகுதல் ஆற்றார் நல்கூர்ந் தோர்!"[102]**

செல்வம் பெறுதலே ஈவதற்காகத்தான். அதனால் ஈகையைப் போற்றவேண்டும். ஒரு பொருளைக் கொடு எனப் பிறரிடம் இரந்து நிற்பது இழிவான செயலாகும். ஈயாமல் இருப்பது அதைவிட இழிவானச் செயலாகும்.

**"ஈயென இரத்தல் இழிந்தன்று. அதன் எதிர்**

**ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று"[103]**

என்று கூறுகிறது. அதனால் செல்வம் இருப்பவர்கள் அதனை பிறருக்கு கொடுத்தலை,

**"செல்வத்துப் பயனே ஈதல்"[104]**

செல்வம் பெற்றால் மட்டும் போதாது. அதனை நேரிய வழியில் பயன்படுத்திப் பிறருக்கும் கொடுத்து வாழ்வதே வாழ்வின் பயனாக இருந்திருக்கின்றது.

## அறத்தின் மேன்மை

அறம் செய்வார்க்கும் பெறுவார்க்கும் மகிழ்வளிப்பதாகும். மனிதனின் சிறப்பான குணங்களுள் ஒன்று அறம் செய்தல். அறச்சிந்தனை உடையவர்களைச் சங்க இலக்கியம் முதலாகப் பிற்கால இலக்கியங்கள் வரை பலவும் போற்றிப் புகழ்கின்றன.

**"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**

**பண்பும் பயனும் அது"[105]**

என்னும் குறள் இல்வாழ்வின் பயனே அறமியற்றல் எனக் கூறுகிறது. செல்வம் பெற்றதன் பயன் அனைவருக்கும் உதவுவதே என இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன.

நாலடியார் அறத்துப்பாலில் முதல் மூன்று அதிகாரத்தில் செல்வம், இளமை, யாக்கை நிலையாமை பற்றி கூறப்பட்டுள்ளது. இம்மை, மறுமை, வீடு என்ற மூன்றிற்கும் வழி அறமே ஆகும். ஒவ்வொரு மனிதனும் எல்லாச் சுகங்களும் பெற்று மகிழ்ச்சியோடு வாழ விரும்புகிறான். அதற்கு மிகவும் இன்றியமையாதது செல்வமே ஆகும். அறம், பொருள், இன்பம் என்ற மூன்றில் பொருள் இருந்தால் அறத்தையும் செய்யலாம். இன்பத்தையும் பெறலாம் என்பர். தெய்வப் புலவர்,

**“அருள்இல்லார்க்குஅவ் உலகம்இல்லை பொருள் இல்லார்க்கு**

**இவ்உலகம் இல்லாகி யாங்கு”[106]**

என்ற குறள் மூலம் பொருளின் சிறப்பை வெளிப்படுத்தியுள்ளார். இதனை புறம்,

**“ஆடுநர் கழியும் இவ்வுலகத்து கூடிய**

**நகைப்புறன் ஆக, நின் சுற்றம்!**

**இசைப்புறன் ஆக, நீ ஓம்பிய பொருளே!”[107]**

உலகம் அழிந்துபோவது நிலையான கருத்து. சுற்றம் மகிழ்வடைதல் வேண்டுமானால், பெருகச் சேர்த்துவைத்தச் செல்வம் அனைவருக்கும் பயன்பட வேண்டும் என்னும் சிந்தனை மேற்கண்ட பாடலடிகளின் மூலம் முன்வைக்கப்படுகிறது.

**“குன்றுதலை மணந்த மலைபிணித்து யாத்தமண்**

**பொதுமை சுட்டிய மூவர் உலகமும்**

**.......................................................**

**தொக்கு உயிர் வெளவும் காலை,**

**இக்கரை நின்று இவர்ந்து உக்கரை கொளலே"[108]**

என்னும் பாடல் ஆணவத்தால் கைப்பற்றியப் பெரிய நாடும், அதனால் உண்டான பெரும் செல்வமும் பெற்று என்ன பயன்? பணத்தால் எல்லாவற்றையும் பெறல் இயலுமா? வாழ்வில் நிலையாமையே நிலையானதென்று உணர்ந்து அறச்செயல்களை மேற்கொள்ளவேண்டும். அதுவே உயிர்க்கு நிறைவும் மேன்மையும் தருவதாகும் என வலியுறுத்துகிறது.

பெற்ற செல்வத்தைப் பகிர்ந்து கொடுக்காததால் பயன்ஏதும் விளைவது கிடையாது. அது தனக்கும் பயன்படாமல் பிறருக்கும் பயன்படாமல் அழியும் இயல்புடையது. சேர்த்த செல்வம் பகிர்ந்து கொடுப்பதால் பெருகுமே தவிர குறையும் இயல்புடையதாகாது. நிலையானவை என்று நாம் கருதுபவையெல்லாம் நிலையற்றது என்பதை உணரவேண்டும். முடிந்த வரையில் அறச்செயல்களைச் செய்யவேண்டும். செல்வம் நிலையாமையையும் உணரவேண்டும். இதனை வள்ளுவர் பின்வரும் குறள்வழி எடுத்தியம்புகிறார்.

**"நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்**

**வாளது உணர்வார்ப் பெரின்"[109]**

என்று நாள் என்பது அடுத்தடுத்து வந்து உயிரை அறுத்து விடுகிற இரம்பம் என்பதை உணரவேண்டும்.

**"திரை அவித்து நீர்ஆடல் ஆசா உரைப்பர்**

**..................................................**

**செய்வதற்கே ஆடும் திரு"[110]**

என்று கடல் அலை ஓய்ந்த பிறகு நீராடலாம் என கருதுவது எவ்வாறு அறிவற்ற செயலோ அவ்வாறானதே செல்வத்திற்கு அதிபதியாகி அறம் செய்யலாம் எனக் கருதுவதும். கையில் இருப்பதை அளவறிந்து செய்வதே போதுமானது.

**"அன்றுஅறிவாம் என்னாது அறம்செய்க மற்றுஅது**

**பொன்றுங்கால் பொன்றாத் துணை"[111]**

என்று கூறுகிறது. பொருளைக் கொண்டு தருமம் செய்யவேண்டும் என பழமொழி நானூற்றுப் பாடலும்,

**"படரும் பிறப்பிற்கொன் றீயார் பொருளைத்**

**…………………………………………**

**அடரும் பொழுதின்கண் இட்டுக் குடரொழிய**

**மீவேலி போக்கு பவர்"[112]**

பொருள்மீது கொண்ட பற்றின் காரணமாக வருகின்ற பிறவிகளுக்கு உதவும் தர்மத்தைச் செய்யாது அதனைத் தொகுத்து வைத்துவிட்டு, அதன் பயனை அனுபவிக்காமல் இறப்பார்கள். போர்களத்திலே பகைவரோடு போர் செய்யும்பொழுது பகைவரின் ஆயுதத்தால் தாக்குண்டு தம் குடற்சரிய, அதனை உள்ளே மீண்டும் எடுத்து இட்டு மேலே கட்டிவைத்துத் தாம் பிழைத்துவிட்டதாக மகிழ்பவரைப் போன்றவர்கள் பொருளை வழங்காது வைத்துச் சாகின்றவர்கள் என்பது இப்பாடலின் கருத்தாகும்.

எந்தக் காலத்திலும் அறவழிப்பட்டதாக வாழ்க்கை இருக்கவேண்டும் என்று இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. அறவழியில் வாழ்வதாகக் கூறிக்கொண்டு பொருளினைச் சேர்க்காமலும் வாழக்கூடாது என்பதை உணர்த்துவதற்காகப்

பிறரது வாசலுக்குச் சென்று செல்வத்திற்காக ஏங்கி நிற்காத அளவிற்குத் தேவையான செல்வத்தையும் சேர்க்கவேண்டும் என்கிறது.

செல்வத்தை அறவழியில்தான் ஈட்டவேண்டும். அறம் அல்லாத வழியில் ஈட்டும் செல்வம் நிலைத்த இன்பத்தினைத் தராது என்று திருவள்ளுவர்,

**“சலத்தால் பொருள் செய்து ஏமார்த்தல் பசுமண்**

**கலத்துள்நீர் பெய்து இரீஇயற்று”[113]**

என்னும் குறள் தீயவழிகளில் உருவாக்கிய பொருளைப் பாதுகாத்தல் என்பது பச்சை மண்கலத்தில் நீரினை வைத்துக்காப்பது போன்றது ஆகும் என்று தெிவிக்கிறது. பச்சை மண் கலத்தில் சேமித்து வைக்கும் நீரானது கசிந்து காணாமல் போய்விடும். அதைப்போலத் தீய வழியில் சேர்த்த பொருளும் வீணாகப் போய்விடும்.

‘தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்’ என்பது பழமொழி. அப்பழமொழிக்கேற்ப நாம் சிறுவயதிலேயே கிடைத்த செல்வத்தை அறம் செய்ய பழகிக்கொள்ள வேண்டும். செல்வம் நிலையற்றத் தன்மையுடையதால் உடம்பில் உயிரைக் கூற்றுவன் பற்றுவதற்கு முன்பு இருக்கின்ற செல்வத்தைப் பலருக்கும் பயன்படும் படியாக மாற்றவேண்டும் என்பதை,

**“ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே**

**செல்லும்வாய் எல்லாம் செயல்”[114]**

என்ற குறள் மூலமாக பிறவி எடுத்ததன் பயனே செல்வம் இருக்கின்ற பொழுது பிறருக்குக் கொடுத்து அருளுடையவராக வாழ்வில் சிறக்கவேண்டும். அதுவே அறம் கொண்ட வாழ்வாகும்.

## பலருக்கும் உதவும் அறம்

வாழ்க்கையில் நீங்காது நிலைத்து நிற்பவற்றுள் முதன்மையானது புகழ். அந்தப் புகழுக்கு அடிப்படையானது அறம். அறச்செயல்களுள் முதன்மையானது இல்லாதவர்களுக்கு ஈதல் ஆகும். ஆதனுங்கன் என்பான். ஒவ்வொரு நாளும் பலருக்கும் உதவும் அறத்தினைச் செய்து வருவதால் அவன் புகழின் மேன்மையை அடைந்தவன் என்று பாடியுள்ளார். கள்ளில் ஆத்திரையனார் என்னும் புலவர்,

**“எந்தை! வாழி ஆத னுங்க! என்**
**நெஞ்சம் திறப்போர் நிற்காண் குவரே;**
**……………………………………..**
**பலர்புரவு எதிர்ந்த அறத்துறை நின்னே”[115]**

மோரியர் என்னும் குடியினர் இந்த நிலம் முழுவதையும் ஆண்டனர். அவர்களின் ஆட்சிச் சக்கரத்திற்கு அப்பாற்பட்ட வெள்ளிமலைக்கு அப்பால் ஆதித்த மண்டலம் உள்ளது. அது இரவு பகல் பாராமல் எல்லோரையும் பாதுகாக்கிறது. அந்த ஆதித்தமண்டலத்தைப் போல் ஆதனுங்கனும் இரவு பகல் பாராமல் எல்லோரையும் பாதுகாக்கிறான். எனவே, என்னால் அந்த ஆதனுங்கனை மறக்கமுடியாது. அப்படி நான் அவனை மறந்துவிட்டேன் என்றால் நான் இறந்துவிட்டேன் என்று கூறி புலவர் ஆதனுங்கன் மேல்கொண்ட அன்பினைக் காட்டுவதற்கு வேறொன்றையும் குறிப்பிட்டுள்ளார். என் நெஞ்சத்தைப் பிளந்து பார்த்தீர்கள் என்றால் அதற்குள்ளும் ஆதனுங்கனைக் காணமுடியும் என்று அழகான அன்பினைக் காட்டியுள்ள அவர், அவனது ஈகைச் செயலைப் பாராட்டிப் பாடியுள்ளார். இதனால் அழியும் பொருளால் அழியாப் புகழைப் பெற வேண்டுகிறார் புலவர்.

**உண்பது நாழி! உடுப்பவை இரண்டே!**

ஒரு மனிதனின் குறைந்தளவு அடிப்படைத்தேவை உண்பதற்கு உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும்தான். பிற எல்லாம் நம் நாகரிக மோகத்தால் நம்மைப் பற்றிக்கொண்டவை. போதும் என நினைத்ததால்தான் பல சான்றோர்கள் எளிமையான வாழ்க்கையை வாழ்ந்து முடித்தார்கள். அது கருதியே,

**"உண்பது நாழி உடுப்பவை நான்குமுழம்"[116]**

என்று ஔவையாரும்,

**"தென்கடல் வளாகம் பொதுமை இன்றி**
**வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்**
**…………………………………………..**
**உண்பது நாழி; உடுப்பவை இரண்டே**
**……………………………………………**
**துய்ப்பேம் எனினே தப்புந பலவே"[117]**

இந்த உலகம் முழுவதையும் ஒரே குடையின்கீழ் ஆட்சி செய்யக்கூடிய மன்னனாக இருந்தாலும், ஒவ்வொரு நாளும் உணவிற்காக வேட்டையாடக்கூடிய ஒருவனாக இருந்தாலும், உண்ணும் உணவில் பெரியமாற்றம் எதுவும் கிடையாது. அதைப் போன்றே உடுக்கும் உடையும் மேல் ஒன்று, கீழ் ஒன்று என்ற இரண்டே ஆகும். எனவே, செல்வம் பெற்றவர்கள் அந்தச் செல்வத்தைப் பிறருக்குக் கொடுத்துப் புகழைப்பெற்று வாழவேண்டும். மாறாக அந்தச் செல்வத்தை எல்லாம் நாமே அனுபவிப்போம் என்று நினைத்தால் அதனால் கேடுதான் வந்துவிளையும் என்று அறத்தின் சிறப்பினை நக்கீரர் புலப்படுத்தியுள்ளார்.

## குழந்தை செல்வம்

இல்லற வாழ்க்கையில் கணவனும் மனைவியும் ஈடுபட்டு, காதல், கற்பு போன்ற ஒழுக்கங்களைப் பெற்றெடுத்ததன் மூலம் அவர்கள் தாய், தந்தையர் எனப்பெருமை பெற்றனர். பெற்றோருக்கும் குடும்பத்தில் உள்ள உறுப்பினர்களுக்கும் எவ்வாறு குழந்தைகளால் புகழ்கிடைத்தன என்பதனை இலக்கியங்கள் காட்டுகின்றன.

மக்கள் பெருக்கம் சமூகத்திற்கு ஒரு காரணியாகும். முந்தையக் காலத்தினைக் காணும்போது தற்போது ஒவ்வொரு நாட்டிலும் மக்கள்தொகை அதிகரித்துக் கொண்டே வருகிறது. இருந்தபோதிலும் மக்கள் செல்வத்தினைச் சிறந்த செல்வமாக அனைவரும் கருதுகின்றனர். அளவுக்கு அதிகமான குழந்தைப் பேற்றினை மட்டுமே தடுக்க நினைக்கின்றோமே அல்லாமல் குழந்தைப் பேற்றினையே தடுக்க நினைப்பதில்லை.

ஒரு காலத்தில் குழந்தைச் செல்வமே பெருஞ்செல்வமாகக் கருதப்பட்டது. மக்களைப் பெற்றவள் மகராசி என்றெல்லாம் கூறப்பட்டது. மனிதர்கள் தங்கள் குழந்தைகளைத் தங்கள் உடைமை என்று கருதினர். நல்லறிவுடைய குழந்தைகளைச் சிறந்த செல்வமாக கருதப்படுவதை குறள்,

**“பெறுமவற்றுள்யாம் அறிவது இல்லை அறிவு அறிந்த**

**மக்கட்பேறு அல்ல பிற”**[118]

செல்வம் படைத்த, நாடாளும் அரசனும் குழந்தையை செல்வமாக கருதியதைப் புறநானூறு,

**“படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்**
**உடைப்பெருஞ் செல்வர் ஆயினும் இடைப்படக்**
**………………………………………………**
**……………………………………………..**
**பயக்குறை இல்லை தாம்வாழும் நாளே”**[119]

என்னும் எத்தயைச் செல்வம் படைத்தவறாக இருந்தாலும் அவற்றை நுகறும் குழந்தை செல்வம் இல்லையென்றால் பெற்ற செல்வத்திற்கும், வாழ்ந்த வாழ்விற்கும் பயன் ஒன்றும் இருக்காது என்று கூறுகிறது.

**“குழல் இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்**
**மழலைச் சொல் கேளாதவர்”**[120]

என்ற குறளாலும், குழந்தைச் செல்வத்தின் பயனை புறநானூறு,

**“யாழொடும் கொள்ளா; பொழுதொடும் புணரா;**
**பொருள்அறி வாரா, ஆயினும், தந்தையர்க்கு**
**அருள்வந் தனவால், புதல்வர்தம் மழலை”**[121]

என்று யாழிசையும், காலமும், பொருளும் பெற்றோருக்கு இன்பத்தைத் தராது. குழந்தையின் மழலைச் சொல்லே பேரின்பம் தரும் என்பதை இவ்வடிகள் விளக்குகின்றன. மேலும் ஒரு பாடல்,

**“மாசுஇல் கற்பின், புதல்வன், தாய் என”**[122]

குழந்தையால் தாய்பெற்ற சிறப்பும் இதன் மூலம் அறியமுடிகிறது.

## கல்விச் செல்வம்

மனநிறைவைத் தருவது எதுவோ அதுவே செல்வம் “செல்வம் என்பது சிந்தையின் நிறைவே” என்றார் குமரகுருபரர். கல்வியைப் போல் மனநிறைவு

தரும் ஒன்று இல்லவே இல்லை. ஆதலில் கல்வியே சிறந்த செல்வம் என்பது தகும். இத்தகைய கல்விச் செல்வம் ‘அனைவருக்கும் கல்வி’ என்ற நிலை இல்லாமல் இருந்தது.

ஆசிரியருக்கு உரிய நேரத்தில் உதவிகள் புரிந்தும், தேவையானபோது பொருள் கொடுத்தும் கல்வியை கற்றுக்கொள்ளும் நிலையை புறநானூறு,

**“உற்றுழிஉதவியும் உறுபொருள் கொடுத்தும்**

**பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே”[123]**

என்ற வரியால் அறியலாம்.

பெற்றத்தாய் தன் பிள்ளைகளிடத்தில் அன்பில் வேறுபாடு காட்டமாட்டாள். ஆனால், அவளே வேறுபாடு காட்டுகிறாள் என்றால், கல்வி கற்ற ஒருவனிடத்தில்தான் என்கிறது. ஒரு குடும்பத்தில் பிறந்த பலரிலும் மூத்தவனை அரசு விரும்பாமல் கல்வி கற்ற அறிவுடையவனை அரசு விரும்பும் என்றும், சமுதாயத்தில் வேறுபாடுகாட்டும் நான்கு சாதி பிரிவிலும், கீழ்சாதி பிரிவில் கல்வி கற்ற ஒருவன் கீழ், மேல்சாதி பிரிவை சார்ந்தவனும் இருப்பான் என்று புறநானூறு கூறுகிறது.

**“பிறப்புஓர் அன்ன உடன்வயிற்று உள்ளும்**

**சிறப்பின் பாலால், தாயும்மனம் திரியும்;**

**ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்**

**‘மூத்தோன் வருக’ என்னாது அவருள்**

**அறிவுடை யோன்ஆறு அரசும் செல்லும்**

**வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்**

**கீழ்பால் ஒருவன் கற்பின்**

**மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே"**[124]

என்பதால் அறியலாம். நாலடியாரும்,

**"கடைநிலத்தோ ராயினும் கற்றறிந் தோரைத்**

**தலைநிலத்து வைக்கப் படும்"**[125]

எந்தச் செல்வமும் எவ்வளவு வளர்த்தாலும் பெருக்கினாலும் போதும் என்ற மனநிறைவு ஏற்படாது. ஆனால் கற்றது போதும் என்னும் மனநிறைவைக் கல்வி வழங்கும். இதனை 'கற்பனவும் இனி அமையும்' என்னும் தாயுமானவர் வாக்கால் நன்கு அறியலாம்.

கல்வி என்றும் அழியாமல் உள்ள பொருள். தன்னை உடையவனையும் உள்ளவன் ஆக்கும் பொருள். தன்னை நாடாதவனையும் நாடிவரவைக்கும் பொருள் என்பதனை குறள்,

**"கேடுஇல் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு**

**மாடுஅல்ல மற்றை யவை"**[126]

என்றும்,

**"உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்**

**கடையரே கல்லா தவர்"**[127]

என்றும், உலகை படைத்தவன் ஒருவன் உள்ளான் என்பதை உணர்த்தும் உண்மைப்பொருள். ஆதலால், 'கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி' என்றார் ஔவையார்.

வெள்ளம் ஆடு, மாடுகளை அடித்துச்செல்லும் நிலபுலன்களிலுள்ள மண்ணையும், விளைபொருளையும் வாரிக்கொண்டு ஓடும். பள்ளத்தை மேடாக்கும்.

மேட்டைப் பள்ளமாக்கும். ஆனால், எந்த வெள்ளத்தாலும் கல்விச்செல்வம் அடித்துக்கொண்டு போகாது.

தன்னை நெருங்கிய பொருளை எல்லாம் சுட்டெரிக்க வல்லது தீ. அத்தீயாலும் சுட்டெரிக்க முடியாதது கல்வி. பொருளுக்கு வரி வாங்குவதுபோல் வரி வாங்க, ஆள்பவர்கள் நினைத்தாலும் வங்கமுடியாதது கல்வி.

எந்தச் செல்வத்தை அள்ளிக்கொடுத்தாலும் கொடுத்தவரிடத்து அப்பொருள் குறையவே செய்யும். ஆனால், கல்விச் செல்வம் மட்டுமே கொடுத்தவர்க்குக் குறையாதது மட்டுமன்றி மேலும் பெருகவும் செய்யும்.

கள்வர் பெரியவரா? காப்பார் பெரியவரா? என்பது பழமொழி. எவ்வளவு கட்டுக்காவல் இருந்தாலும் அவற்றைக் கடந்து களவாடிக் கொண்டுபோகக் கூடியவர்களும் உலகில் உள்ளன. ஆனால், எத்தகைய கள்வர்களாலும் களவாடமுடியாதது கல்விச் செல்வம். எத்தகையவராலும் எளிதாகக் காக்கக்கூடியது கல்விச்செல்வம். ஆம்! கள்வர்க்கு மிக அரியது. காப்பவர்க்கு மிக எளியது. இக்கருத்தை ஒருங்கே விளக்குகின்றது.

**“வெள்ளத்தே போகாது வெந்தழலால்**
**வேகாது வேந்தராலும்**
**கொள்ளத்தான் முடியாது கொடுத்தாலும்**
**நிறைவொழியக் குறை படாது**
**கள்ளர்க்கோ மிகஅரிது காவலோ**
**மிகஎளிது கல்வி என்னும்**
**உள்ளத்தே பொருளிருக்க உலகெல்லாம்**
**பொருள்தேடி உழல்வ தேனோ?**[128]

நாடாளும் காவலன் ஒருவனின் புகழும், அவன் நாட்டு எல்லையளவில் அமையும். ஆனால், நாடாளும் நாவலன் புகழோ நாட்டெல்லை கடந்து உலகமெல்லாம் விரியும். பொருட்செல்வத்தினும் கல்விச் செல்வம் சிறந்தது என்பது இது வெளிப்படுத்தும்.

நாடாள்பவனாக இருப்பவன் வயதால் முதிர்ந்த ஒருவனை அழைத்து நல்லுரை கேட்பது இல்லை. கல்வியால் சிறந்த ஒருவன் காட்டும் வழியில் செல்வான். ஆதலால், ஆண்டு முதுமையிலும் அறிவின் முதிர்வே மதிக்கப்படும் என்பதும் வெளிப்படும்.

இத்தகையவற்றை எல்லாம் நன்கு அறிந்ததால்தான் ஆட்சிச்செல்வமும் அறிவுச் செல்வமும் ஒருங்கே கொண்டு விளங்கிய அதிவீரராமபாண்டியன்.

**“கற்கை நன்றே கற்கை நன்றே**

**பிச்சை புகினும் கற்கை நன்றே”**[129]

என்றும்,

**“அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்”**[130]

என்றும் கூறினான். அவனே கல்வி அறிவில்லாத ஒருவனைப் பெறுவதிலும் அவன் பெற்றோர்க்குப் பிள்ளைப்பேறே வாய்க்காது போயிருந்தால்கூடப் பெருமையாம் என்றும் இடித்துக்கூறினான். கல்விச் செல்வத்தைப் பெறாதவனை எவ்வளவு வெறுத்தான் அவ்வேந்தன் என்பது இதனால் நன்கு விளங்கும். எனவே, செல்வத்தில் சிறந்ததும், அழிவில்லாததும் கல்விச்செல்வமே என்பது இதனால் அறியலாம்.

# தொகுப்புரை

- செல்வம் என்பது பற்றியும், செல்வத்தின் சிறப்புகளும், அதன் மதிப்புகளும் விளக்கப்பட்டுள்ளன.
- நிலையில்லாத செல்வத்தைத்தேடி நிலையில்லாத இளமைக்காலத்தில் பொருள்தேடி பிரிதல் வேண்டாம் என்றும், சங்க இலக்கியங்கள் வழி ஆராயப்பட்டுள்ளன.
- செல்வம் செல்லக்கூடியதும், இடம்மாறக் கூடியதும் செல்வம் என்ற கருத்தினில் விளக்கப்பட்டுள்ளன.
- செல்வத்தை எவ்வாறு பாதுகாத்தாலும் விரைந்தழியும் தன்மைக் கொண்டது என்று சங்க இலக்கியங்கள் வழி விளக்கப்பட்டுள்ளன.
- செல்வத்தை அன்புள்ளத்தோடும், ஈகைக்குணத்தோடும் பகிர்ந்த உண்டால் பல்லுயிரும் ஓம்பும் என்று ஆராயப்பட்டுள்ளன.
- செல்வத்தை எவ்வளவு சேர்த்தாலும் ஒரு மனிதனின் குறைந்தளவுத் தேவை என்று பார்த்தால் அனைவருக்கும் ஒரே விதமானதுதான் என்பது விளக்கப்பட்டுள்ளன.
- செல்வத்தின் வழி அனைவருக்கும் உதவுவது சிறந்த அறமாகும் என்பது விளக்கப்பட்டள்ளது.
- செல்வங்களில் சிறந்த செல்வமாக குழந்தை செல்வமும், அச்செல்வத்தால் விளைந்த மக்கள்தொகை பெருக்கமும் விளக்கி ஆராயப்பட்டுள்ளன.
- மனநிறைவைக் கொடுத்து அழியாமல் தன்னுடனே வரும் செல்வம் கல்விச் செல்வம் என்று சங்க இலக்கியங்கள் வழி விளக்கப்பட்டுள்ளன.

# இயல் - 4

## அடிக்குறிப்புகள்

1. திருவள்ளுவர், திருக்குறள், கு.எ.752.
2. புல.இராமையா (இ.ஆ.ப.), தா.சந்திரசேகரன் (இ.ஆ.ப.), செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி, ப.82.
3. தமிழ்ப்பிரியன் (உ.ஆ.), சித்தர் பாடல்கள் (முதல் தொகுதி), பொருளாசை விலக்கல், பா.எ.40.
4. திருமூலர், திருமந்திரம், பா.எ.174.
5. பின்னத்தூர் திரு. அ.நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), நற்றிணை, பா.எ.134:1-2.
6. மேலது, பா.எ.210:5-9.
7. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.751.
8. பின்னத்தூர், திரு.அ.நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.214:1-2.
9. திரு.பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.), குறுந்தொகை, பா.எ.63:1-2.
10. மேலது, பா.எ.120:1-2.
11. அரிச்சந்திரப்புராணம் - 8, 38:1-6.
12. திரு.பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.283:1-4.
13. மூன்றுறையரையனார், பழமொழி நானூறு, பா.எ.217:4.
14. திரு.பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), பரிபாடல், பா.எ.19:10.
15. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), கலித்தொகை, பா.எ.10:2-3.
16. ஔவையார், நல்வழி, பா.எ.22.
17. ஔவையார், உலகநீதி, பா.எ.3:3.
18. சிவ.கன்னியப்பன் (பொ.உ.), தண்டலையார் சதகம், பா.எ.24:1-8.

19. நாலடியார், ஈயாமை, பா.எ.273.

20. நீதிநூல்கள், நன்னெறி, பா.எ.3.

21. ஔவையார், கொன்றைவேந்தன், பா.எ.4.

22. குமரேசச் சதகம், பா.எ.34:5-6.

23. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.11:1-4.

24. மேலது, பா.எ.21:10-15.

25. மேலது, பா.எ.21:14-15.

26. மேலது, பா.எ.22:1-3.

27. ந.மு.வேங்கடசாமிநாட்டார், ரா.வேங்கடாசலம் (உ.ஆ.), அகநானூறு - நித்திலக்கோவை, பா.எ.335:1-4.

28. மேலது, பா.எ.111:1-3.

29. பின்னத்தூர் திரு.அ.நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.243.1:2-11.

30. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.8:10-15.

31. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.46.

32. மேலது, கு.எ.332.

33. வள்ளலார், திருவருட்பா, பா.எ.718.

34. திரு.பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), ஐங்குறுநூறு, பா.எ.336:3-4.

35. பின்னத்தூர் திரு.அ.நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.46:11.

36. மேலது, பா.எ.241:12.

37. திரு.பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), குறுந்தொகை, பா.எ.350:8.

38. பின்னத்தூர் திரு.அ.நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.71:1.

39. மேலது, பா.எ.126:11.

40. ஔவையார், நல்வழி, பா.எ.34.

41. தேவாரம், திருக்கொண்டீச்சுரம் - 4, பா.எ.70.4:1-2.

42. தேவாரம், திருக்கானூர் - 4, பா.எ.76.3:1-2.

43. நாலடியார், செல்வம் நிலையாமை, பா.எ.1.

44. அதிவீரராம பாண்டியன், நறுந்தொகை, பா.எ.49.

45. அதிவீரராம பாண்டியன், வெற்றிவேற்கை, பா.எ.48.

46. நாலடியார், செல்வம் நிலையாமை, பா.எ.2.

47. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.88.

48. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), பதிற்றுப்பத்து, 2-ம் பத்து, பா.எ.3:10-13.

49. மேலது, 2-ம் பத்து, பா.எ.9:26-27.

50. அதிவீரராம பாண்டியன், வெற்றிவேற்கை, பா.எ.54.

51. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), பதிற்றுப்பத்து, தொகுதி-1, பா.எ.116:3-8.

52. மேலது, தொகுதி-2, பா.எ.355:1:3.

53. மேலது, பா.எ.250:4-6.

54. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), மதுரைக்காஞ்சி, பா.வ.156-163.

55. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், புகார்க்காண்டம்-9 காதை, பா.வ.72-76.

56. மேலது, நடுகற்காதை, பா.வ.152-154.

57. கம்பர், கம்பராமாயணம், யுத்தகாண்டம், இந்திரசித் வதைப்படலம்-III, பா.எ.3066:3-4.

58. மேலது, யுத்தம், கும்பகர்ண வதைப்படலம்-II, பா.எ.1378:12.

59. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.376.

60. அரிச்சந்திரபுராணம், 8:129.

61. மேலது, 8:46.

62. திரிகூடராசப்பகவிராயர், திருக்குற்றாலக்குறவஞ்சி, ப.எ.115.

63. அதிவீரராமபாண்டியன், வெற்றிவேற்கை, பா.எ.55.

64. திருத்தக்கதேவர், சீவகசிந்தாமணி, இலம்பகம்-13, பா.எ.2624:4.

65. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.247.

66. பின்னத்தூர் திரு.அ.நாராயணசாமி ஐயர், மே.கா.நூ., பா.எ.16:4-11.

67. அருணகிரிநாதர், கந்தர் அலங்காரம், பா.எ.49:3-4.

68. திரு.பொ.வே.சோமசுந்தரனார், மதுரைக்காஞ்சி, பா.வரி.125-126.

69. மேலது, பா.வரி.173-176.

70. குருபாத தேசிகர், குமரேச சதகம், பா.எ.73.

71. ஔவையார், நல்வழி, பா.எ.32.

72. கதிர்முருகு (உ.ஆ.), அறநெறிச்சாரம், பா.எ.19.

73. திருமூலர், திருமந்திரம், பா.எ.165.

74. சீத்தலைச்சாத்தனார், மணிமேகலை, 4:114.

75. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.243.

76. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.18:5-6.

77. மேலது, பா.எ.18:10-11.

78. மேலது, பா.எ.145:13-17.

79. ந.மு.வேங்கடசாமி நாட்டார், ரா.வேங்கடாசலம் பிள்ளை (உ.ஆ.), அகநானூறு, களிற்றியாணை நிரை, பா.எ.155,1:3.

80. மேலது, பா.எ.140:17-18.

81. திருமூலர், திருமந்திரம், பா.எ.169.

82. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), புறநானூறு - தொகுதி-2, பா.எ.377:10-11.

83. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.226.

84. நாலடியார், செல்வம் நிலையாமை, பா.எ.8.

85. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-2, பா.எ.367:9-11.

86. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.231.

87. பின்னத்தூர் திரு. அ. நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.217-1.

88. திரு.பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), குறுந்தொகை, பா.எ.63:1-2.

89. பின்னத்தூர் திரு.அ.நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.84:11-12.

90. மேலது, பா.எ.186:8.

91. திரு.பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), குறுந்தொகை, பா.எ.115-1.

92. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.102.

93. திரு.பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.), குறுந்தொகை, பா.எ.137:3-4.

94. மேலது, பா.எ.143:4-6.

95. மேலது, பா.எ.327:1-2.

96. திரு.பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.), குறுந்தொகை, பா.எ.2:2.

97. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.61:10-12.

98. நாலடியார், செல்வம் நிலையாமை, பா.எ.9.

99. மேலது, பா.எ.10.

100. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), மே.கா.நூ., பா.எ.34:18-19.

101. ந.மு.வேங்கடசாமி (உ.ஆ.), ரா.வேங்கடாசலம் பிள்ளை, அகநானூறு, தொகுதி-2, மணிமிடைப்பவளம், பா.எ.245:1-2.

102. மேலது, தொகுதி-1, பா.எ.151:1-3.

103. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-2, பா.எ.204:1-2.

104. மேலது, தொகுதி-1, பா.எ.189:7.

105. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.45.

106. மேலது, கு.எ.247.

107. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-1, பா.எ.29:24-26.

108. மேலது, பா.எ.357:1-7.

109. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.334.

110. கதிர்முருகு (உ.ஆ.), அறநெறிச்சாரம், பா.எ.28.

111. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.36.

112. மூன்றுறையரையனார், பழமொழி நானூறு, பா.எ.220.

113. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.660.

114. மேலது, கு.எ.33.

115. திரு. அளவை சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-1, பா.எ.175.

116. ஔவையார், நல்வழி, பா.எ.28:1.

117. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-1, பா.எ.189:1-8.

118. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.61.

119. திரு.ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-1, பா.எ.188.

120. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.66.

121. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-1, பா.எ.92:1-3

122. ந.மு.வேங்கடசாமி நாட்டார், ரா.வேங்கடாசலம் பிள்ளை, அகநானூறு-1, பா.எ.6-13.

123. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-1, பா.எ.183:1-2.

124. மேலது, பா.எ.182:3-10.

125. நாலடியார், கல்வி, பா.எ.133.

126. திருவள்ளுவர், மே.கா.நூ., கு.எ.400.

127. மேலது, கு.எ.395.

128. ஆசிரியர் பெயர் இல்லை, விவேகசிந்தாமணி, பா.எ.38.

129. அதிவீரராமபாண்டியன், வெற்றிவேற்கை, பா.எ.35.

130. மேலது, பா.எ.39.

# இயல் - 5

# உலகம் நிலையாமை

**முன்னுரை**

சூரியனிலிருந்து விடுபட்டு வந்த ஒரு ஒளிப் பிழம்புதான் பூமி என்று அறிவியல் அறிஞர்கள் கூறுகின்றனர். பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு அப்பூமி குளிர்ச்சி அடைந்து உயிர்கள் தோன்றுவதற்கான சூழ்நிலை உருவாகியது. ஒரு செல் உயிர்கள் முதல் பல செல்களை உடைய மனிதன் வரை உலகில் தோன்றுவதற்கு பல கோடிக்கணக்கான ஆண்டுகள் ஆகியதாக உலகின் பரிணாமக்கொள்கை உடைய வல்லுநர்கள் கூறுகிறார்கள். அப்படித் தோன்றிய எந்த உயிர்களும் நிலைத்து நின்றதாக வரலாறு இல்லை. சில உயிர்கள் ஒரே நாளில் தோன்றி ஒரே நாளில் மறையும். சில உயிர்கள் சில மாதங்கள் வரை வாழ்ந்து மறையும். சில உயிர்கள் பல ஆண்டுகள் வரை வாழ்ந்து மறையும். அதுபோலவே உலகத்தில் இருக்கின்ற கண்ணுக்குத் தெரிகின்ற எந்த பொருளும் நிலைத்து நிற்பதில்லை. காணாத பொருள் எதுவோ அதுவே நிலைத்து நிற்கும் என்பார்கள் சித்தாந்த வல்லுநர்கள்.

நம் கண்ணுக்குத் தெரிகின்ற உலகமே சில யுகங்களுக்குப் பிறகு சூன்யமாக மறைந்துவிடும் என்று பகவத்கீதையில் கிருஷ்ணபகவான் கூறியுள்ளார்.

மனிதன் எப்படிப் பிறந்து இறந்து வாழ்கிறானோ அதுபோலவே சில காலம் இந்த உலகமும் ஓய்வு நிலையில் இருப்பதாக வேதம் சொல்கிறது. எனவே, இவ்வுலகம் நிலையற்றது என்பதும், இவ்வுலகத்தில் இருக்கின்ற பொருள்கள் நிலையற்றது என்பதும் உயிர்கள் நிலையற்றது என்பதும் தெளிவாகிறது.

உலகம் நிலையற்றது என்பதை உணர்ந்த சங்க காலப் புலவர்கள் இவ்வுண்மையை மக்களுக்கு உணர்த்தவேண்டும் என்ற நோக்கில் பல இலக்கியங்களைப் படைத்துள்ளனர். அவ்விலக்கியங்களைப் படிக்கும் எதிர்காலச் சமுதாயம் நல்லுணர்வோடும் நல்லறிவோடும் வாழவேண்டும் என்று விரும்பினர். அதற்காகவே, இலக்கியங்களில் நிலையாமைத் தத்துவத்தை வெளிப்படுத்தியுள்ளனர். இக்கருத்தையே பட்டுக்கோட்டையாரும்,

**“விதியென்னும் குழந்தை கையில் உலகந்தன்னை**

**விளையாடக் கொடுத்துவிட்டாள் இயற்கையன்னை - அது**

**விட்டெறியும் உருட்டிவிடும் மனிதர் வாழ்வை**

**மேல் கீழாய்ப் புரட்டிவிடும் வியந்திடாதே”**[1]

என்ற பாடலின் மூலமாக உலகம் மாறும் தன்மையுடையது என்று கூறுவது குறிப்பிடத்தக்கது.

இங்கு உலக நிலையாமைத் தத்துவங்களை சங்க இலக்கியங்களும், பிற இலக்கண இலக்கியங்களும் எங்ஙனம் உணர்த்துகின்றன. அவை மக்களுக்கு எவ்வகையில் பயனுடையதாக அமைந்துள்ளன என்பதையும், ஒவ்வொரு உயிரினங்களையும் தம் கீழ் வைத்துள்ள உலகமே அழியும் தன்மை வாய்ந்தது என்பதையும் இவ்வியல் கூறுகின்றது.

## உலகம் (Ulakam)

உலகம் என்பது, “உலகம் Ulakam, n.Lloka. 1.The earth; (பூமி (பிங்)., 2.any world; புவனப்பொது (திவ், திருவாய் 6:10.1), 3.Country Territory, region; நிலப்பகுதி, மாயோன் மேய காடுறை உலகம் (தொல்,பொ.5), 4.sky, etherial

regions; ஆகாயம் (பிங்), 5.Point of the compass; திக்கு (திவா), 6.Inhabitants of the world; mankind in general; மக்கட்தொகுதி, (தொல்.சொல்.57. சேனா), 7.The excellent, the Good; நன்மக்கள், உலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீர் (திருமுரு.124), 8.Created beings; சீவராசிகள், உலக உவப்ப வலனேர்பு திரிதரு (திருமுரு.1), 9.Lofty Character; உயர்குணம் (பிங்), 10.Usage, custom; வழக்கம், ஒழுக்கநடையே யுலகமதாகும் (மாறன-320)"[2] என்று உலகம் என்பதற்கு சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் பேரகராதி (Tamil Lexicon) விளக்கம் தருகிறது.

உலகம் மூன்று என்பதை மணிமேகலை,

**"உலகம் மூன்றினும் உயிர்ஆம் உலகம்**

**அலகுஇல, பல்உயிர்அறு - வகைத்து ஆகும்"[3]**

என்று உலகம் மூன்று வகைப்படும். அவை கீழ் உலகம், நடு உலகம், மேல் உலகம் என்பனவாகும். வினை செய்வதற்குரியது நடு உலகம், நல்வினைப் பயன் நுகர்தற்குரியது மேல் உலகம், தீவினைப்பயன் நுகர்வதற்குரியது கீழ் உலகம். இம்மூன்று உலகங்களில் உள்ள உயிர்கூட்டம் எண்ணிறந்தன என்று கூறுகிறது. இதனையே திருவிளையாடற் புராணமும்,

**"மூவகை உலகில் உள்ள தீர்த்தமும் முறையால் என்றும்"[4]**

என்று கூறுகிறது. அதனால் மூன்று உலகங்களிலும் நல்வினை, தீவினை செய்வதற்குரிய உலகம் நடுஉலகம் என்கின்ற பூமிதான் என்பது இதன்மூலம் அறியமுடிகிறது.

பூமி என்கின்ற மண்ணுலகின் பெயராகப் பிங்கலநிகண்டு.

**“அவனி வைய மகலிடங் காசினி**
**புவனி புடவி பூதலம் பூமி**
**புவனம் படி புவி பொழிலே பூவே**
**சகமே தினிதரை தாலஞ் சாந்தை**
**யுகம்பார் தரணி யுலோகந் தாரணி**
**தலநீர் வரைப்புத் தராதல மகாதல**
**நிலம்பிரு திவிதர நிலையே ஞால**
**மசலைபூ வலய மளக்கர் மண்டலம்**
**பவன மகநடு பாலம் விபுலங்**
**கோத்திரை குவலயங் குவ்வே கோநேமி**
**தாத்திரிவேலா வலயந் தரித்திரி**
**திணைமகி சக்கரம் பொறை நகம்பாரி**
**வசுந்தரை வசுமதி வசுதை மண் ணுலகே”[5]**

அவணி, வையம், அகலிடம், காசினி, புவனி, புடவி, பூதலம், பூமி, புவனம், படி, புவி, பொழில், பூ, சகம், மேதினி, தரை, தாலம், சாந்தை, யுகம், பார், தரணி, உலோகம், தாரணி, தலம், நீர்வரைப்பு, தராதலம், மகாதலம், நிலம், பிருதிவி, தரம், நிலை, ஞாலம், அசலை, பூவலயம், அளக்கர், மண்டலம், பவனம், அகம், நடு, பாலம், விபுலம், கோத்திரை, குவலயம், கு, கோ, நேமி, தாத்தினி, வேலாவலயம், தரித்திரி, திணை, மகி, சக்கரம், பொறை, நகம், பாரி, வசுந்தரை, வசுமதி, வசுதை என 59 வகையான பெயர்கள் மண்ணுலகிற்கு உள்ளது என்பதை இதனால் அறியலாம்.

## உயிர்களைத் தாங்கும் உலகம் நிலையற்றது

உலகில் பல்லுயிரினங்களும் தோன்றிய பிறகு ஆறறிவு படைத்த மனிதனின் முயற்சியால் உடல், உள்ளம், உணர்வு, அறிவு, செயல் இவைகள் பண்பட்டு, பண்பாட்டு முன்னேற்றமும் சமுதாயத்தில் மலர்ந்தன. தத்துவ உலகில் கற்றார், கல்லார் இடையில் உலகம் நிலையில்லாதது என்ற உண்மையை உணரத் தலைப்பட்டனர். பழம்பெரும் இலக்கண நூலான தொல்காப்பியத்தில் உலகம் நிலையற்றது என்பதை முதன்முதலில் காஞ்சித்திணை வாயிலாக தொல்காப்பியர் வெளிப்படுத்தியுள்ளார்.

நிலையில்லாத இந்த உலகத்தில் போர் செய்து உலக உயிர்களையும், பொருள்களையும் அழிப்பதை விரும்பாத தொல்காப்பியர்,

**“பாங்கருஞ் சிறப்பிற் பன்னெறி யானும்**
**நில்லா உலகம் புல்லிய நெறித்தே”[6]**

என்ற நூற்பா மூலமும், மேலும்,

**“பல் நெறியானும் நில்லா உலகம் புல்லிய நெறித்து”[7]**

என்று இளம்பூரணர் உரை கருத்தாலும் உலகம் நிலையற்றது என்பதை தெளிவாக உணர்த்தியுள்ளனர். புறப்பொருள் வெண்பாமாலையில் காஞ்சிப் பொதுவியல் என்ற பகுதியில் பெருங்காஞ்சியில் மலைகள் உயர்ந்து நிற்பதற்கு இடமான பெரிய உலகத்தின் தோற்றமுடையன யாவும் நிலைத்து நிற்றல் இல்லை என்கிறது.

**“மலையோங்கிய மாநிலத்து**
**நிலையாமை நெறியுரைத்தன்று”[8]**

என்றும் முதுகாஞ்சியில்,

**"தலைவரும் பொருளைத் தக்காங் குணர்த்தி**

**நிலைநிலை யாமை நெறிப்பட உரைத்தன்று"[9]**

என்பதனால் உலகமும், உலகிலுள்ள அனைத்துப் பொருட்களும் நிலையில்லாதது என்று உணர்த்துகிறது.

## நிலையாமையும் ஊழியும்

இவ்வுலகம் காற்றாலோ, நீராலோ, தீயாலோ, பூமி வெடித்தோ, ஆகாயம் பிளந்தோ ஒரு நாள் அழியும் என்ற கருத்துப் படித்த மற்றும் படிக்காத பாமரர் அனைவரும் எண்ணும் எண்ணமாகும். தமிழ் இலக்கியங்கள் 'ஊழி' என்ற சொல்லுக்கு சிறப்பான இடத்தைத் தருகின்றன. உலகம் அழியும் காலத்தை 'ஊழிக்காலம்' என்பர். இக்கருத்தை பரிபாடலும்,

**"தொன்முறை இயற்கையின் மதியொ……………..**

**……………. மரபிற்று ஆக,**

**பசும்பொன்னுலகமும் மண்ணும் பாழ்பட,**

**விசும்பில் ஊழி ஊழூழ் செல்ல"[10]**

என்று ஊழிக் காலத்தில் மண்ணுலகமும், விண்ணுலகமும் பாழ்பட்டன. பழைய இயல்புடைய சூரியனும், சந்திரனும் கெட்டன. பல ஊழிகளில் ஆகாயம் அழகிழந்தது என்று உலகத்தின் ஊழிகாலத்தையும்,

**"கருவளர் வானத்து இசையில் தோன்றி**

**உருஅறி வாரா ஒன்றன் ஊழியும்**

**உந்துவளி கிளர்ந்த ஊழ்ஊழ் ஊழியும்**

**செந்தீச் சுடரிய ஊழியும், பனியொடு**

**தண்பெயல் தலைஇய ஊழியும் அவையிற்று**

**உண்முறை வெள்ளம் மூழ்கி ஆர்தருபு,**

**மீண்டும் பீடுஉயர்பு ஈண்டி, அவற்றிற்கும்**

**உள்ளீடு ஆகிய இருநிலத்து ஊழியும்"[11]**

ஒலி வடிவமான பரமாணுக்கள் வளர்கின்ற வானமாகிய முதல் பூதத்தினது ஊழி தோன்றியது. அதற்குப் பின்பு பொருள்களை அசைக்கும் காற்று தோன்றியது. காற்றிலிருந்து தீயும், தீயிலிருந்து பனியும் மழையும் பெய்து, இறுதியில் நீரில் நான்கு பூதங்களும் இணைந்து நிலத்தின் ஊழி தோன்றியது என்பதும்,

**"நெய்தலும், குவளையும், ஆம்பலும். சங்கமும்**

**மைஇல் கமலமும், வெள்ளமும், நுதலிய**

**--------------------------------**

**--------------------------------**

**ஊழி யாவரும் உணரா**

**ஆழி முதல்வ! நிற் பேணுதும் தொழுது"[12]**

நெய்தல், குவளை, ஆம்பல், சங்கம், கமலம், வெள்ளம் எனக் கூறப்பெறுகின்ற நெடுங்காலங்கள் கழிந்து பின்பு, உயிர்கள் தோன்றுவதற்கான நிலத்தை வெள்ளத்தில் இருந்து எடுத்துக் காத்தத் திருமால் வராக அவதாரம் எடுத்தார் என்று பரிபாடல் கூறுகிறது.

தமிழ் இலக்கியங்கள் இந்த உலக நிலையாமையை உணர்ந்து 'ஊழி' காலத்திற்குள் செய்யவேண்டியவைகளைத் துரிதமாகச் செய்க என்று கூறும் வகையில் நிலையாமையோடு 'ஊழி'யைத் தொடர்புப்படுத்திக் கூறி வருகின்றன.

இவ்வுலகம் அழியக்கூடியது. இவ்வுலகைப் படைத்த இறைவன் என்றும் அழியாதவன் என்பதைத் திருவெம்பாவையில்,

**"ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை**

**ஏழை பங்காள னையே பாடு ஏல்லோர் எம்பாவாய்"[13]**

என்றும், கம்பராமாயணத்தில் இராமன் பகைவர்களை எதிர்க்கும்போது நிற்கின்ற காட்சியைக் கூறவந்த கவிஞர் ஊழிக்காலத்தும் அழியாமல் நிலைக்க வல்லவன் இராமன் என இறை நிலைத்தது எனக் கூறும்வகையில்,

**"முன் ஆன பூதங்கள் யாவையும் முற்றிடினும்**

**உன்நாள் உலவாய் நீ என்போல் உளை என்றான்"[14]**

என்றப் பாடல்கள் அமைந்துள்ளன. தோன்றிய ஒன்றின் நிலை மாறும் என்றால், பஞ்சபூதத்தால் தோன்றிய உலகமும் ஒருநாள் தன்நிலை மாறும் என்று இதன் மூலம் அறியமுடிகின்றது.

**பிரபஞ்ச உலகம்**

ஞாயிற்று மண்டலமே நாம் வாழும் அண்டம். பிரபஞ்சம் எல்லாம் ஞாயிறு நீங்கிய அண்டம். ஞாயிற்றால் விளக்கம் பெற்று வருகின்றது. அண்டம் எப்பொருள்களால் உருவாக்கப்பட்டுள்ளது என்ற வினாவிற்குப் புறநானூற்றுப் பாடல் மிக அழகாக விளக்கம் தருகிறது.

**"மண்திணிந்த நிலனும்,**

**நிலன்ஏந்திய விசும்பும்**

**விசும்புதைவரு வளியும்**

**வளித்தலைஇய தீயும்**

**தீமுரணிய நீரும் என்றாங்கு**

**ஐம்பெரும் பூதத்து இயற்கை போல"**[15]

என்று இறுகி விளங்கும் மண்ணும், மண் உருண்டையின்மேல் கவிந்திருக்கும் வானமும், வானத்தைத்தடவி அலையும் காற்றும், காற்றினால் உயிர்பெற்று உயர எழும்பும் இயல்புள்ள தீயும், குளிர்ச்சி பொருந்திய நீரும் என இவ்வைந்தும் அலைந்தும், கலந்தும், மிடைந்தும் நின்ற இயற்கைப் பொருளே அண்டம்.

"Thousands and Thousands of earth can be packed in a single star" என்பது அறிவியல்"[16]

இந்த உலகம் பேரண்டம். ஆயிரக்கணக்கான பூமிகளை ஒரு விண்மீனில் அடக்கிவிடலாம் என்று பன்னிரு திருமுறை கூறுகிறது.

கம்பர் தம் காவியத்தில் உலகம் நிலையில்லாதது என்ற கருத்தினைப் பல இடங்களில் சுட்டியுள்ளார். இரணியன் வதைப் படலத்தில், பிரகலாதன், திருமாலைப் பார்த்துக் கூறுகிறான். பல ஆயிரக் கோடிக்கணக்கான அண்டங்களும் குளிர்ந்த கடலில் உண்டாகி அழியும் நீர்க்குமிழிகள் போல, உன்னிடம் தோன்றும் உலகமும் அழியும் என்பதை,

**"பல்லாயிர கோடி அண்டம் பனிக் கடலுள்**

**நில்லாத மொக்குகள் எனத் தோன்றுமால்"**[17]

என்கிறார். மேலும், திருமால் பிரகலாதனைப் பார்த்து, மண், விண், காற்று, நீர், தீ என்னும் ஐந்து பூதங்களும் அழியும் என்கிறார்.

**"முன்ஆன பூதங்கள் யாவையும் முற்றிடினும்"**[18]

என்றும், அனைத்தும் இயங்க அடிப்படையாய் இருக்கும் நிலையில்லா உலகத்தினைச் சுழற்றிக் கொண்டிருப்பவன் இறைவன் என்று கூறி, உலக நிலையாமையைக் குறிப்பாகக் திருக்குற்றாலக் குறவஞ்சி காட்டுகிறது.

**"சாட்டி நிற்கும் அண்டமெலாஞ் சாட்டையிலாப் பம்பரம் போல்**

**ஆட்டுவிக்கும் குற்றாலத் தண்ணலா்"[19]**

என்கிறது.

'பிரபஞ்சம் ஒரு காலத்தில் இருக்கிறது மற்றொரு காலத்தில் மறைந்து போகிறது ஆதலால் அது அஸத் அல்லது பொய்…….. பிரபஞ்சம் அக்ஞான சொரூபம்………… மரண சொரூபம்' என்ற உபநிஷத் மந்திரம் கூறும் கருத்து சிந்திக்கத் தக்கது.

## பேராசை பெரும் துன்பம்

ஆசை என்பது மனிதனை அழிக்கக்கூடியது. அதை உணராமல் சிலா் மேலும் மேலும் பொருளைத் தேடவேண்டும் என்று விரும்புகின்றனா். அரசா்கள் சிலா், எல்லா நாட்டு அரசா்களும் தனக்கு அடிமையாக இருக்கவேண்டும் என்று நினைத்துக்கொண்டு அந்நாடுகளோடு போா் செய்து வெற்றி பெறுவதையே நோக்கமாகக் கொண்டிருந்தனா். அதற்காக எப்போதும் போா்க்கொடியையே உயா்த்திக்கொண்டிருந்தனா். போரினால் அழிவு ஏற்படும் என்பதை உணரவில்லை. தனக்கு அடங்காத அரசா்கள்மேல் வஞ்சினம் கொண்டு போா்மேற்சென்று அந்நாட்டில் உள்ள பொருள்களை அழித்து வெற்றிகளைத் தேடுவதையே தொழிலாகக் கொண்டிருந்தனா். இந்நிலையினை உணா்ந்து, புலவா்கள் சிலா் அவ்வரசா்களுக்கு உலக நிலையாமையை சுட்டிக்காட்டுவதற்காக பல பாடல்களை எழுதி அவா்களை நல்வழிப்படுத்த நினைத்தனா்.

ஆரியப்படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன், வடக்கே இமயமலைவரை தன்னுடைய நாடாகவேண்டுமென்ற பேராசையில் பல நாடுகள் மீது போர் செய்து அழித்து வெற்றி பெற்றான். இந்நிலையினை உணர்ந்த மாங்குடி மருதனார் என்ற புலவர் அரசருக்கு அனைத்து நிலையாமைகளையும் மதுரைக்காஞ்சி என்னும் நூலில் உணர்த்துகிறார்.

மதுரையின் சிறப்பினை,

**“மிக்குப் புகழ் எய்திய பெரும்பெயர் மதுரை”[20]**

என்றும், அனைத்திற்கும் இருப்பிடமான உலகத்தின் நிலையாமையைக் குறிப்பாக உணர்த்துகிறார்.

**“ஓங்குதிரை வியன் பரப்பின்**

**ஒலி முந்நீர் வரம்பு அது”[21]**

என்ற அடிகளின் மூலம் கடலில் அலை நிலையில்லாமல் தோன்றித்தோன்றி அழிவதுபோல, உலகிலுள்ள அனைத்துப் பொருள்களும் அழியும் என்ற உண்மை குறிப்பாகவே உணர்த்தப்படுகிறது. முன்னோர்களின் சிறப்புகளையும்,

**“புகழ் நிறைந்த நல்மாந்தரோடு**

**நல்ஊழி அடிப்படரப்**

**பல்வெள்ளம் மிக்கூற**

**உலகம் ஆண்ட உணர்ந்தோர் மருக”[22]**

என்று சுட்டிக்காட்டி, இவ்வுலகத்தில் எப்பொருளும் நிலையற்றது. அதற்காக நீ போரிட்டு உயிர்களையும் பொருள்களையும் அழிப்பது நியாயமற்றது என்பதை அலையால் ஏற்பட்ட மணலின் எண்ணிக்கையைக் காட்டிலும் அகன்ற இவ்வுலகில்

புகழுடன் வாழ்ந்து இறந்தவர் பலகோடி என்ற கருத்தை கீழ்வரும் வரிகள் உணர்த்துகின்றன.

**“கரைபொருது இரங்கும் கனைஇரு முந்நீர்**

**திரையிடு மணலினும் பலரே, உரைசெல**

**மலர்தலை உலகம் ஆண்டு கழிந்தோரே!”[23]**

என்பதால் அறியலாம்.

சோழ அரசன் கோசெங்கணானுக்கும், சேர அரசன் கணைக்கால் இரும்பொறைக்கும் கழுமலம் என்ற இடத்தில் போர் நடைபெற்றது. போரில் தோல்வி கண்ட கணைக்கால் இரும்பொறையை சோழ அரசன் சிறையில் அடைத்து தண்ணீர்கூட தராமல் துன்புறுத்தினான். இந்நிலையை உணர்ந்து பொய்கையார் என்ற புலவர் போரினால் உண்டாகும் அழிவினை சோழனுக்குச் சுட்டிக்காட்டி இவ்வுலகம் நிலையற்றது என்பதை உணர்த்துவதற்காக களவழிநாற்பது என்ற நூலைப் பாடியுள்ளார்.

**“காவிரி நாடன் கழுமலங் கொண்டநாள்”[24]**

இக்கருத்தையே முதுமொழிக்காஞ்சி என்ற நூலில் நிலையாமை தத்துவத்தைக் கூடலூர் கிழார் என்ற புலவரும்,

**“ஆர்கழி உலகத்து மக்கட்கு எல்லாம்”[25]**

என்று பத்து கருத்துக்கள் கூறியதும் இவ்வடியினைப் பயன்படுத்துகிறார். கடல் சூழ்ந்த உலகத்தில் வாழும் மக்களுக்கெல்லாம் என்று நிலையாமை கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளார்.

## தோன்றி மறையும் உலகம்

மனித வாழ்விற்குத் தேவையான நீதிகளைப் புகட்ட சங்க காலம் தொடங்கி தற்காலம் வரையிலும் 'நிலையாமை' என்னும் கோட்பாட்டினைப் புலவர்கள் முன்வைக்கின்றனர். செல்வம், இளமை, யாக்கை, உலகம் இவை அனைத்தும் நிலைத்திருக்கும் என்று எண்ணி மானுட இனத்தின் பெரும்பாலோர் அடைகின்ற துன்பங்கள் எண்ணில் அடங்காதவை ஆகும். உலக அடிப்படைத் தத்துவமே தோற்றம் உள்ள பொருள்களுக்கு மறைவும், மறைந்த பொருள்களுக்கு தோற்றமுமாக இருக்கிறது என்று ஈசான சிவாச்சாரியார் கூற்று உலக நிலையாமையை அறிய ஏதுவாகின்றது.

உலக நிலையாமையை வாழ்வு நிலையாமையோடு இணைத்து அறநெறிகளைக் கூறும் போக்கில் அமைந்துள்ளப் புறநானூற்றுப் பாடல்,

**"................................... விழவில்**
**கோடியர் நீர்மைபோல முறைமுறை**
**ஆடுநர் கழியுமிவ் வுலகத்து"[26]**

என்ற பாடலில் விழாவின்கண் ஆடும் கூத்தரது வேறுபட்ட கோலம் போல முறை தோன்றி இயங்கி மறையும் தன்மையை உடையது உலகம் என்ற செய்தி இடம்பெற்றுள்ளது. இதன்வழி உலகம் நிலையில்லாதது என்ற செய்தி பெறப்படுகிறது.

உலகில் தோன்றும் பொருள்களின் தன்மையை மணிமேகலை வைசேடிகவாதி கூற்றின் மூலம் விளக்குகிறது. பொருள்களை ஆறு கூறுகளாகக் கூறி, அதன் குணங்களையும், அவற்றின் தன்மைகளையும் விளக்குகிறது. இவையனைத்தும் உறுதியாக அழியுமென்கிறது.

**"போதலும் நிற்றலும் பொதுக்குணம் ஆதலின்**

**சாதலும் நிகழ்தலும் அப்பொருட் டன்மை"[27]**

மேலும், தோன்றிய அனைத்தும் அழிந்துவிடும் என்பதனை,

**"தோன்றியது கெடுமோ கெடாதோ என்றால்**

**கேடுண்டு என்றல் துணிந்து சொலலாகும்"[28]**

என்கிறார்.

நேற்று உள்ளனவாக இருந்த ஒருவன் இன்று இல்லை என்னும் நிலையாமையாகிய பெருமையை உடையதுதான் இந்த உலகம் என்பதை,

**"நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை என்னும்**

**பெருமை உடைத்து இவ்வுலகு"[29]**

என்ற குறளாலும், திருவாசகத்தில் உலகத்தின் தன்மையை,

**"உலகம் வெறும் பொய்"[30]**

என்றும், நீத்தல் விண்ணப்பித்தல் பகுதியில்,

**"என்னை நிலையற்ற நிலவுலக வாழ்வில் விட்டுவிடாதே"[31]**

என்றும், உலக நிலையாமையைப் பற்றி மாணிக்கவாசகர் பாடியுள்ளார்.

சீவகன் துறவுமேற்கொண்டதைக் கண்டு நகரமக்கள் வருந்தினர் என்பதை, உலகின் நிலையாமை இத்தகையது என்பதைப்போல, இராசமாபுரம் அழகு குலைந்து தன்னிலைகெட்டது என்று கூறி, விளக்குகிறார் திருத்தக்கதேவர். இதனை,

**"நிலையிலா உலகின் தன்மை நீர்மைமிக் கூறிற் றன்றே"[32]**

என்கிறார்.

திருநாவுக்கரசர் நிலையில்லாத இவ்வுலகத்தின் இயல்புணர்ந்து வாழ்வைத் துறந்தேன் என்பதனை.

**“நில்லாத உலகியல்பு கண்டு நிலை யவாழ்க்கை**

**அல்லேன் என்றறத் துறந்து”[33]**

என்கிறார்.

கம்பராமாயணத்தில் அனுமனிடம் சீதை, நீ செய்த உதவிக்கு இவ்வுலகத்தில் ஈடு இல்லை என்று நினைத்து இந்த உலகத்தைத் தரலாம் என்று எண்ணினால் இவ்வுலகம் அழியக்கூடியது. ஆதலால், கைம்மாறாகச் செய்யக்கூடியது உன்னை வணங்கி நிற்பதே என்று கூறி,

**“................................................... அவை**

**நிலை இலாமை நினைந்தனென் நின்னை என்**

**தலையினால் தொழவும் தகும்”[34]**

என்று கூறுகிறாள். நான்முகன், இராமனுக்கு இறைவனின் தன்மையை உணர்த்த வந்தவர். இவ்வுலகம் அழியும் என்பதை உவமை காட்டி,

**“மின்னைக் காட்டுதல்போல் வந்துவிளியும் இவ்வுலகம்”[35]**

என விளக்குகிறார்.

வள்ளலார் நிலையாமையை நன்குணர்ந்து, தாம் வீடுபேறு பெற்றதோடு, மக்களுக்கும் அவ்வழி காட்டுகிறார். தணிகைப்பெருமானை அடைய விரும்பிய வள்ளலார் உலகம் பொய்யானது என்பதனை,

**“பொய்கொள் உலகோ டுடே னோ”[36]**

**“கூம்புலகம் பொய்”[37]**

**“பொய்யுலகில் பொய் சுமந்து”[38]**

**“இயற்கைநிலை யாததுதான்”[39]**

என்று பாடுகிறார். பாரதியார், உலகும் உலகிலுள்ள அனைத்துப்பொருட்களும் பொய் என்கிறார். இதனை,

**“இந்த ஞாலமும் பொய்தானோ?”[40]**

என்ற அடியால் உணர்த்துகிறார்.

உலகம் மாறும் தன்மையது. இதில் நிகழும் செயல்களும், நிலையில்லாதது என்பதனை விடுதலை வீரன் நாகியைப் பாட வந்த கவிஞர் கண்ணதாசன்,

**“மாறுமிவ் வுலகம்”[41]**

என்கிறார்.

## தவத்தின் மேன்மை

உலகம் நிலையற்றது என்பதை புறநானூற்றில் வால்மீகியார் கூறி, தவம் உலகத்திற்கு ஒப்பாகாது என்பதை,

**“பருதி சூழ்ந்தஇப் பயம்கெழு மாநிலம்**

**ஒருபகல் எழுவர் எய்தியற்றே**

**வையமும் எழுவர் தூக்கின், தவத்துக்கு**

**ஐயவி அனைத்தும் ஆற்றாது ஆகலின்”[42]**

என்று கூறுகின்றார். கதிரவன் உலவுகின்ற இப்பெரிய உலகை ஒருநாளில் பலர் ஆண்டனர். உலகையும், தவத்தையும் ஆராய்ந்தால் தவத்துக்கு உலகம் கடுகளவும் ஒப்பாகாது. அதனால், வீடுபேறு விரும்பியவர். இல்வாழ்க்கையில்

பற்று விடுவர். திருமகள் தன்னிடத்துப் பற்றுவிட்டவரை அவள்விடாமல் பற்றிக்கொள்வாள். திருமகளால் பற்றிக்கொள்ளப்படாதவர் இல்வாழ்வில் பற்று விடாதவராக இருப்பர்.

மேற்கூறிய பாடலில் சூரியனால் சூழப்பெற்ற இந்நிலவுலகத்தினை ஒரே நாளில் எழுவர் தலைவன் பொறுப்பினை ஏற்று ஆட்சிப்புரிந்துள்ளனர் என்ற செய்தியை ஆசிரியர் பதிவு செய்துள்ளார்.

"இளமையும், செல்வமும், யாக்கையும் நில்லாதென்பதை நன்குணர்ந்த பின்னரே இவ்வுலகப் பற்று ஒருவனைவிட்டு விலகும். இவ்வாறு உலகப்பற்றை ஒழித்து தூய நெறியாகிய துறவறத்தை மேற்கொண்டவர்களே பிறவியாகிய பெருங்கடலை நீந்துவார்கள்"[43] என்று ஆர்.பி.சேதுப்பிள்ளை கூறுகிறார்.

அந்நிலையை உணராமல் பல தீமைகளைச் செய்பவர் அடுத்துவரும் பிறவியிலும் அவ்ஊழ்வினைத் தொடரும் என்பதும், அரசனே ஆனாலும் தவறு செய்தால் அறம் அவனை அழித்துவிடும் என்பதும் சிலப்பதிகாரம் தெளிவாக காட்டியுள்ளது.

**"அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும்**

**ஊழ்வினை உறுத்துவந்து ஊட்டும்"[44]**

என்று கோவலனை பிரிந்த மாதவி இவ்வுலகம் நிலையற்றது என்பதை உணர்ந்து, துறவறம் மேற்கொண்டு அன்பு ஒன்றே சிறந்தது என்பதனை மக்களுக்கு உணர்த்திக் காட்டினார். உயிர்களிடத்து அன்பு கொள்ளவேண்டும் என்று உணர்த்தியுள்ளாள். எப்பொருளிடத்தும் பற்றுக்கொண்டால் அப்பொருள் நம்மை விட்டு நீங்கிவிடும். உலகப் பற்றுகள் அழிவினைத் தரக்கூடியது என்பதனை உணர்ந்துதான் மாதவி துறவறம் மேற்கொண்டது மட்டுமல்லாமல் தன் மகள்

மணிமேகலையைத் துறவறம் மேற்கொள்ளச் செய்தாள். துறவறம் மேற்கொண்ட மணிமேகலை உலகில் தோன்றும் எவ்வுயிரும் பசியால் வாடக்கூடாது என்பதனை,

**“பசிப்பிணி யென்னும் பாவியது தீர்த்தோர்**

**இசைச்சொல் அளவைக் கென்நா நிமிராது**

**.......................................................................**

**மன்னுயிர் மடியமழைவளம் காத்தலின்”[45]**

என்ற பாடல் மூலம் உலகில் தோன்றும் எவ்வுயிரும் பசியால் வாடக்கூடாது என்பதை உணர்த்திக்காட்டியுள்ளார். பசியால் வாடுகின்றவர்க்கு உணவுக் கொடுப்போரே அவர்களுக்கு உயிரையும் கொடுத்தவர்கள் ஆவார்கள். இக்கருத்தையே மணிமேகலையில்,

**“மண்டினிஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்**

**உண்டிக்கொடுத்தோர் உயிர்க்கொடுத்தோரே**

**.......................................................................**

**கயக்கறு நல்லறங் கட்டனை யென்றலும்”[46]**

என்ற பாடலால் அறியலாம். மேலும், சீத்தலைச்சாத்தனார் மக்களைப் போன்ற மடமையுடையவரைப் பார்க்கமுடியுமா? என்கிறார். உடலை நெருப்பிலிட அதைக் கண்டும் அறம் செய்வதை விரும்பாமல் மகிழ்ச்சியை விரும்பும் மக்களை என்னவென்பது என்ற கருத்தையே,

**“அழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்”[47]**

என்ற பாடலில் மக்களின் அறியாமை என்னும் மடமையை தெளிவுப்படுத்தியுள்ளார்.

பிறந்தவர்கள் இறப்பர் என்பதை உணராமல் பல தீயவினைகளைச் செய்து உலகின் நிலையாமையை உணராமல் இருக்கின்ற பித்தர்களைச் சீத்தலைச்சாத்தனார் பின்வருமாறு சாடியுள்ளார்.

**“பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்**
**உறங்களும் விழித்தலும் போன்ற துண்மையின்**
**நல்லறஞ் செய்வோர் நல்லுல கடைதலும்**
**அல்லறஞ் செய்வோர் அருகர கடைதலும்”[48]**

என்ற பாடல் மூலம் நல்லறம் செய்வோர் நல்பிறவியையும், தீவினைச் செய்வோர் ஊழ்வினையையும் பெறுவர் என்பதை உணராமல் தீவினைகளைச் செய்து கடைசியில் அல்லல்பட்டு மாய்கின்றனர்.

தொண்டரடிப் பொடியாழ்வார் மனிதப் பிறவியின் இயல்பை,

**“வேதநூல் பிராயம்நூறு மனிசர்தாம் புகுவரேலும்**
**பாதியும் உறங்கிப் போகும் நின்றதில் பதினை யாண்டு**
**பேதை பாலகனதாகும் பிணிபசி மூப்புத் துன்பம்**
**ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே”![49]**

என்ற பாடல் மூலம் ஒரு மனிதனுக்கு சராசரி வயது நூறு என்று கணக்கிட்டுள்ளார். அதில் ஐம்பது ஆண்டுகள் உறக்கத்தில் சென்றுவிடுகிறது. முதல் பதினைந்து ஆண்டுகள் குழந்தைப் பருவத்தில் கழிந்துவிடுகிறது. மற்றைய ஆண்டுகள் நோய், பசி, மூப்பு துன்பத்தில் அவதிப்பட வேண்டியுள்ளது. ஆதலால், பிறவியே வேண்டாம் என்று அரங்கநாதனிடம் முறையிடுகிறார்.

அரசர்களாக இருந்தாலும் கடைசியில் அழிந்து மண்ணோடு மண்ணாக அழிவது திண்ணம் என்பதை பின்வரும் பட்டினத்தார் பாடல்வழி உணருகிறோம்.

**"முடிசார்ந்த மன்னரும் மற்றுமுன் னோரு முடிவிலொரு**

**பிடிசாம்ப ராய்வெந்து மண்ணா வதுங்கண்டு பின்னுமிந்தப்**

**படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்லாற் பொன்னி னம்பலவ**

**அடிசார்ந்த நாம் உய்யவேண்டும் என்றே அறிவாரில்லையே"[50]**

என்ற பாடல் மூலம் உடம்பு இறந்தபின் சாம்பலாகும் என்று உணராத மக்களை எண்ணி வருந்தும் நிலையைக் காணமுடிகிறது. இக்கருத்தையே சுந்தரமூர்த்தி நாயனாரும்,

**"வாழ்வாவது மாயம்இது மண்ணாவது திண்ணம்**

**பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய் செய்தபறிதான்**

**..........................................................................**

**கீழ்மேலுற நின்றான்திருக் கேதாசுர மெனிரே"[51]**

என்ற பாடல்வழி நாம் மண்ணுக்கு செல்வது உறுதி. வாழ்வாவது மாயம், பிறவிக்கடலில் தோன்றி பசிக்காக இந்த உடல் அலைகின்றது. அதனால், உடலில் உயிர் இருக்கும்வரை ஒவ்வொரு மனிதனும் தன்னால் இயன்றவரை அறம் செய்யவேண்டும் என்ற கருத்து தெளிவாகிறது.

## நிலைத்தப் புகழுக்கு ஈதல் வேண்டும்

இந்த உலகத்தில் பிறந்தவா் இறத்தல் வேண்டும். உயிருடன் இறக்காமல் இருப்பவா் ஒருவரும் இல்லை. எனவே, ஒருவன் தன் வாழ்நாளில் இயன்றவரை பிறருக்கு உதவி செய்தல் வேண்டும் என்கிறாா் சிறுவெண்தேரையாா் என்னும் புலவா்.

**“ஞாயிற்று அன்ன ஆய்மணி மிடைந்த**

**…………………………………………………….**

**உடம்பொடும் சென்மார் உயர்ந்தோர் நாட்டே”[52]**

என்ற பாடலில் சூரியனைப்போல் ஒளிவீசும் மணிகளைக் கொண்ட குளிர்ந்த ஆரத்தினைக் கழுத்திலே கொண்ட வீரர்கள் போர் செய்து புகழ் பெறுவதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளனர். அவர்கள் அறத்தைக் கருத்தில் கொள்ளாமல் புகழ் ஒன்றையே கருத்தில் கொண்டு போர்ப்புரிகின்றனர். அவ்வாறு போர் செய்து வீழ்ந்தவர்களை மேல்உலகத்திற்கு அனுப்பும் பார்ப்பணர்கள் தெளிக்கும் எள்ளும் நீரும் ஆறுபோல் ஓடும் அளவிற்கு வீரர்கள் மேல்உலகம் செல்கிறார்கள் என்னும் இப்பாடலில் உலகின் நிலையாமை விளக்கப்பெற்றுள்ளது. இறப்பு என்பது பொதுவானது என்பதனை விளக்கும் வகையில் இந்தப் பாடல் பொதுமை அறத்தினை விளக்குகிறது. மேலும் பெருந்தலை சாத்தனார் பாடலாக,

**“மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்**

**தம்புகழ் நீறிஇத் தாம்மாய்ந் தனரே”[53]**

என்று நிலையில்லாத உலகத்தில் நிலைத்திருக்க விரும்புபவர் பிறருக்காக வாழ்ந்து தம் புகழை நிலைநிறுத்திக் தாம் இறந்துபோவர் என்ற கருத்தில் இப்பாடல் அமைந்துள்ளது.

### கால நிலையாமை

உலக சுழற்சியினை உணர்வதற்குக் காலம் ஓர் அளவுகோலாக விளங்குகிறது. அக்காலமும் மாறக்கூடியது. நிலையற்றது. கால மாறுதல்களுக்கேற்ப அனைத்து உயிரினங்களும் தோன்றி வளர்ந்து மறையும்.

புறநானூறு, உலகில் தேய்தலும், பெருகலும், மாய்தலும், பிறத்தலும் உளவென அறியாதோரையும் அறியக்காட்டித் திங்கள் என்ற தெய்வம் திரிகிறது என்று கால நிலையாமையைக் குறிக்கிறது.

**"தேய்தல் உண்மையும், பெருகல் உண்மையும்**

**மாய்தல் உண்மையும், பிறத்தல் உண்மையும்**

**அறியா தோரையும் அறியக் காட்டி**

**திங்கள் புத்தேள் திரிதரும் உலகத்து"[54]**

என்று உலகில் வாழும் மனிதனின் வாழ்நாளில் கால அளவு முடியும் நாளை அறிந்து, செங்கோன்மை பிறழாத கூற்றுவன் உயிர்களைத் தின்னவரும் நிலையைக் காட்டி கால நிலையாமையை மதுரைக்காஞ்சி கூறுகின்றது.

**"பேயும் அணங்கும் உருவுகொண்டு ஆய்கோல்**

**கூற்றக் கொல்தேர் கழுதொடு கொட்ப"[55]**

மணிமேகலையில் காலம் என்பது என்ன என்று வரையறுக்கப்பட்டுள்ளது.

**"காலம், கணிகம் எனுங்குறு நிகழ்ச்சியும்**

**ஏலும் கற்பத் தின்னெடு நிகழ்ச்சியும்"[56]**

என்ற கால அளவைகளை உண்டாக்கும் இக்கால நிலையாமையை, யாக்கை நிலையாமையைக் கூறவந்த இடங்களில் கூறுகிறார் சாத்தனார்.

வள்ளலார் காலநிலையாமையை விளக்குவதனை,

**"வாள்கழியச் செங்கதிரோன் வான்கழிய நம்முடைய**

**நாள்கழிதற் கந்தோ நடுங்கிலையே - கோள்கழியும்**

**நாழிகையோர் நாளாக நாடினையே நாளைஒரு**

**நாளிகையாய் எண்ணி நலிந்திலையே”[57]**

என்பதனால் அறியலாம்.

எல்லாவற்றிற்கும் ஒரு காலவரையறையுண்டு. அந்தக்காலமும் மாறக்கூடியதே ஆகும். இதை கண்ணதாசன்,

**“காலம் போகும் பாதையை இங்கே**

**யார் காணுவார்”[58]**

என்றும், மேலும் அவரே,

**“தோன்றி வரும்**

**அத்தனைக்கும்**

**ஊன்றுமிடம்**

**உண்டெனினும்**

**சான்று சொலும் காலமதன் முடிவை - இதில்**

**தப்பியவர் யாருமில்லை அழிவை”[59]**

என்ற பாடல்களின் மூலம் யாக்கை, வாழ்வு இவற்றுடன் இணைத்தே கால நிலையாமை சுட்டப்படுவதை உணரலாம்.

## நிலையாமை உணர்ந்தவர்கள்

நிலையாமை உடைய உலகின் தன்மையை அறிந்தவர்கள் துன்பத்தில் கிடந்து உழலாமல், இதனினும் சிறந்த இன்ப உலகாகிய வீடுபேற்றினைப் பெறும் விதமாக நல்ல செயல்களை செய்தல்வேண்டும் எனப் பல்குடுக்கை நன்கணியார் பாடல் வழி அறிவுறுத்தியுள்ளார்.

ஒரு வீட்டில் நெய்தல் பறையும், ஒரு வீட்டில் மண முரசும், தலைவனோடு கூடியவர் அணிகலன்களும், பிரிந்தவர் கண்ணீரும் ஆக இன்பம், துன்பம் என்று இருவேறாகப் படைத்த கடவுள் பண்பில்லாதவன். உலகம் கொடுமையானது. அதனால், நிலையாமையை உணர்ந்தவர் இனிமையை காண்பார்கள் என்பதை,

**“ஓர்இல் நெய்தல் கறங்க, ஓர்இல்**

**ஈர்ந்தண் முழுவின் பாணி ததும்ப,**

**புணர்ந்தோர் பூவணி அணிய, பிரிந்தோர்**

**பைதல் உண்கண் பனிவார்பு உறைப்ப**

**படைத்தோன் மன்றஅப் பண்பி லாளன்!**

**இன்னாது அம்ம, இவ் உலகம்**

**இனிய காண்க, இதன் இயல்பு உணர்ந்தோரே”[60]**

என்ற பாடல் மூலம் அறியலாம். இவ்வுலகத்தில் அனைத்துமே அழியக்கூடியது. அழிவு என்பதே நிலையானது என்பதை உணர்ந்தவன் தலைவன் என்னும் பொருள்பட குறுந்தொகையில்,

**“நில்லாமையை நிலையிற்று ஆகலின்**

**நல்-இசை வேட்ட நயனுடைய நெஞ்சின்**

**...........................................................**

**அங்கலுழ் மேனிப் பாஅய பசப்பே”[61]**

என்று அன்புடைய தலைவன் உலகின் நிலையாமையை உணர்ந்தவன். நல்ல புகழை விரும்புபவன். பழிச்சொல்லுக்கு அஞ்சுபவன். அன்புள்ளத்தோடு கடமையாற்றும் பண்புடையவன். அவன் ஈட்டிய பொருள் நல்ல காரியத்திற்கு பயன்படுவதுபோல் உன் அழகு நிறைந்த உடம்பில் பரந்த பசலை நிறமும்

நிலையாகத் தங்காமல், உடனே மறைந்துவிடும் வருந்தாதே என்று கூறும் கருத்தில் உலக நிலையாமை உணர்த்தப்படுகிறது.

பொருநராற்றுப்படையில், கரிகாலனின் கொடைச் சிறப்பைக் குறித்து பேசும்போது, உலகம் நிலையற்றது என்ற கருத்தினை ஆசிரியர் பதிவு செய்துள்ளார்.

**"நில்லா உலகத்து நிலைமை தூக்கி**

**செல்க என விடுக்குவன் அல்லன்"[62]**

இப்பாடலில் தம்மிடம் பரிசில் பெறவரும் பரிசிலர்க்குத் தேவையான பொருள்களைத் தந்து அவர்கள் பிரியும் தருவாயில் அவர்களைப் பிரிய மனமில்லாமல் வருந்துவான். ஆனால், பிரிதல் உலகத்தின் இயல்பு என்று உணர்ந்து உங்களைப் பிரிவான் என்ற செய்தி உணர்த்தப்படுகிறது.

இளந்திரையனது நாட்டிற்கு செல்லுமாறு ஆற்றுப்படுத்திய பாணன் அவனது வள்ளல் தன்மையினைப் பின்வருமாறு கூறுகிறார்.

**"நில்லா உலகத்து நிலைமை தூக்கி**

**.........................................................**

**.........................................................**

**ஆனா விரும்பின் தான்நின்று ஊட்டி"[63]**

இந்த உலகம் நிலையில்லாதது. நிலையில்லாத உலகில் நிலைத்து நிற்பது புகழ் ஒன்றுதான் என அறிந்தவன் இளந்திரையன். எனவே, பாணர்க்கும், கூத்தருக்கும், பொருநர்க்கும் கொடைத்தன்மை உடையவனாக விளங்கினான். இந்த உலகத்தில் நிலைத்து நிற்கும் பேறுபெற்றது புகழ் ஒன்றேயாகும் என்ற

செய்தி சுட்டப்பட்டுள்ளது. இதன்பொருள் புகழைத் தவிர அனைத்தும் நிலையற்றது என்பதாகும்.

இதே கருத்திலமைந்த புறநானூற்று பாடல் ஒன்று, பாட்டுடைத் தலைவன் கொள்வோர் தகுதி அறிந்து பொருள்களைக் கொடுக்கும் தன்மையுடையவன். அந்தணர்க்கு அருங்கலன்களும், அருள்பாடுநர்க்குக் குதிரையும் களிரும், பாடினிக்குப் பொன்னரி மாலையும், பாணர்க்குப் பொற்றாமரைப் பூவும் வழங்கியவன். இவன் மகளிரொடு இன்புற்றிருக்கும் காலத்தும் உலகின் நிலையாமையை உணர்ந்தவன். ஆதலால், கூற்றமே இவன் வரவு கண்டு அஞ்சுவான்.

எவ்வளவுதான் களிப்புடன் இருந்தபோதும் உலகம் நிலையற்றது என்ற உண்மையை உணர்ந்தவன் என்ற செய்தியைப் பாடலாசிரியர் பதிவு செய்துள்ளார்.

**“நில்லா உலகத்து ............ மைநீ**

**சொல்ல வேண்டா ..................... முந்தரிந்த**

**................................................................ னார்”**[64]

அதனால் உலக நிலையாமைப் பற்றி யாரும் எடுத்துக்கூறல் வேண்டியதில்லை. அவன் இளம்பருவத்திலே முழுதுணர்ந்து வேள்வியை செய்த பேரறிவுடையவன் என்று கூறுவதிலிருந்து நிலையாமை உணர்ந்தவர்கள் திறனும் பேசப்படுகிறது.

## வாழ்வு நிலையாமை

நிலையில்லாத உலகில், வாழ்வு நிலையாமை உணர்ந்து நிலமகளே அழுதாள் என்பதைப் புறநானூற்று பாடல் வழி அறியமுடிகிறது.

**“மயங்குஇருங் கருவி விசும்புமுகன் ஆக,**

**இயங்கிய இருசுடர் கண்என, பெயரிய**

**..................................................................**

**..................................................................**

**நிலமகள் அழுத காஞ்சியும்**

**உண்டுஎன உரைப்பரால் உணர்ந்திசினோரே”[65]**

என்ற பாடல், வானத்தை முகமாகவும், சூரியன், சந்திரனைக் கண்களாகவும் கொண்ட நிலமகள் தன் மீது நின்று போர்புரிந்து, இவ்வுலகை ஆள விரும்பும் வேந்தர்கள் பலரும் விண்ணுலகம் செல்கின்றனர். நான் மட்டும் அவர்கள் உடன்செல்லாது தனித்து நிற்கின்றேனே என்னும் பொருளில் உலகம் நிலையற்றது என்ற கருத்தும் அதனோடு நிலத்திற்காக போரிடும் மன்னர்களின் வாழ்க்கையும் நிலையில்லாதது என்ற கருத்தும் பெறப்படுகிறது.

வாழ்நாட்களைக் கால அளவுப்படிக் கணக்கிடுவர். மூவேந்தர்களுடைய வாழ்நாட்களின் இறுதியில் அவர்கள் உயிரைக் கூற்றுவன் கொண்டுபோனான் என்பதனை,

**“பொதுமை இன்றி ஆண்டிசி னோர்க்கும்**
**மாண்ட வன்றே ஆண்டுகள்”[66]**

என்றும், இந்த வாழ்வு நிலையாமையை,

**“மையல் ஆய் இந்த மண்ணிடை வாழ்வு எனும்**

**ஆழியுள் அகப்பட்டு”[67]**

என்ற அடிகள் மூலமும் வாழ்க்கையை இழித்துப் பேசுகிறது. மேலும், உலக வாழ்க்கை விளையாட்டுப் போன்றது என்கிறது.

**“நிற்பார் நிற்க நில்லா உலகில்**

**நில்லோம்”[68]**

என்கிறது திருவாசகம். வாழ்வு அழியும் என்பதனை பாரதியார்,

**“வாழ்வு தேய்ந்தபின் யாது மதிப்பரோ”[69]**

என்ற அடியாலும் அறியலாம்.

நிலையாமையைப் பற்றி நேரடியாகத் திருமுருகாற்றுப்படையில் மிகுதியாகப் பேசப்படவில்லை என்றாலும், நிலையாமை உணர்ச்சியின் காரணமாகத்தான் திருமுருகாற்றுப்படை இலக்கியமே தோன்றியிருக்கிறது. நிலையாத வாழ்வில் நிலைபேற்றைக் காணத்தான் நக்கீரர் புலவர்களை எல்லாம் முருகனிடம் ஆற்றுப்படுத்துகிறார். முருகனின் ஆற்றலையும் வெற்றிச் சிறப்பையும் உணர்த்தும் வகையில் நக்கீரர்,

**“மாமுதல் தடிந்த மறுஇல் கொற்றத்து”[70]**

என்று குறிப்பிடுகிறார்.

மனிதன் சேர்ந்து வாழும் இயல்பு கொண்டவன். அவ்வாறு, வாழும்போது அவன் தன்னை மட்டும் கருத்தில் கொண்டு தன்னலத்துடன் விளங்கினால் மகிழ்ச்சி எதுவும் கிடைக்காது. பிறர் நலத்தைப் பேணி வாழ்ந்தால் மட்டும் மகிழ்ச்சி கிடைக்கும் என்று கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்னும் மன்னர் பாடியுள்ளார்.

**“உண்டால் அம்மஇவ் உலகம் - இந்திரர்**

**அமிழ்தம் இயைவது ஆயினும் ‘இனிது’ எனத்**

**தமியர் உண்டலும் இலரே;”[71]**

என்று இந்த உலகம் அந்தரத்தில் நிலையாகச் சுற்றிக் கொண்டிருப்பதன் காரணம் எதுவென்றால், தன்னலம் கருதாமல் பிறர்நலம் கருதி வாழ்கின்ற நல்லவர்கள் இருப்பதால்தான் என்ற உண்மை இந்த பாடல் வாயிலாக விளக்கப்பட்டுள்ளது.

தேவர் உலகத்தில் இந்திரன் வைத்திருக்கும் அமிழ்தமே கிடைத்தாலும், அதனை நாம் மட்டும் உண்டு நலமாக வாழவேண்டும் என்று நல்லவர்கள் நினைக்கமாட்டார்கள். பிறருக்கும் மகிழ்ந்து கொடுத்து எல்லோரும் நலமாக வாழவேண்டும் என்றே விரும்புவார்கள். இத்தகைய நல்லறம் மிக்கவர்களாக மக்கள் வாழவேண்டும் என்று விரும்பியுள்ளான் இளம்பெருவழுதி.

காலத்திற்கு ஏற்ற வகையில் நிலையாமைக் கோட்பாடுகளும் மாறுகின்றன. இக்காலக் கவிதைகளான நிலையாமையைப் பற்றி.

**"நிலையில்லா உலகில்**

**நிலையான பொருளை தேடுவது**

**நிலையற்ற மாந்தர் மனதின்**

**நிலை!"**[72]

என்றும்,

**"நிலையற்ற உலகில் நாமும் பயணம்**

**புரியும் பயணிகளாகிறோம் நிறுத்தம்**

**அறியாதவர்களாக......................."**[73]

என்று உலக நிலையாமையை உணர்ந்து கவிதை வடிக்கும் கவிஞர்களையும் பார்க்கின்றோம்.

## புகழ் வரும் வழிகள்

சங்கக் காலத்தில் போரில் விழுப்புண் பெற்று வீரமரணம் அடைதலே புகழாகக் கருதப்பட்டது. அதுபோலவே, வறியவர்க்கு ஒன்று ஈதலும் அன்றுதொட்டு இன்றுவரை அறமாகவும், அதனால் வரும் பயன் புகழாகவும் கருதப்பட்டது. இப்புகழ் உலகம் அழியினும் அழியாத தன்மையது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர் கண்ணனார் பாராட்டுமுகமாக புகழ்வரும் வழிகளை அறியமுடிகிறது. அவன் முன்னோர் ஆட்சிச் சிறப்பாலும், வெற்றிச் சிறப்பாலும், நிலைபெற்ற புகழைப் பெற்றார்கள். நீயும் அவ்வாறே நிலையில்லாத இவ்வுடம்புள்ள போதே நிலைத்த புகழ் பெறுவாயாக எனப்புலவர் கூறும் முறையிலிருந்து நிலைத்தது புகழென அறியமுடிகிறது.

**"இலங்குமணி மிடைந்த பொலங்கலத் திகிரிக்**
**கடலக வரைப்பின் இப்பொழில்முழுது ஆண்டநின்**
**முன்திணை முதல்வர் போல, நின்று நீ**
**கெடாஅ நல்இசை நிலைஇத்**
**தவாஅ லியரோஇவ் உலகமோடு உடனே"**[74]

என்று அரசர்கள் தாங்கள் ஆற்றும் கடமையிலிருந்து தவறாமலும், வீரத்தோடும் ஒழுக்கத்துடன் ஒழுகி வாழ்பவரே உயர்ந்தவர் ஆதலால், ஒழுக்கத்திலிருந்து மாறாமல் வாழ்பவர்களின் புகழ் உலகம் அழிந்தாலும், அழியாமல் நிலைத்து நிற்கும் என்பதனை,

**"இவண்இசை உடையோர்க்கு அல்லது அவனது**
**உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை"**[75]

“புகழ்எனின், உயிரும் கொடுக்குவா். பழி எனின்
உலகுடன் பெறினும் கொள்ளலா், அயா்விலா்”[76]

“பரந்துபடு நல்இசை எய்தி, மற்று நீ
உயா்ந்தோா் உலகம் எய்தி; பின்னும்
ஒழித்த தாயம் அவா்க்குஉரித் தன்றே”[77]

“புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வா என”[78]

“வேந்துடை அவையத்து ஓய்குபுகழ் தோற்றினன்
..................................................................
..................................................................
இடுக ஒன்றோ! சுடுக ஒன்றோ!
படுவழிப்படுக, இப்புகழ் வெய்யோன் தலையே”[79]

“ஆனாது புகழும் அன்னை”[80]

“சேண் விளங்கு நல்இசை நிறீஇ”[81]

“வசையும் நிற்கும்; இசையும் நிற்கும்
..................................................................
ஈண்டு நீடு விளங்கும், நீ எய்திய புகழே”[82]

“உடம்பொடும் சென்மாா் உயா்ந்தோா் நாட்டே”[83]

“இன்னா வைகல் வாரா முன்னே
செய்நீ முன்னிய வினையே”[84]

“மண்நாணப் புகழ் வேட்டு”[85]

என்ற வரிகளால் புகழ் ஒன்றே நிலையானது என்று புறநானூறு கூறுகின்றது. போரினாலும் கொடையினாலும் வரும் புகழைப் பற்றி மதுரைக்காஞ்சியும்,

**"ஈதல் உள்ளமொடு இசைவேட் குவையே;**

**..................................................................**

**..................................................................**

**கெடாது நிலைஇயர்நின் சேண்விளங்கு நல்லிசை"[86]**

என்று கூறுகின்றது. உலகத்தில் நிலைத்திருப்பது புகழைத் தவிர வேறு ஒன்றுமில்லை என்பதை,

**"ஒன்றா உலகத்து உயர்ந்த புகழ் அல்லால்**

**பொன்றாது நிற்பது ஒன்றுஇல்"[87]**

என்கிறது.

இவ்வுலகில் சேர்த்துவைக்கும் வைப்புப்பொருள் புகழாகும். புகழ் ஒன்றே நிலைத்தது என்கிறது. முதுமொழிக்காஞ்சி, இதனை,

**"இசையின் பெரியதுஓர் எச்சம் இல்லை"[88]**

என்கிறது.

இவ்வாறு உலக நிலையாமையை இலக்கியங்கள் உணர்த்தி, புகழ்பெற வேண்டும் என்று கூறுகின்றன.

# தொகுப்புரை

- ❖ உலகம் என்பதும், அதன் வகைகளும், மண்ணுலகின் சிறப்பு பெயர்களும் விளக்கிக் கூறப்பட்டுள்ளன.
- ❖ உயிர்கள்அனைத்தையும் தாங்கும் உலகம் நிலையில்லாத் தன்மையுடையது என்று விளக்கப்பட்டுள்ளன.
- ❖ உலகம் தோன்றிய விதமும் அதன் ஊழிக்காலமும் விளக்கப்பட்டுள்ளன.
- ❖ பிரபஞ்ச உலகம் எப்பொருளால் உருவாக்கப்பட்டு இயங்கிக்கொண்டிருக்கிறது என்பதை சங்க இலக்கியங்கள் வழி ஆராயப்பட்டுள்ளன.
- ❖ அழியும் உலகில், மனிதனின் பேராசையால் விளைந்த துன்பங்கள் விளக்கப்பட்டுள்ளன.
- ❖ தோன்றி, மறையும் உலகத்தில் நிலையாமை எனும் கோட்பாட்டினை உணராமல், அனைத்தும் நிலைத்திருக்கும் என்றெண்ணி மனிதன் அடைகின்ற துன்பங்கள் விளக்கப்பட்டுள்ளன.
- ❖ தவத்திற்கும், அறத்திற்கும் நிலையில்லாத உலகம் ஒருபோதும் ஒப்பாகாது என்ற கருத்தில் தவத்தின் மேன்மை விளக்கப்பட்டுள்ளன.
- ❖ காலநிலையாமையை உணர்த்தி, நிலைத்தப் புகழுக்கு ஈதல் குணம் வேண்டும் என்று விளக்கப்பட்டுள்ளன.
- ❖ வாழ்வின் உலக நிலையாமையை உணர்த்தவர்கள் அடையும் வழிகளும் விளக்கிக் கூறப்பட்டுள்ளன.
- ❖ புகழ்வரும் வழிகள் சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளன.

# இயல் - 5

## அடிக்குறிப்புகள்

1. பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரனார் பாடல்கள், ப.97.
2. Tamil Lexicon, Vol.I, University of Madras, 1982, P.No.456.
3. சீத்தலைச்சாத்தனார், மணிமேகலை, 24 ஆபுத்திரன் நாடு அடைந்த காதை, பா.எ.115,116.
4. பி.ஏ. நடராஜன், பரஞ்சோதியார், திருவிளையாடற்புராணம், ப.117.
5. பிங்கல முனிவர், பிங்கல நிகண்டு, ப.14.
6. தொல்காப்பியர், தொல்காப்பியம், பொருள்-புறத்திணையியல், (இள.உ.), நூ.எ.76.
7. மேலது, ப.எ.127.
8. ஐயனாரிதனார், புறப்பொருள் வெண்பாமாலை, பொதுவியற்படலம், நூ.எ.31.
9. மேலது, நூ.எ.34.
10. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), பரிபாடல், பா.எ.2:1-4.
11. மேலது, பா.எ.2:5-10.
12. மேலது, பா.எ.2:11-19.
13. மாணிக்கவாசகர், திருவெம்பாவை, பா.எ.8:7-8.
14. கம்பர், கம்பராமாயணம், யுத்தகாண்டம், இரணியன் வதைப்படலம், பா.எ.299:3-4.
15. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), புறநானூறு, தொகுதி-1, பா.எ.1.1-6.
16. முனைவர் ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.), பன்னிருதிருமுறை, ப.619.
17. கம்பர், மே.கா.நூ., பா.எ.287:1-2.
18. மேலது, பா.எ.299:3.
19. திரிகூடராசப்பக்கவிராயர், திருக்குற்றாலக்குறவஞ்சி, பா.எ.117:1-2.

20. பொ.வே. சோமசுந்தரனார், மதுரைக்காஞ்சி, பா.வ.699.

21. மேலது, பா.எ.1-2.

22. மேலது, பா.எ.20-23.

23. மேலது, பா.எ.235-237.

24. பொய்கையார், களவழி நாற்பது, பா.எ.36:2.

25. கூடலூர்கிழார், முதுமொழிக்காஞ்சி, பா.எ.1:1.

26. திரு.ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மு.கா.நூ., தொகுதி-1, பா.எ.29:22-24.

27. சீத்தலைச்சாத்தனார், மே.கா.நூ., 27 சமயக்கணக்கர் தந்திரங்கேட்ட காதை, பா.எ.259-260.

28. மேலது, மே.கா.நூ., பவத்திறமறுகெனப் பாவை நோற்ற காதை, பா.எ.238-239.

29. திருவள்ளுவர், திருக்குறள், கு.எ.336.

30. மாணிக்கவாசகர், திருவாசகம், போற்றித்திரு அகவல், பா.எ.4:54-55.

31. மேலது, நீத்தல் விண்ணப்பம், பா.எ.6:31.

32. திருத்தக்கத்தேவர், சீவகசிந்தாமணி, 13 முத்தி இலம்பம், பா.எ.2976:4.

33. பி.ரா.நடராசன் (உ.ஆ.), பெரியபுராணம், திருநாவுக்கரசர் புராணம், பா.எ.37:1-2.

34. கம்பர், மே.கா.நூ., யுத்தகாண்டம் - IV, மீட்சிப்படலம். பா.எ.450:2:4.

35. மேலது, IV, பா.எ.530:1.

36. வள்ளலார், திருவருட்பா, பா.எ.103:4.

37. மேலது, பா.எ.759:1.

38. மேலது, பா.எ.1324:6.

39. மேலது, பா.எ.1314:4.

40. பாரதியார் கவிதைகள், வேதாந்த பாடல்கள், பா.எ.29:2-4.

41. கண்ணதாசன் கவிதைகள், 1 & 11, ப.83.
42. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), புறநானூறு, தொகுதி-2, பா.எ.358, 1-4.
43. ஆர்.பி. சேதுப்பிள்ளை, சிலப்பதிகாரம் நூல்நயம், ப.73.
44. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், பதிகம், 55-57.
45. சீத்தலைச்சாத்தனார், மே.கா.நூ., 11 பாத்திரம் பெற்ற காதை, பா.எ.80:83.
46. மேலது, பா.எ.95-96.
47. சீத்தலைச்சாத்தனார், மே.கா.நூ., 6 சக்கரவாளக்கோட்ட முரைத்த காதை, பா.எ.101.
48. மேலது-16, ஆதிரை பிச்சையிட்ட காதை, பா.எ.86-89.
49. நாலாயிர திவ்வியபிரபந்தம், பா.எ.874.
50. பட்டினத்தார் பாடல்கள், பா.எ.50.
51. தேவாரம், 1424.
52. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ, தொகுதி-2, பா.எ.362:1-22.
53. மேலது, பா.எ.165:1-2.
54. மேலது, பா.எ.27:11-13.
55. பொ.வே. சோமசுந்தரனார், மதுரைக்காஞ்சி, பா.வ.632-633.
56. சீத்தலைச்சாத்தனார், மே.கா.நூ., 27 சமயகணக்கா் தந்திரங்கேட்ட காதை, பா.எ.191-192.
57. வள்ளலார், திருவருட்பா, பா.எ.746-747.
58. கண்ணதாசன் திரையிசைப் பாடல்கள் - II, ப.306.
59. கண்ணதாசன் கவிதைகள்-IV, பக்.31-32.
60. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ, தொகுதி-1, பா.எ.194:1-7.

61. திரு.பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.), குறுந்தொகை, பா.எ.143:3-4.

62. திரு.பொ.வே.சோமசுந்தரனார், தொகுதி-1, பொருநராற்றுப்படை, பா.எ.176-177.

63. மேலது, பெரும்பாணாற்றுப்படை, பா.அ.466-479.

64. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மே.கா.நூ., தொகுதி-2, பா.எ.361:20-22.

65. மேலது, பா.எ.365:1-12.

66. மேலது, பா.எ.357:3-4.

67. மாணிக்கவாசகர், மே.கா.நூ., அற்புதப்பத்து, பா.எ.1:1-2.

68. மேலது, யாத்திரைப்பத்து, பா.எ.7:1-2.

69. பாரதியார் கவிதைகள், பல்சுவை ஸ்வசரிதை, பா.எ.39:8.

70. திரு.பொ.வே. சோமசுந்தரனார், திருமுருகாற்றுப்படை, பா.60.

71. திரு.ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மு.கா.நூ., தொகுதி-1, பா.எ.182:1-3.

72. சபரி கணேஷ். இணையம்.

73. பிரபு, இணையம்.

74. திரு.ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), பதிற்றுப்பத்து, பா.எ.14:18-22.

75. மேலது, பா.எ.50:14-15.

76. மேலது, பா.எ.182:5-6.

77. மேலது, பா.எ.213:9-11.

78. மேலது, பா.எ.222:3.

79. மேலது, பா.எ239:20-21..

80. மேலது, பா.எ.254:10.

81. மேலது, பா.எ.282:11.

82. மேலது, பா.எ.359:10-14.

83. மேலது, பா.எ.362:22.

84. மேலது, பா.எ.363:16-17.

85. மேலது, பா.எ.384:16.

86. திரு.பொ.வே. சோமசுந்தரனார், மதுரைக்காஞ்சி, பா.வ.205,208,209.

87. திருவள்ளுவர், திருக்குறள், கு.எ.233.

88. கூடலூர்கிழார், மே.கா.நூ., இல்லப்பத்து, பா.8.

# முடிவுரை

பழந்தமிழர்கள் தங்கள் பேச்சிலும் எழுத்திலும் நிலையாமைக் கோட்பாட்டை ஆங்காங்கே வெளிப்படுத்தி வந்தார்கள். நாம் வாழும் இந்த உலகினைப் பற்றி எண்ணுகையில் உலக நிலையாமையையும் அதில் வாழும் உயிரினங்களைப் பற்றி சிந்திக்கின்ற காலத்தே உயர்ந்தனவாகக் கருதப்படும் மானிடப் பிறவியான யாக்கையை 'நிலையாமை' எனக் குறிப்பிட்டனர். யாக்கையின் கால அளவினை வரையறுக்க இயலாத நிலையினை அறிந்தனர். அவ்வுடல் குறிப்பிட்ட கால அளவு வரை இளமையுடன் இருந்து, பின்பு முதுமை அடைவதை அறிந்து இளமை நிலையாமை என்று யாக்கையின் ஒரு காலக்கட்டத்தில் உள்ள நிலையைப் பற்றி எழுதினார்கள். அந்த இளமையில்தான் இன்பம் காண இயலும். அதற்கு அழகு துணைபுரியவேண்டும் என கருத்தில் கொண்டு இன்பம், அழகு என வகைப்படுத்திய சங்ககால மக்கள், இவற்றைத் துய்க்கச் செல்வம் தேவையென உணர்ந்தனர்.

நிலையாமை பற்றிய உணர்வு சங்க காலத்தில் அரும்பாகி, காப்பிய காலம், சங்கம் மருவிய காலம் ஆகிய காலங்களில் நிலைபெற்று, பக்தி இலக்கிய காலத்தில் வலிமை பெற்று வேரூன்றி இருந்தாலும், சிற்றிலக்கியங்களில் நிலையாமை பற்றிய எண்ணம் வலுப்பெறவில்லை. ஆனால் நிலையாமை பற்றிய எண்ணம் இக்காலத்தில் பெரும்பாலோர் ஊழ், பிறவி, மறுமை, வினை, இறை இவைகளைப் பற்றிய எண்ணங்களைத் தவறாக கேலிக்குரிய ஒன்றாக எண்ணுகின்றனர். அதனால், புலனடக்கமின்றி நிலையாமை உணர்வு குறைந்து எந்தவித நியாயமான மன அச்சமின்றி வாழ்வதால் சமுதாயச் சீர்கேடுகள் நிகழ்கின்றன. மனிதனைத் தொல்லைப்படுத்தும் நோய்கள் மலிகின்றன. மனிதனை

அச்சப்படுத்தும் இந்த நோய்களைக் கண்டு நிலையாமை உணராதவன் மிகவும் அஞ்சுகின்ற நிலை ஏற்படுகின்றது.

இக்காலம் இயந்திரயுகக் காலம் எனலாம். இன்று மக்கள் மனம் மனச்சோர்வு, மனவு அதிர்வு, மன உளைச்சல், மனமுறிவு, மன இறுக்கம் இவற்றை அடைகின்றனர். இவற்றின் காரணமாக மக்கள் ஜனத்தொகையில் சிறுபான்மையினர் தொல்லைகளுக்குள்ளாகின்றனர். இதனால் மனம் மிகவும் பாதிக்கப்பட்டுத் துன்புறுகின்றனர். குழந்தைப் பருவத்திலேயே மனதை ஒழுங்குபடுத்தினால் தீயவன் நல்லவனாவான். வீட்டிலும் பெற்றோர், குழந்தைகளுக்கிடையில் விட்டுக்கொடுக்கும் மனப்பாங்கு ஏற்பட வாய்ப்புண்டு. தியாகம், பொதுநலம், நாட்டுப்பற்று போன்ற நற்பண்புகள் உருவாகும். இன்றைய சூழ்நிலையில் செல்வத்தின் செல்வாக்கு அதிகமாக உள்ளதால் இலக்கியங்களும் செல்வத்தை நேர்வழியில் ஈட்டுமாறு கூறுகின்றனர். இவ்வாறு இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, உலகம் நிலையாமை என்ற நிலையாமையை நான்காகக் கூறியுள்ள தன்மையைக்கூறி, இளமை உள்ளபோதே இன்பம் நுகர்ந்து, யாக்கை உள்ளபோதே செல்வத்தைக் கொண்டு உலகில் நல்ல அறங்களை இயற்றி நிலையான புகழைபெற நிலையாமையை சங்க இலக்கியங்கள் வலியுறுத்தியுள்ளன.

சங்க காலத்தில் மனிதன் மனதில் இன்ப உணர்வு மேலோங்கி வளர்ந்திருந்தது. வாழ்க்கையில் இன்பங்களை அனுபவித்து அதன் சுகத்திலே மூழ்கி அவன் இன்பம் துய்த்தான். அப்பொழுது, அவன் மனதில் நிலையாமை என்பது ஏதோ ஒரு மூலையில் இருந்ததே தவிர அவன் அதை வாழ்க்கையின் பகுதி என்று ஏற்காமல் இருந்தான். எனவேதான் சங்க படைப்புகளில் முழுமையாக

இல்லாமல் அங்கொன்றும் இங்கொன்றுமாக நிலையாமைக் கருத்துக்கள் காணப்படுகின்றன.

வாழ்க்கையில் மனிதனின் உணர்வுகள் முன்னேற முன்னேற அவனுடைய செயல்களில் பலமாற்றங்கள் ஏற்படத் தொடங்கின. அவன் செயல்களில் வாழ்க்கை நடைமுறைகளில் ஒழுக்கங்கள் சீர்குலையத் தொடங்கின. இளமை, யாக்கை, செல்வம், உலகம் போன்றவற்றில் அவனுக்குப் பற்றுதல் வலுவடைந்தது. அதனைத் தன் வயப்படுத்த எண்ணிப் பல தவறுகளைச் செய்யத் தொடங்கினர். அவனின் இவ்வுணர்வுகள் தவறு என்பதை அறிவில் சிறந்தோர் உணர்த்த விழைந்து தம்முடைய படைப்புகளில் அறிவுரைகளை வழங்கும் விதமாக மேற்கூறிய நான்கு நிலையாமைகளையும் கூறத் தொடங்கினர்.

இளமை நிலையாமையை உணர்வதால் ஆணையும் பெண்ணையும் அழகுப்பொருளாக எண்ணும் நோக்கம் மாறி ஆணும் பெண்ணும் சமமென எண்ணும் நிலை உருவாகும்.

யாக்கை நிலையாமையை உணர்வதால் பிறப்பின் நிலை உணர்ந்து, முதுமை வருவதற்கு முன்பே கடமைகளை செய்துமுடிக்கும் நிலைமையும் இழப்பிற்கும், இறப்பிற்கும் வருந்தாதநிலையும், பந்தம், பாசம் துறந்து பேரானந்த நிலையும் கிட்டும்.

செல்வம் நிலையாமையை உணர்வதால் ஈகை, கொடை, தானம், தருமம் இவை நாட்டில் மலிந்து இல்லை என்பதே இல்லையென்றாகிவிடும் நிலை செல்வநிலையாமையை உணர்வதால் ஏற்படும்.

உலக நிலையாமையை உணர்வதால் நிலையாமையில் நிலைத்தது புகழ், வீடுபேறு என்பதை உணர்ந்து ஆத்மா அமைதிபெறும் நிலை கிடைக்கும்.

மனிதர்கள் கூடி வாழ்கின்ற உலகம் நிலையாமையின் பாற்பட்டது. அவ்வாறே உலகில் இருக்கின்ற இயற்கைப் பொருள்கள் உயிர்கள் மனிதனால் படைக்கப்பட்ட பொருள்கள் அனைத்தும் காலத்தால் அழியும் இயல்புடையன. அதனால் பூவுலகில் வாழ்கின்ற மக்கள் நிலையாமை என்னும் சிந்தனையை மனத்தில் கொண்டு நல்லறங்களை கடைபிடிக்க வேண்டும்.

இலக்கியங்கள் அனைத்தும் இவ்வுலகம், இவ்வுலகில் தோன்றும் பொருள்கள் நிலையானவையல்ல என்று கூறுகின்றனர். எனவே, நிலையில்லாதவைகளைக் கொண்டு நிலையானவைகளைச் செய்வாயாக! செல்வத்தைக் கொண்டு வறியவர்க்கு ஈவாயாக! அழியும் உடல்கொண்டு அழியா அறம் செய்க! என்று கூறிப் புகழை நிலைத்த ஒன்றாகக் காட்டுகின்றன.

# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


**சோமசுந்தரனார், பொ.வே. (உ.ஆ.)** - ஐங்குறுநூறு,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 600 018.
மறுபதிப்பு - 2007.

**..............................,** - குறுந்தொகை,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 600 018.
மறுபதிப்பு - 2007.

**..............................,** - பரிபாடல்,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 600 018.
மறுபதிப்பு - 2007.

**துரைசாமிப்பிள்ளை, ஒளவை.சு, (உ.ஆ.)** - பதிற்றுப்பத்து,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 600 018.
மறுபதிப்பு - 2007.

**..............................,** - புறநானூறு (தொகுதி -1 & 11)
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 600 018.
மறுபதிப்பு - 2007.

**நாராயணசாமி ஐயர்.சு, (உ.ஆ.)** - நற்றிணை நானூறு,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 600 018.
மறுபதிப்பு - 2007.

**நச்சினார்க்கினியர் (உ.ஆ.)** - <u>கலித்தொகை,</u>
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 600 018.
மறுபதிப்பு - 2007.

**வேங்கடசாமி நாட்டார், ந.மு.**
**வேங்கடாசலம் பிள்ளை, ரா.** - <u>அகநானூறு (தொகுதி **1 & 11 & 111**),</u>
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 600 018.
மறுபதிப்பு - 2007.

**சோமசுந்தரனார், பொ.வே.** - <u>பத்துப்பாட்டு (தொகுதி -1)</u>
<u>திருமுருகாற்றுப்படை,</u>
<u>பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை,</u>
<u>பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு,</u>
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 600 001.
பதிப்பாண்டு - 1962.

**.................................,** - <u>பத்துப்பாட்டு (தொகுதி - 2),</u>
<u>மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை,</u>
<u>குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை,</u>
<u>மலைபடுகடாம்,</u>
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 600 001.
பதிப்பாண்டு - 1962.

## துணைமை ஆதாரங்கள்

**அப்துல் ரகுமான்** - <u>குணங்குடியார் பாடற்கோவை,</u>
நேஷனல் பப்ளிஷர்ஸ்,
சென்னை - 600 014.
முதல் பதிப்பு - 2008.

**அதிவீரராம பாண்டியன்** - <u>நறுந்தொகை (வெற்றி வேற்கை),</u>
கவிதா பப்ளிகேஷன்,
சென்னை.
இரண்டாம் பதிப்பு - 2000.

**அறிவுநம்பி, அ.** - <u>கம்பரின் அறவியல்,</u>
அமுதன் நூலகத்தின் 11-வது வெளியீடு,
புதுச்சேரி,
பதிப்பாண்டு - 1997.

**அருணாசலதேசிகர் (வி.உ.)** - <u>நந்திக்கலம்பகம்,</u>
முல்லை நிலையம்,
சென்னை - 600 017.
மறுபதிப்பு - 1999.

**ஆசிரியர் குழு** - <u>நர்மதாவின் தமிழ் அகராதி,</u>
நர்மதா பதிப்பகம்,
சென்னை - 600 017.
முதற்பதிப்பு - 2007.

**ஆசிரியர் குழு** - <u>செந்தமிழ்ச் செல்வி,</u>
கழக வெளியீடு,
சென்னை - 600 001.

**ஆசிரியர் பெயர் இல்லை** - <u>விவேகசிந்தாமணி,</u>
ஸ்ரீ தனலட்சுமி புத்தக நிலையம்,
சென்னை - 600 001.

**இளவரசு, சோம. (உ.ஆ.)** - <u>நன்னூல் (சொல், எழுத்து),</u>
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 600 001.
முதற்பதிப்பு - 1992.

**இராமசாமிபிள்ளை, செ.ரெ., (உ.ஆ.)** - <u>திருக்குற்றாலக் குறவஞ்சி,</u>
கழக வெளியீடு,
சென்னை - 600 001.
மறுபதிப்பு - 2000.

**இராமலிங்கம் பிள்ளை, வே.** - <u>திருக்குறள் கனிகள்,</u>
தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம்,
சென்னை - 600 008.
முதற்பதிப்பு - 1968.

**இராஜேந்திரன், சி.** - <u>திருக்குறள் உவமைநயம்,</u>
கவிதா பப்ளிகேஷன்,
சென்னை - 600 017.
முதற்பதிப்பு - 2007.

**இராசேந்திரன், து. (இ.ஆ.ப.),** - <u>செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி எட்டாம் மடலம் - முதல் பாகம்,</u>
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்,
அகரமுதலித்திட்ட இயக்கக வெளியீடு,
முதற்பதிப்பு - 2007.

**இராசமாணிக்கம்பிள்ளை, ம, (உ.ஆ.)** - <u>பதினெண்கீழ்க்கணக்கு,</u>
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
சென்னை - 600 018.
மறுபதிப்பு - 2007.

**கன்னியப்பன், சிவ. (பொ.உ.)** - <u>தண்டலையார் சதகம்,</u>
முல்லை நிலையம்,
சென்னை - 600 017.
மறுபதிப்பு - 2010.

**கதிர் முருகு (உ.ஆ.)** - <u>அறநெறிச்சாரம்,</u>
சாரதா பதிப்பகம்,
சென்னை - 600 014.
முதற்பதிப்பு - 2008.

**................................,** - <u>முக்கூடற்பள்ளு,</u>
சாரதா பதிப்பகம்,
சென்னை - 600 014.
முதற்பதிப்பு - 2008.

**கண்ணதாசன்** - <u>கண்ணதாசன் கவிதைகள்,</u>
காவியக் கழகம்,
சென்னை - 600 002.
முதற்பதிப்பு - 1959.

**கஸ்தூரி, இரா.** - <u>தமிழ் இலக்கியங்களில் நிலையாமை (தொகுதி - 1, 2)</u>
ஞாயிறு வெளியீடு,
செப்டம்பர் - 1999.

**காந்தி, க** - <u>தமிழர் எண்ணங்கள்,</u>
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
முதற்பதிப்பு - 1983.

**கிருஷ்ணப்பிள்ளை, எய்ச்.ஏ.** - <u>இரட்சணிய யாத்திரிகம்,</u>
கிருஷ்தவ இலக்கியச் சங்கம்,
சென்னை - 600 003.
மூன்றாம் பதிப்பு - 1958.

**குருபாத தேசிகர்** - <u>குமரேச சதகம்,</u>
முல்லை நிலையம்,
சென்னை - 600 017.
முதற்பதிப்பு - 2006.

**கோபாலகிருஷ்ணமாச்சாரியார் (உ.ஆ.)** - <u>கம்பராமாயணம்,</u>
உமா பதிப்பகம்,
சென்னை - 600 001.
இரண்டாம் பதிப்பு - 2011.

**கோவிந்த பிள்ளை, வி. (உ.ஆ.)** - <u>அரிச்சந்திர புராணம்,</u>
எம். ஏழுமலை பதிப்பகம்,
சென்னை - 600 043.
பதிப்பாண்டு - 2001.

**சிவன்பிள்ளை, தி. (உ.ஆ.)** - <u>பிங்கல நிகண்டு,</u>
வசந்தா பதிப்பகம்,
சென்னை - 600 088.
இரண்டாம் பதிப்பு - 2005.

**சிவபாத சுந்தரனார், நா.** - <u>புறப்பொருள் வெண்பாமாலை ஆராய்ச்சி,</u>
வட்டுக்கோட்டைத் தொகுதித்
தமிழ்ச்சங்கம்,
முதற்பதிப்பு - 1993.

**சீனிவாசன், கு.** - <u>சங்க இலக்கியங்களில் தாவரங்கள்,</u>
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு - 1987.

**சுந்தரராசன், சே. (உ.ஆ.)** - <u>தேம்பாவணி - மூன்றாம் காண்டம்,</u>
பாரி நிலையம்,
சென்னை - 600 008.
முதற்பதிப்பு - 2010.

**சுப்பிரமணியன், ச.வே. (ப.ஆ.)** - <u>தமிழ் நிகண்டுகள் (தொகுதி-2),</u>
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம் - 600 001.
முதற்பதிப்பு - 2008.

**சுப்பிரமணியன், ச.வே. (ப.ஆ.)** - <u>மெய்யப்பன் தமிழ் அகராதி,</u>
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 600 008.
மூன்றாம் பதிப்பு - 2011.

**சுப்பிரமணியன், ச.வே. (ப.ஆ.)** - **<u>Tamil Lexicon - Vol-I, IV, VI,</u>**
University of Madras,
Published - 1982.

**சேதுப்பிள்ளை, ஆர்.பி.** - <u>சிலப்பதிகார நூல் நயம்,</u>
ஒற்றுமை ஆபிஸ்,
சென்னை,
முதற்பதிப்பு - 1927.

**சொக்கலிங்கம், சு.ந.** - <u>தாயுமானவர் பாடற்தொகுப்பு,</u>
பழனியப்பா பிரதர்ஸ்,
கோனார் மாளிகை,
சென்னை - 600014.
முதற்பதிப்பு - 2002.

**சோமசுந்தரனார், பொ.வே. (உ.ஆ.)** - <u>புறப்பொருள் வெண்பாமாலை,</u>
கழக வெளியீடு,
சென்னை - 600 018.
பதினொன்றாம் பதிப்பு - 1997.

**சோமசுந்தரனார், பொ.வே. (உ.ஆ.)** - <u>**பெருங்கதை,**</u>
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
சென்னை - 600 018.
பதிப்பாண்டு - 1963

**தமிழ்ப்பிரியன் (உ.ஆ.)** - <u>**சித்தர் பாடல்கள்,**</u>
கற்பகம் புத்தகாலயம்,
சென்னை - 600 017.
முதற்பதிப்பு - 2016.

**தமிழ்ப்பிரியன் (வி.உ.)** - <u>**ஔவைக்குறள்,**</u>
அருணா பப்ளிகேசன்ஸ்,
சென்னை,
முதற்பதிப்பு - 2013.

**திருவள்ளுவர்**
**(பரிமேலழகர் உரை)** - <u>**திருக்குறள்,**</u>
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
சென்னை - 600 018.
புதிய பதிப்பு - 2007.

**துரைசாமி பிள்ளை, சு. (உ.ஆ.)** - <u>**யசோதர காவியம்,**</u>
கழக வெளியீடு,
சென்னை - 600 018.
பதிப்பாண்டு - 1970.

**துறைமங்கலம் சிவபிரகாச**
**சுவாமிகள்** - <u>**நன்னெறி,**</u>
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
சென்னை - 600 018.
மறுபதிப்பு - 1996.

**தொல்காப்பியர் (இளம்பூரணர் உரை),** - <u>தொல்காப்பியம் (எழுத்ததிகாரம்),</u>
கழக வெளியீடு,
சென்னை - 600 018.
மறுபதிப்பு - 1998.

**தொல்காப்பியர் (இளம்பூரணர் உரை),** - <u>தொல்காப்பியம் (பொருளதிகாரம் - தொகுதி - I, II),</u>
கழக வெளியீடு,
சென்னை - 600 018.
மறுபதிப்பு - 1997.

**தொல்காப்பியர் (சேனாவரையர் உரை),** - <u>தொல்காப்பியம் (சொல்லதிகாரம்),</u>
கழக வெளியீடு,
சென்னை - 600 018.
ஏழாவது பதிப்பு - 1986.

**நடராஜன், பி.ஏ. (உ.ஆ.)** - <u>திருவிளையாடற் புராணம்,</u>
சாரதா பதிப்பகம்,
சென்னை - 600 014.
முதற்பதிப்பு - 2005.

**நடராசன், பி.ரா. (உ.ஆ.)** - <u>திருவாசகம்,</u>
உமா பதிப்பகம்,
சென்னை - 600 001.
முதற்பதிப்பு - 2007.

**நடராசன், பி.ரா. (உ.ஆ.)** - <u>பெரியபுராணம்,</u>
உமா பதிப்பகம்,
சென்னை - 600 001.
இரண்டாம் பதிப்பு - 2008.

**நடராசன், பி.ரா. (உ.ஆ.)** - <u>தேவாரம் (தொகுதி - I, II, III),</u>
உமா பதிப்பகம்,
சென்னை - 600 001.
இரண்டாம் பதிப்பு - 2008.

**நச்சினார்க்கினியர் (உ.ஆ.)** - <u>தொல்காப்பியம் - பொருளதிகாரம் (அகம், புறம்),</u>
கழக வெளியீடு,
சென்னை - 600 001.
பதிப்பாண்டு - 1963.

**நாராயணவேலுப்பிள்ளை, M. (உ.ஆ.)** - <u>நம்பியகப்பொருள்,</u>
முல்லை நிலையம்,
சென்னை - 600 017.
இரண்டாம்பதிப்பு - 1997.

**பாரதியார்** - <u>பாரதியார் கவிதைகள்,</u>
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 600 008.
செம்பதிப்பு - 1996.

**பாரதிதாசன்** - <u>குடும்ப விளக்கு,</u>
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 600 008.
மறுபதிப்பு - 1996.

**பாரதிதாசன்** - <u>பாரதிதாசன் கவிதைகள்,</u>
உமா பதிப்பகம்,
சென்னை - 600 001.
ஐந்தாம் பதிப்பு - 2009.

பாரதிதாசன் - **பாண்டியன் பரிசு,**
மதுரை தமிழ் இலக்கிய மின்
தொகுப்புத் திட்டம்,
முதற்பதிப்பு - 2000.

பாலகிருஷ்ணன், பி. - **பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் பாடல்கள்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி.),
அம்பத்தூர்,
பதினான்காம் பதிப்பு - 2003.

பாலசுந்தரம்பிள்ளை, தி.சு. - **நாலடியார்,**
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
சென்னை - 600 018.
மறுபதிப்பு - 2007.

புலியூர்கேசிகன் (தெ.உ) - **சிலப்பதிகாரம்,**
பாரிநிலையம்,
சென்னை - 600 008.
பதிப்பாண்டு - 2009.

மாணிக்கனார், வ.சுப. (உ.ஆ.) - **நல்வழி,**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 600 008.
நான்காம் பதிப்பு - 2010.

மாணிக்கனார், வ.சுப. (உ.ஆ.) - **மூதுரை,**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 600 008.
நான்காம் பதிப்பு - 2010.

**மாணிக்கவாசகன், ஞா. (உ.ஆ.)** - <u>சீவகசிந்தாமணி (பாகம் 1, 2, 3)</u>
உமா பதிப்பகம்,
சென்னை - 600 001.
முதற்பதிப்பு - 2007.

**மாணிக்கவாசகன், ஞா. (உ.ஆ.)** - <u>திருமந்திரம்,</u>
உமா பதிப்பகம்,
சென்னை - 600 001.
ஆறாம்பதிப்பு - 2011.

**முருகேசன், சி.எஸ்.** - <u>பட்டினத்தார் பாடல்கள்,</u>
சங்கர் பதிப்பகம்,
சென்னை - 600 047.
முதற்பதிப்பு - 2004.

**மெய்யப்பன், ச. (ப.ஆ.)** - <u>நீதிநூல்,</u>
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 600 008.
நான்காம் பதிப்பு - 2010.

**வெங்கடாசலபதி, மு. (தொ.உ.)** - <u>திருவருட்பா,</u>
பாவை பப்ளிக்கேஷன்ஸ்,
சென்னை - 600 014.
முதற்பதிப்பு - 2000.

**வேங்கடசாமிநாட்டார், ந.மு. (உ.ஆ.)** - <u>மணிமேகலை,</u>
**துரைசாமிப்பிள்ளை, சு. (உ.ஆ.)**
சாரதா பதிப்பகம்,
சென்னை - 600 014.
இரண்டாம் பதிப்பு - 2009.

ராகுல் சாங்கிருத்யாயன் - <u>இந்துத் தத்துவ இயல்,</u>
நியூ செஞ்சுரிபுக் ஹவுஸ் (பி) லிமிட்,
சென்னை - 600 098.
இரண்டாம் பதிப்பு - 2003.

ராகுல் சாங்கிருத்யாயன் - <u>பௌத்தத் தத்துவ இயல்,</u>
நியூ செஞ்சுரிபுக் ஹவுஸ் (பி) லிமிட்,
சென்னை - 600 098.
இரண்டாம் பதிப்பு - 2003.

ராமசுப்பிரமணிய சர்மா
பொன்னம்மாள், ஆர். (உ.ஆ.) - <u>நாலாயிர திவ்விய பிரபந்தம் (தொகுதி - 1, 2, 3, 4),</u>
கங்கை புத்தக நிலையம்,
சென்னை - 600 017.
நான்காம் பதிப்பு - 2011.

## எம்.பில்., ஆய்வேடு

அழகம்மை, கு.ப. - <u>அகநானூற்றில் வாழ்வியல் நீதிகள்,</u>
அறிஞர் அண்ணா அரசினர்
கலைக்கல்லூரி,
ஆத்தூர், டிசம்பர் - 1987.

சுதா. ப. - <u>இரட்டைக் காப்பியங்களில் நிலையாமை - ஓர் ஆய்வு,</u>
தமிழ்த்துறை,
இராணிமேரி கல்லூரி (தன்னாட்சி),
சென்னை - 600 004.
அக்டோபர் - 2002.

**பிஎச்.டி., ஆய்வேடு**

**அனுராதா, இரா.** - **<u>சங்க இலக்கியங்களில் அறக்கருத்துக்கள் - ஓர் ஆய்வு,</u>** முனைவர்பட்ட ஆய்வேடு, சென்னைப் பல்லைக்கழகம், மே - 2004.

**இணையதளம்**

**விக்கிப்பீடியா**

# சங்க இலக்கியங்கள் காட்டும் நிலையாமை - ஓர் ஆய்வு

முனைவர் பட்டத்திற்காக (**Ph.D.,)** பெரியார் பல்கலைக்கழகத்திற்கு

அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**மா. தனம்**

பதிவு எண் : PU/COE/RD4/Ph.D./1172/2014

பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வாளர்

அரசு கலைக்கல்லூரி,

தருமபுரி - 636705.

நெறியாளர்

**முனைவர் தோ.சி. தங்கபாண்டியன்,**

**எம்.ஏ., எம்.எட்., எம்.ஃபில்., பிஎச்.டி.,**

இணைப்பேராசிரியர் (ஓய்வு),

அரசு கலைக்கல்லூரி,

தருமபுரி - 636705.





தமிழ்த்துறை,

அரசு கலைக்கல்லூரி.

தருமபுரி - 636 705.


நவம்பர் - 2019

# முடிவுரை

பழந்தமிழர்கள் தங்கள் பேச்சிலும் எழுத்திலும் நிலையாமைக் கோட்பாட்டை ஆங்காங்கே வெளிப்படுத்தி வந்தார்கள். நாம் வாழும் இந்த உலகினைப் பற்றி எண்ணுகையில் உலக நிலையாமையையும் அதில் வாழும் உயிரினங்களைப் பற்றி சிந்திக்கின்ற காலத்தே உயர்ந்தனவாகக் கருதப்படும் மானிடப் பிறவியான யாக்கையை 'நிலையாமை' எனக் குறிப்பிட்டனர். யாக்கையின் கால அளவினை வரையறுக்க இயலாத நிலையினை அறிந்தனர். அவ்வுடல் குறிப்பிட்ட கால அளவு வரை இளமையுடன் இருந்து, பின்பு முதுமை அடைவதை அறிந்து இளமை நிலையாமை என்று யாக்கையின் ஒரு காலக்கட்டத்தில் உள்ள நிலையைப் பற்றி எழுதினார்கள். அந்த இளமையில்தான் இன்பம் காண இயலும். அதற்கு அழகு துணைபுரியவேண்டும் என கருத்தில் கொண்டு இன்பம், அழகு என வகைப்படுத்திய சங்ககால மக்கள், இவற்றைத் துய்க்கச் செல்வம் தேவையென உணர்ந்தனர்.

நிலையாமை பற்றிய உணர்வு சங்க காலத்தில் அரும்பாகி, காப்பிய காலம், சங்கம் மருவிய காலம் ஆகிய காலங்களில் நிலைபெற்று, பக்தி இலக்கிய காலத்தில் வலிமை பெற்று வேரூன்றி இருந்தாலும், சிற்றிலக்கியங்களில் நிலையாமை பற்றிய எண்ணம் வலுப்பெறவில்லை. ஆனால் நிலையாமை பற்றிய எண்ணம் இக்காலத்தில் பெரும்பாலோர் ஊழ், பிறவி, மறுமை, வினை, இறை இவைகளைப் பற்றிய எண்ணங்களைத் தவறாக கேலிக்குரிய ஒன்றாக எண்ணுகின்றனர். அதனால், புலனடக்கமின்றி நிலையாமை உணர்வு குறைந்து எந்தவித நியாயமான மன அச்சமின்றி வாழ்வதால் சமுதாயச் சீர்கேடுகள் நிகழ்கின்றன. மனிதனைத் தொல்லைப்படுத்தும் நோய்கள் மலிகின்றன. மனிதனை

அச்சப்படுத்தும் இந்த நோய்களைக் கண்டு நிலையாமை உணராதவன் மிகவும் அஞ்சுகின்ற நிலை ஏற்படுகின்றது.

இக்காலம் இயந்திரயுகக் காலம் எனலாம். இன்று மக்கள் மனம் மனச்சோர்வு, மனவு அதிர்வு, மன உளைச்சல், மனமுறிவு, மன இறுக்கம் இவற்றை அடைகின்றனர். இவற்றின் காரணமாக மக்கள் ஜனத்தொகையில் சிறுபான்மையினர் தொல்லைகளுக்குள்ளாகின்றனர். இதனால் மனம் மிகவும் பாதிக்கப்பட்டுத் துன்புறுகின்றனர். குழந்தைப் பருவத்திலேயே மனதை ஒழுங்குபடுத்தினால் தீயவன் நல்லவனாவான். வீட்டிலும் பெற்றோர், குழந்தைகளுக்கிடையில் விட்டுக்கொடுக்கும் மனப்பாங்கு ஏற்பட வாய்ப்புண்டு. தியாகம், பொதுநலம், நாட்டுப்பற்று போன்ற நற்பண்புகள் உருவாகும். இன்றைய சூழ்நிலையில் செல்வத்தின் செல்வாக்கு அதிகமாக உள்ளதால் இலக்கியங்களும் செல்வத்தை நேர்வழியில் ஈட்டுமாறு கூறுகின்றனர். இவ்வாறு இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, உலகம் நிலையாமை என்ற நிலையாமையை நான்காகக் கூறியுள்ள தன்மையைக்கூறி, இளமை உள்ளபோதே இன்பம் நுகர்ந்து, யாக்கை உள்ளபோதே செல்வத்தைக் கொண்டு உலகில் நல்ல அறங்களை இயற்றி நிலையான புகழைபெற நிலையாமையை சங்க இலக்கியங்கள் வலியுறுத்தியுள்ளன.

சங்க காலத்தில் மனிதன் மனதில் இன்ப உணர்வு மேலோங்கி வளர்ந்திருந்தது. வாழ்க்கையில் இன்பங்களை அனுபவித்து அதன் சுகத்திலே மூழ்கி அவன் இன்பம் துய்த்தான். அப்பொழுது, அவன் மனதில் நிலையாமை என்பது ஏதோ ஒரு மூலையில் இருந்ததே தவிர அவன் அதை வாழ்க்கையின் பகுதி என்று ஏற்காமல் இருந்தான். எனவேதான் சங்க படைப்புகளில் முழுமையாக

இல்லாமல் அங்கொன்றும் இங்கொன்றுமாக நிலையாமைக் கருத்துக்கள் காணப்படுகின்றன.

வாழ்க்கையில் மனிதனின் உணர்வுகள் முன்னேற முன்னேற அவனுடைய செயல்களில் பலமாற்றங்கள் ஏற்படத் தொடங்கின. அவன் செயல்களில் வாழ்க்கை நடைமுறைகளில் ஒழுக்கங்கள் சீர்குலையத் தொடங்கின. இளமை, யாக்கை, செல்வம், உலகம் போன்றவற்றில் அவனுக்குப் பற்றுதல் வலுவடைந்தது. அதனைத் தன் வயப்படுத்த எண்ணிப் பல தவறுகளைச் செய்யத் தொடங்கினர். அவனின் இவ்வுணர்வுகள் தவறு என்பதை அறிவில் சிறந்தோர் உணர்த்த விழைந்து தம்முடைய படைப்புகளில் அறிவுரைகளை வழங்கும் விதமாக மேற்கூறிய நான்கு நிலையாமைகளையும் கூறத் தொடங்கினர்.

இளமை நிலையாமையை உணர்வதால் ஆணையும் பெண்ணையும் அழகுப்பொருளாக எண்ணும் நோக்கம் மாறி ஆணும் பெண்ணும் சமமென எண்ணும் நிலை உருவாகும்.

யாக்கை நிலையாமையை உணர்வதால் பிறப்பின் நிலை உணர்ந்து, முதுமை வருவதற்கு முன்பே கடமைகளை செய்துமுடிக்கும் நிலைமையும் இழப்பிற்கும், இறப்பிற்கும் வருந்தாதநிலையும், பந்தம், பாசம் துறந்து பேரானந்த நிலையும் கிட்டும்.

செல்வம் நிலையாமையை உணர்வதால் ஈகை, கொடை, தானம், தருமம் இவை நாட்டில் மலிந்து இல்லை என்பதே இல்லையென்றாகிவிடும் நிலை செல்வநிலையாமையை உணர்வதால் ஏற்படும்.

உலக நிலையாமையை உணர்வதால் நிலையாமையில் நிலைத்தது புகழ், வீடுபேறு என்பதை உணர்ந்து ஆத்மா அமைதிபெறும் நிலை கிடைக்கும்.

மனிதர்கள் கூடி வாழ்கின்ற உலகம் நிலையாமையின் பாற்பட்டது. அவ்வாறே உலகில் இருக்கின்ற இயற்கைப் பொருள்கள் உயிர்கள் மனிதனால் படைக்கப்பட்ட பொருள்கள் அனைத்தும் காலத்தால் அழியும் இயல்புடையன. அதனால் பூவுலகில் வாழ்கின்ற மக்கள் நிலையாமை என்னும் சிந்தனையை மனத்தில் கொண்டு நல்லறங்களை கடைபிடிக்க வேண்டும்.

இலக்கியங்கள் அனைத்தும் இவ்வுலகம், இவ்வுலகில் தோன்றும் பொருள்கள் நிலையானவையல்ல என்று கூறுகின்றனர். எனவே, நிலையில்லாதவைகளைக் கொண்டு நிலையானவைகளைச் செய்வாயாக! செல்வத்தைக் கொண்டு வறியவர்க்கு ஈவாயாக! அழியும் உடல்கொண்டு அழியா அறம் செய்க! என்று கூறிப் புகழை நிலைத்த ஒன்றாகக் காட்டுகின்றன.